# சங்கப் புறப்பாடல்களில் இயற்கை

சென்னைப் பல்கலைக்கழக
முனைவர் (பிஎச்.டி.,) பட்டத்திற்காக
அளிக்கப்பெற்ற ஆய்வேடு


ஆய்வாளர்
**கோ. வேலு** எம்.ஏ., எம்.எட்., எம்.ஃபில்.,
முதுநிலைத் தமிழ் விரிவுரையாளர்
மாநிலக்கல்லூரி (தன்னாட்சி)
சென்னை - 600 005.

நெறியாளர்
முனைவர் **ப. மகாலிங்கம்,** எம்.ஏ., எம்.ஃபில்., பிஎச்.டி.,
தமிழ் இணைப்பேராசிரியர்
மாநிலக் கல்லூரி (தன்னாட்சி)
சென்னை - 600 005.



தமிழ்த்துறை
மாநிலக் கல்லூரி (தன்னாட்சி)
சென்னை - 600 005.

மே - 2006

**முனைவர் மு. ஹம்சா,** எம்.ஏ.,(தமிழ்) எம்.ஏ.,(ஆங்கிலம்) எம்.ஃபில்., பிஎச்.டி.,
தமிழ்த்துறைத் தலைவர்
மாநிலக் கல்லூரி (தன்னாட்சி),
சென்னை – 600 005.

# துறைத்தலைவர் சான்றிதழ்

**திரு கோ. வேலு** அவர்கள் சென்னை மாநிலக் கல்லூரி (தன்னாட்சி) தமிழ்த்துறையில் பகுதிநேர ஆய்வாளராகச் சென்னைப் பல்கலைக் கழகத்தில் முனைவர் பட்டத்திற்குச் **'சங்கப் புறப்பாடல்களில் இயற்கை'** என்னும் தலைப்பில் ஆய்வு செய்து இந்த ஆய்வேட்டினை எழுதி அளித்துள்ளார். இந்த ஆய்வேடு இதற்கு முன் வேறு எந்தப் பட்டத்திற்கோ, ஆய்வரங்கிற்கோ அனுப்பப்பெறவில்லை என்று சான்றளிக்கிறேன்.

(மு. ஹம்சா)
தமிழ்த் துறைத்தலைவர்

Dr. M. HAMSA, M.A(Tam.)., M.A.,(Eng.).,M.Phil., Ph.D.,
HEAD OF THE DEPARTMENT OF TAMILOLOGY
PRESIDENCY COLLEGE
Chennai-600 005
Mobile:9444272093

இடம் : சென்னை–600 005.
நாள் : 31.05.2006

**முனைவர் ப. மகாலிங்கம்,** எம்.ஏ., எம்.ஃபில்., பிஎச்.டி.,
இணைப் பேராசிரியர்,
தமிழ்த்துறை,
மாநிலக் கல்லூரி (தன்னாட்சி),
சென்னை – 600 005.

# நெறியாளர் சான்றிதழ்

**திரு கோ. வேலு** அவர்கள் பகுதிநேர ஆய்வாளராகச் **'சங்கப் புறப்பாடல்களில் இயற்கை'** என்னும் தலைப்பில் ஆய்வு மேற்கொண்டு எழுதியுள்ள முனைவர் பட்ட ஆய்வேடு, சென்னை மாநிலக் கல்லூரி (தன்னாட்சி) தமிழ்த்துறையில், என் மேற்பார்வையில் நிகழ்த்தப்பெற்ற ஆய்வின் வடிவாக்கமாகும். இந்த ஆய்வேடு இதற்கு முன் வேறு எந்தப் பட்டத்திற்கோ, ஆய்வரங்கிற்கோ அனுப்பப்பெறவில்லை என்று சான்றளிக்கிறேன்.

**(ப. மகாலிங்கம்)**
நெறியாளர்

முனைவர் ப.மகாலிங்கம், பிஎச்.டி.
தமிழ் இணைப்பேராசிரியர்
மாநிலக் கல்லூரி (தன்னாட்சி)
சென்னை - 600 005

இடம் : சென்னை–600 005.
நாள் : 31.05.2006

**கோ. வேலு,** எம்.ஏ., எம்.எட்., எம்.ஃபில்.,
முதுநிலை விரிவுரையாளர்,
தமிழ்த்துறை,
மாநிலக் கல்லூரி (தன்னாட்சி),
சென்னை – 600 005.

# ஆய்வாளர் உறுதிமொழி

**'சங்கப் புறப்பாடல்களில் இயற்கை'** என்னும் தலைப்பில் முனைவர் பட்டத்திற்காகச் சென்னைப் பல்கலைக்கழகத்திற்கு அளிக்கப்பெறும் இந்த ஆய்வேடு என் சொந்த முயற்சியில் உருவானது என்றும் இந்த ஆய்வேடு இதற்கு முன் வேறு எந்தப் பட்டத்திற்கோ, ஆய்வரங்கிற்கோ அளிக்கப்பெறவில்லை என்றும் உறுதியளிக்கிறேன்.

**(கோ. வேலு)**
ஆய்வாளர்

இடம் : சென்னை–600 005.
நாள் : 31.05.2006

# நன்றியுரை

**'சங்கப் புறப்பாடல்களில் இயற்கை'** என்னும் தலைப்பில் ஆய்வு செய்ய அனுமதித்த சென்னைப் பல்கலைக்கழகத்திற்கும், என்னை ஆய்வு மாணவராக ஏற்றுக் கொண்ட சென்னை, மாநிலக்கல்லூரி (தன்னாட்சி) முதல்வர் அவர்களுக்கும் நன்றியை உரித்தாக்குகிறேன்.

தாயினும் சாலப் பரிந்து நாள்தோறும் பல்வகையானும் நெறிப்படுத்தி இந்த ஆய்வேடு சிறப்புற அமைய எல்லா வகையிலும் துணைநிற்கும் ஆய்வு நெறியாளர் **'மனிதநேயச்செம்மல்'** பேராசிரியர் முனைவர் **ப. மகாலிங்கம்** அவர்களுக்கு என்றென்றும் நன்றியும் கடப்பாடும் உடையேன் ஆவேன்.

தந்தை நெறிநின்று ஆய்வுக்களம் வகுத்துத்தந்த **'ஆய்வுச்செம்மல்'** பேராசிரியர் முனைவர் **மு. சுதந்திரமுத்து** அவர்களுக்கு இதயம் கனிந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஆய்வுப் பணியில் அருகிலிருந்து உதவி புரிந்த நண்பர்களும் பேராசிரியர்களுமாக விளங்கும் முன்னாள் துறைத்தலைவர் பேராசிரியர் **ச. சுந்தரவல்லி,** இந்நாள் துறைத்தலைவர் முனைவர் **மு. ஹம்சா,** முனைவர் **செ. சுப்பிரமணியன்,** முனைவர் **பெ. அர்த்தநாரீசுவரன்,** முனைவர் **பா. உதயகுமார்,** முனைவர் **இரா. கண்ணன்,** முனைவர் **ப. தாமரைக்கண்ணன்,** பேராசிரியர் **ச. அந்தோணி டேவிட்நாதன்,** பேராசிரியா **க. சேக்மீரான்,** பேராசிரியர் **ஏ.ஜம்புலிங்கம்,** பேராசிரியர் **கோ.கிருஷ்ணன்,** முனைவர் **க. சேகர்,** முனைவர் **ஜே.ஆர்.இலட்சுமி,** முனைவர் **இரா. சீனிவாசன்,** முனைவர் **பாக்யமேரி** ஆகியோருக்கு மனமுவந்த நன்றிகள் பல.

ஆய்வுக்கு உறுதுணைபுரிந்த பச்சையப்பன் கல்லூரிப் பேராசிரியர்கள் முனைவர் **மா.ரா. அரசு,** முனைவர் **இராம. குருநாதன்,** முனைவர் **ச. வளவன்,** முனைவர் **மு. தங்கராசு** ஆகியோருக்கு நெஞ்சம் நிறைந்த நன்றிகள்.

இந்த ஆய்வுக்குப் பயன்பட்ட மாநிலக் கல்லூரித் தமிழ்த்துறை நூலகம், சென்னைப் பல்கலைக்கழக நூலகம், மறைமலையடிகள் நூலகம், உலகத் தமிழாராய்ச்சி நிறுவன நூலகம், தேவநேயப் பாவாணர் நூலகம், கன்னிமாரா நூலகம் உள்ளிட்ட நூலகங்களின் நூலகர்களுக்கு என் மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

ஆய்வேட்டினைச் செம்மையுறக் கணினிமூலம் அழகிய முறையில் வடிவமைப்புச் செய்து கொடுத்த நண்பர் **'டுடே கிராஃபிக்ஸ்' திரு ஆர். பாபு** மற்றும் **திருமதி ஜி. ஆனந்தி** ஆகியோருக்கு இதயம் நிறைந்த நன்றி கூறி மகிழ்கிறேன்.

நெஞ்சம் நிறைந்த நன்றியுடன்,

**கோ.வேலு**

# சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | | |
|---|---|---|
| அகம். | : | அகநானூறு |
| இளம். | : | இளம்பூரணர் |
| உரை. | : | உரையாசிரியர் |
| எழுத்து. | : | எழுத்ததிகாரம் |
| ஐங்கு. | : | ஐங்குறுநூறு |
| கலி. | : | கலித்தொகை |
| குறள். | : | திருக்குறள் |
| குறிஞ்சி. | : | குறிஞ்சிப்பாட்டு |
| குறுந். | : | குறுந்தொகை |
| சிலம்பு. | : | சிலப்பதிகாரம் |
| சிறுபாண். | : | சிறுபாணாற்றுப்படை |
| சீவக. | : | சீவக சிந்தாமணி |
| சொல். | : | சொல்லதிகாரம் |
| தொகு. | : | தொகுப்பாசிரியர் |
| தொல். பொருள். அகத். | : | தொல்காப்பியம், பொருளதிகாரம், அகத்திணையியல் |
| தொல். பொருள். புறத். | : | தொல்காப்பியம், பொருளதிகாரம், புறத்திணையியல் |
| நச்சர். | : | நச்சினார்க்கினியர் |
| நற்றி. | : | நற்றிணை |
| நூ.எ | : | நூற்பா எண் |
| நெடுநல். | : | நெடுநல்வாடை |
| ப. | : | பக்கம் |

| | | |
|---|---|---|
| பக். | : | பக்கங்கள் |
| பட்டின. | : | பட்டினப்பாலை |
| பதி. | : | பதிப்பாசிரியர் |
| பதிற்று. | : | பதிற்றுப்பத்து |
| பரி. | : | பரிபாடல் |
| புறம். | : | புறநானூறு |
| பெரும்பாண். | : | பெரும்பாணாற்றுப்படை |
| பொருந. | : | பொருநராற்றுப்படை |
| மணி. | : | மணிமேகலை |
| மதுரை. | : | மதுரைக்காஞ்சி |
| மலைபடு. | : | மலைபடுகடாம் |
| மு.வ. | : | மு. வரதராசன் |
| முல்லை. | : | முல்லைப்பாட்டு |
| முருகு. | : | திருமுருகாற்றுப்படை |
| மொ. | : | மொழிபெயர்ப்பு நூல் |
| மேற்படி. | : | மேற் குறிப்பிட்ட நூல் |
| Ibid. | : | Ibidem |
| P. | : | page |
| PP. | : | pages |

# பொருளடக்கம்

# முன்னுரை

இலக்கியம் வாழ்க்கையின் எதிரொலி; சமுதாயத்தின் வளர்ச்சியைக் காட்டும் மைல்கல்; மனித இலட்சியத்தின் உயிர்நாடி என்று கூறுவர். சங்க இலக்கியம் தமிழரின் வாழ்க்கை நோக்கங்களை உணர்த்தும் மிகப்பெரிய கண்ணாடி. சங்க கால மக்கள் காதலையும் வீரத்தையும் தம் இரு கண்களாகப் போற்றினர். சங்க காலத்தில் தோன்றிய இலக்கிய நூல்களைக் கருத்தியல் அடிப்படையில் அகம், புறம் என இருபெரும் பகுதிகளாகப் பிரிக்கலாம். அவற்றில் மனித மனத்தின் பேராற்றல்களாகிய காதல், வீரம் ஆகிய இரண்டனையும் ஊடுருவிப் பாய்ந்து, பரந்து கிடக்கச் செய்யும் அளவிற்கு இயற்கையிடத்து அவர்கள் எல்லையற்ற காதல் கொண்டிருந்தனர்.

பண்டைத் தமிழ்ச் சான்றோர் இயற்கையைத் தனியொரு பொருளாகக் கருதிப் பாடினார் அல்லர். காதல், வீரம் என்பவற்றைத் தலைமைக் கூறுகளாகக் கொண்டு பிற கூறுகளையும் துணையாகப் பெற்றுள்ளது மனித வாழ்க்கை. அத்தகைய மனித வாழ்க்கையின் பல்வேறு கூறுகளையும் வருணித்துத் தெளிவுபடுத்துவற்காகவே பண்டைய தமிழ்ச் சான்றோர் இயற்கையைப் பயன்படுத்தினர்.

அக ஒழுக்கங்களை வெளிப்படுத்த எவ்வாறு இயற்கை பின்னணியாக உள்ளதோ அது போன்றே புறத்தை வெளிப்படுத்துவதிலும் இயற்கை பின்னணியாக உள்ளது. ஆனால் இயற்கைப் பின்னணியில் புறம் என்பதைப் பற்றி இதுவரையில் எவரும் ஆய்வு மேற்கொள்ளவில்லை. ஆகவே, அது குறித்த ஆய்வு மேற்கொள்ள வேண்டியுள்ளதால் "சங்கப் புறப்பாடல்களில் இயற்கை" என்ற தலைப்பில் ஆய்வு நிகழ்த்தப்பெற்றுள்ளது.

## ஆய்வுத் தலைப்பினைத் தேர்ந்தமைக்கான காரணம்

தமிழர் வாழ்வு இயற்கையோடு இயைந்த சிறப்பினை உடையது. அதனால் தமிழர் படைத்த இலக்கியங்களும் இயற்கையைப் பின்னணியாகக் கொண்டிருப்பதில் வியப்பொன்றும் இல்லை. தமிழர் வாழ்க்கை அகமாயினும் புறமாயினும் அது இயற்கையைத் தவிர்த்து அமையவில்லை என்பது கண்கூடு. என்றாலும், தமிழில் இயற்கை நுகர்வை மையப்படுத்திய ஆய்வுகள் பெரும்பாலும், அகப்பாடல்களை ஆய்வுக் களமாகக் கொண்டிருந்தனவே அன்றிப் புறப்பாடல்களைப் பெரிதும் நாடவில்லை. குறிப்பாகப் புற இலக்கியங்களில் பின்புலமாக உள்ள இயற்கைப் பின்னணி குறித்து முழுமையாக ஆய்வு மேற்கொள்ள இதுவரை எவரும் முயலவில்லை. இந்நிலையை உற்றுநோக்கிய ஆய்வாளருக்குப் புறப்பாடல்களில் இயற்கைப் பின்புலத்தை வெளிக்கொணரும் விழைவு ஏற்பட்டது. புற இலக்கியங்கள் இயற்கைக் களங்களில் ஊடுருவியுள்ள பான்மையினை ஆய்வு செய்து தமிழ் கூறும் நல்லுலகிற்கு அதன் சிறப்பினை உணர்த்த வேண்டும் என்கிற எண்ணம் வலுவடைந்தது. அதன் காரணமாகவே சங்கப் புறப்பாடல்களில் இயற்கையின் பங்களிப்பினை அறிய வேண்டும் என்பதை நோக்கமாகக் கொண்டு இந்த ஆய்வு மேற்கொள்ளப்பெற்றுள்ளது.

## ஆய்வு எல்லை

சங்க இலக்கியத்தில் திணை அடிப்படையில் குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை ஆகிய ஐந்து திணைகளை முறையே முனைவர் நா.ஆடியபாதம், முனைவர் ஐ.அண்ணாமலை, முனைவர் வெ.தெ.மாணிக்கம், முனைவர் தி. முத்துக்கண்ணப்பன், முனைவர் இரா.கு.நாகு ஆகியோர் ஆய்வு செய்துள்ளனர். இயற்கையை மையப்படுத்திப் ‘பழந்தமிழ் இலக்கியத்தில் இயற்கை’ என்னும் தலைப்பில் முனைவர் மு.வரதராசன்

ஆய்வு செய்துள்ளார். அதில் பெருமளவு அகப்பாடல்களையே முதன்மைப்படுத்தி ஆய்வு மேற்கொண்டுள்ளார். மேலும் முனைவர் அன்னி மிருதுலகுமாரி தாமசு 'பரிபாடலில் இயற்கை' என்னும் தலைப்பில் முழுமையான ஆய்வு செய்துள்ளார். இந்நிலையில் சங்கப் புறப்பாடல்களில் இயற்கை என்னும் தலைப்பினில் அமைந்த இந்த ஆய்வினில் எட்டுத்தொகையில் பதிற்றுப்பத்து, புறநானூறு ஆகிய இரு நூல்களும், பத்துப்பாட்டில் திருமுருகாற்றுப்படை, பொருநராற்றுப்படை, சிறுபாணாற்றுப்படை, பெரும்பாணாற்றுப்படை, மலைபடுகடாம் (கூத்தராற்றுப்படை), மதுரைக்காஞ்சி ஆகிய ஆறு நூல்களும் ஆக மொத்தம் எட்டு நூல்களும் ஆய்வு எல்லையாகக் கொள்ளப்பெற்றுள்ளன.

**ஆய்வு நோக்கம்**

சங்கப் புறப்பாடல்களில் அமைந்துள்ள இயற்கை நுட்பங்களை ஆய்ந்து காணுவதே இந்த ஆய்வின் அடிப்படை நோக்கமாகும். இயற்கையோடு இரண்டறக் கலந்த மனிதன் தான் படைக்கும் இலக்கியங்களில் இயற்கைக் களங்களை எங்ஙனம் பதிவு செய்து வைத்துள்ளான் என்பதை அறிவதும் இந்த ஆய்வின் நோக்கமாக உள்ளது. மேலும், மனிதம் கலந்த அறிவியல் பார்வையோடு பண்டைத்தமிழர் இயற்கையை எவ்விதம் அணுகினர் என்பதை இனம் காண்பதும் ஆய்வின் நோக்கம் எனலாம்.

**ஆய்வு அணுகுமுறைகள்**

சங்கப் புறப்பாடல்களில் உள்ள இயற்கையின் தாக்கத்தைக் கண்டறிய விழையும் பகுப்பாய்வு முறை இந்த ஆய்வேட்டினில் மேற்கொள்ளப்பெற்றுள்ளது. மேலும், புறப்பாடல்களில் பொதிந்துள்ள இயற்கைக் கூறுகளை மதிப்பிடும் நோக்கில் விளக்கமுறை, அறிவாராய்ச்சி முறை ஆகிய அணுகுமுறைகள் பின்பற்றப்பெற்றுள்ளன.

**ஆய்வேட்டின் அமைப்பு**

**'சங்கப் புறப்பாடல்களில் இயற்கை'** என்னும் இந்த ஆய்வு முன்னுரை நிறைவுரை நீங்கலாக ஐந்து இயல்களைக் கொண்டுள்ளது. ஆய்வேட்டின் அமைப்பானது,

முன்னுரை,

1. சங்க இலக்கியத்தில் இயற்கைப் பயன்பாடு,
2. இட வருணனை,
3. பயிரினமும் உயிரினமும்,
4. உவமையில் இயற்கை,
5. இயற்கையோடு இயைந்த வாழ்வியல்,

நிறைவுரை

என அமைகிறது.

**'சங்க இலக்கியத்தில் இயற்கைப் பயன்பாடு'** என்னும் முதல் இயலில் இயற்கைப் பொருள்கள், இயற்கைப் பொருள்கள் பற்றிய விளக்கங்கள், இயற்கையின் இன்றியமையாமை, இயற்கைப் பயன்பாட்டில் அகத்திணை, புறத்திணை வேறுபாடுகள், இயற்கையின் பெயரால் நூல்களும் உள் தலைப்புகளும் அமைந்த பாங்கு, பிற்கால இலக்கியங்களில் இயற்கையின் தாக்கம் ஆகியன ஆராயப்பெற்றுள்ளன.

இரண்டாவதாக அமைந்துள்ள **'இட வருணனை'** என்னும் இயலில் உலகம், ஐவகை நிலங்களின் தோற்றம், தமிழ்நாட்டின் எல்லை, ஆற்றுப்படை இலக்கியங்களால் அறியலாகும் ஐவகை இட(நில) வருணனை, ஐந்திணைமக்கள் வழிப்போக்கர்களாகிய இரவலர்களுக்கு வழங்கும் விருந்தோம்பல், அரசரின் விருந்தோம்பலும் கொடையும், புறப்பாடல்களில் காணலாகும்; மலைகள், ஆறுகள் ஆகிய செய்திகள் குறித்து ஆயப்பெற்றுள்ளன.

**'பயிரினமும் உயிரினமும்'** என்னும் மூன்றாம் இயல், பயிரினமாகிய தாவரங்கள் பற்றியும் உயிரினங்களில் அடங்கும் நீர்வாழ்வன, ஊர்வன, பறப்பன, விலங்குகள் ஆகியன குறித்தும் விளக்கமாக ஆய்கிறது.

நான்காம் இயலான **'உவமையில் இயற்கை'** என்னும் தலைப்பில் உவமையணியின் விளக்கம், உள்ளுறை, இறைச்சி ஆகியவற்றையும் அவற்றில் உள்ளுறை இறைச்சி என்பன அகப்பாடல்களில் பெருமளவு பயின்று வருவதையும், புறப்பாடல்களில் அவை குறிப்புப்பொருள் என்ற நிலையில் சிறிதளவே நிற்பதையும் விவரிக்கிறது. மேலும் மாந்தரின் புறவாழ்க்கையில் இடம்பெறும் பண்பாட்டுப் படிநிலைகள் குறித்த உவமைகள் இயற்கைப் பின்னணியில் அமைந்துள்ள பாங்கினையும் இந்த இயல் ஆய்கிறது.

**'இயற்கையோடு இயைந்த வாழ்வியல்'** என்னும் ஐந்தாம் இயல் புறப்பொருள் சார்ந்த போர் நிலையையும் சமூக அமைப்பினையும், பொதுவான வாழ்வியலையும் இயற்கையில் அறிவியல் செய்திகளின் ஆதிக்கத்தையும் இயற்கைசார் மனித நேயத்தையும் விரிவாக ஆய்ந்துரைக்கிறது.

**'நிறைவுரை'**யில் ஒவ்வொரு இயலிலும் ஆய்வின்வழித் தெளிந்துணர்ந்த முடிபுகளை தொகுத்து வழங்குவதுடன் இந்த ஆய்வின் மூலம் கண்டுணர்ந்த எதிர்கால ஆய்வுக்களங்களும் சுட்டப்பெற்றுள்ளன.

**ஆய்வு நெறி**

ஆய்வில் சங்கப் புறப்பாடல் அடிகள் இன்றியமையாத இடங்களில் மட்டுமே எடுத்தாளப் பெற்றுள்ளன. சில இடங்களில் பாடலில் பயின்று வரும் சொற்களும் மேற்கோளாகச் சுட்டப்பெற்றுள்ளன. மற்ற இடங்களில்

பெரும்பாலும் பொருள் விளக்கம் கருதி உரையாக மட்டும் புறப்பாடல் நுட்பங்கள் வழங்கப்பெற்றுள்ளன.

இறுதியில் பயன்பயந்த நூல்கள்–ஆவணங்கள் என்னும் பகுதி இடம் பெற்றுள்ளது. இது ஆய்வுக்குரிய முதன்மை நூல்கள், துணைமை நூல்கள் ஆகியவற்றைக் கொண்டுள்ளது. துணைமை நூல்கள் பிரிவில் இலக்கியம், இலக்கணம், அகராதி, நிகண்டு, திறனாய்வு ஆகிய நூல்கள், ஆய்வேடுகள், ஆங்கில நூல்கள் ஆகியவை இடம் பெற்றுள்ளன.

இயல் - ஒன்று

# சங்க இலக்கியத்தில் இயற்கைப் பயன்பாடு

சங்ககால மக்கள் இயற்கையோடு இயைந்த வாழ்க்கையை நடத்தினர். அதன் அடிப்படையில் இயற்கையைப் பற்றிய விளக்கங்களையும், இயற்கைப் பொருட்கள் பற்றியும், அவ்வியற்கையின் இன்றியமையாமை குறித்தும் அது பயன்படும் நிலை குறித்தும், இயற்கைப் பயன்பாட்டில் அகத்திணைப் பாடல்களுக்கும் புறத்திணைப் பாடல்களுக்கும் உள்ள வேறுபாடுகள் குறித்தும் பொதுப்பட இவ்வியல் ஆய்கிறது.

## சங்ககாலம்

தமிழ்நாடு தொன்மையும் சிறப்பும் வாய்ந்தது. முடியுடை மூவேந்தர் தமிழ்நாட்டினை ஆண்டனர். பாண்டிய மன்னர் சங்கம் வைத்துத் தமிழை வளர்த்தனர். முதல் சங்கத்திலும் இடைச்சங்கத்திலும் தோன்றிய நூல்கள் கடல்கோள்களால் அழிவுற்றன. கடைச்சங்க காலத்தில் தோன்றிக் கிடைத்திருக்கும் நூல்களே ' சங்க இலக்கியம் ' என்றழைக்கப்பெறுகிறது.

## சங்க இலக்கியம்

சங்க இலக்கியமாகக் குறிக்கப்பெறுவது பத்துப்பாட்டும் எட்டுத்தொகையுமாகும். திருமுருகாற்றுப்படை, பொருநராற்றுப்படை, சிறுபாணாற்றுப்படை, பெரும்பாணாற்றுப்படை, முல்லைப்பாட்டு, மதுரைக்காஞ்சி, நெடுநல்வாடை, குறிஞ்சிப்பாட்டு, பட்டினப்பாலை, மலைபடுகடாம் (கூத்தராற்றுப்படை) ஆகியவை பத்துப்பாட்டாகும். நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறுநூறு, பதிற்றுப்பத்து, பரிபாடல், கலித்தொகை, அகநானூறு, புறநானூறு ஆகிய தொகை நூல்களைக் கொண்டது எட்டுத்தொகையாகும்.

## சங்க இலக்கியத்தில் இயற்கை

'மக்கள் வாழ்க்கையிலிருந்து முகிழ்ப்பது இலக்கியம்' என்பார் ஆர்னால்டு.[1] சங்க கால மக்கள் காதலையும் வீரத்தையும் தம் இரு கண்களாகக் கொண்டு இயற்கை வாழ்வு நடத்தினர். "சங்க காலப் புலவர் இயற்கையினைத் தனியாகக் கற்பனை செய்து பாடவில்லை மக்கள் வாழ்விற்கும் உணர்விற்கும் பின்னணியாக அமைத்துப் பாடியுள்ளனர்."[2]

சங்கப் புலவர்கள் இயற்கைக்கு இலக்கியத்தில் சிறந்த இடமளித்தனர். மக்கள் வாழ்வின் அனைத்துக் கூறுகளும் இயற்கையையொட்டியே அமைந்தன. காலமும் பொழுதும் அறிய இயற்கை துணை செய்தது. தலைவன் வினைமுடிந்து மீளுவதாகக் கூறிய கார் காலத்தை, மேகம் மழை பெய்வதால் உணர்ந்தனர். கார்கால வரவைக் கொன்றை, கோடல், பிடவம், முல்லை ஆகிய மலர்கள் மலரும் காலம் கொண்டு அறிந்தனர்.[3]

## இயற்கைப் பொருள்கள்

மலை, ஆறு, காடு, ஞாயிறு, திங்கள், விண்மீன்கள் அனைத்தும் இயற்கை என்பர். மேலும் புனலுக்குத் தண்மையும் நெருப்புக்கு வெம்மையும் இயற்கை என்றும் விளக்கம் அளிப்பார் திரு.வி.க.[4] 'உலகம் தோன்றியபோது தானாகத் தோன்றிய பொருள்களை இயற்கை என்பார் ச.மல்லிகா.[5]

"ஓரறிவு உயிர் முதல் அனைத்தும் இயற்கை எனினும், ஆறறிவினனான மனிதன் தன் அறிவாலும் செய்கையாலும், இயற்கையின் இயல்பு நிலையிலிருந்து மாறி அமைவதால் மனிதன் நீங்கலாகப் பிற இயற்கையாக எண்ணப்படுகின்றன"[6] எனக் கூறி மனிதனை இயற்கையில் அடக்க மறுப்பர் ச.வே. சுப்பிரமணியன். ஆனால் மனிதர்களை இயற்கையில் அடக்குவார்[7] சி.கோ. சுப்பிரமணிய முதலியார். இதற்கு அரண் சேர்ப்பதாக

இயற்கைத் தாயின் உயிரினங்களில் மனிதனையும் அடக்கி அவனே எல்லாவற்றினும் உயர்ந்தவன் என்பதை,

**"இயற்கையின் உயிர்கட்குள்ளே மனிதன்தான் எவற்றினுக்கும் உயர்ச்சியும் தான்அறிந்த உண்மையை உலகுக்காக்கும் முயற்சியும் இடைவிடாமல் முன்னேற்றச் செயலைச் செய்யவும் பயிற்சியும் உடையான் என்று பட்டணம் எடுத்துக் காட்டும்"[8]**

என்று எடுத்துரைப்பர் பாரதிதாசன். "இயற்கையின் இருப்பிடம் சிற்றூர்"[9] என்பதும் அவரது கருத்தாகும். மனிதன் இயற்கைப் படைப்பின் ஓர் அங்கம் ஆதலின் இயற்கையின்றி மனிதன் இல்லை.

"மனிதனும் இயற்கையும் வேறல்ல என்னும் உணர்வை அளிப்பதுதான் இயற்கை நெறியாகும். நீர் நில இயைபின் பெற்றி போல் இயற்கையும் மனித இயைபும் இரண்டறக் கலந்து நிற்பன"[10] என்று இராம குருநாதன் கூறுவார். எனவே உலக அமைப்பே இயற்கை என்பது புலனாகும்.

ஆக, இயற்கைப் பொருள்கள் என்பன ஐம்பூதங்களும், மரம், செடி, கொடி முதலியனவும் நீர் வாழ்வன, ஊர்வன, பறப்பன, விலங்குகள் ஆகிய உயிரினங்களும் மனிதனும் இதில் அடக்கம் எனலாம்.

### இயற்கை - சொற்பொருள் விளக்கம்

எங்கும் நீக்கமற நிறைந்து விளங்குவது இயற்கையாகும். இயற்கை என்னும் சொல்லுக்குப் பலரும் பல்வேறு பொருள்களைக் கூறுகின்றனர்.

**"இயற்கைப் பொருளை இற்றெனக் கிளத்தல்"[11]**

என்பது தொல்காப்பியம்.

**"தன்னியல் திரியாது நின்ற பொருள்"[12]**

என இயற்கைப் பொருளுக்கு விளக்கம் தருவார் சேனாவரையர்.

கழகத் தமிழ் அகராதி, இயற்கை என்பதற்கு வழக்கம், சுபாவம், இலக்கணம், கொள்கை என்று பொருள் கூறுகிறது.[13] தமிழ் – தமிழ் அகர முதலி 'இயற்கைப் பொருள்' என்ற சொல்லுக்குத் "தோன்றியபோது தொடங்கி ஒரு நிலையாகிய பொருள்" என்று பொருள் வழங்குகிறது.[14] தமிழ் லெக்ஸிகனும் இப்பொருளையே சுட்டுகிறது.[15] மதுரைத் தமிழ்ப் பேரகராதி "ஏது, குணம், சுபாவம், முறைமை, வழக்கம், கொள்கை, இயல்பு"[16] எனப் பொருள் விளக்கம் தருகிறது. கிரியாவின் தற்காலத் தமிழ் அகராதி இயற்கை என்பதற்கு "மனிதனால் உருவாக்கப்படாமல், தானாகவே காணப்படும் (மலை, நீர் முதலிய) பொருள் அல்லது தானாகவே தோன்றும் (மழை, காற்று, இடி முதலிய) சக்தி"[17] என்று பொருள் கூறுகிறது.

இயற்கை எனும் தமிழ்ச் சொல்லை இயல்+கை என்று பிரிக்கலாம். 'இயல்' என்னும் பகுதிக்குச் சாயல், நடை என்பது பொருளாகும். 'கை' என்னும் சொல்லுக்கு ஒழுக்கம் என்பது பொருளாகும்.[18] இதனோடு கீழ்க்காணும் பொருள்களும் 'கை' என்னும் சொல்லுக்கு உண்டு என்பதை

**"ஒப்பனை படையுறுப் பொழுக்கம் சிறுமை**
**சுரமும் பின்பிறந் தாளும் கையே"[19]**

என்று பிங்கல நிகண்டு கூறுகிறது.

இயற்கை என்ற சொல்லுக்கு இயல்பாக உண்டான, புனையப்படாத மனிதத் தலையீட்டால் மாற்றப்படாத செயற்கை அல்லாதன எனப் பல பொருள்கள் கூறப்படுகின்றன.[20]

இயற்கை என்பது பிறரால் ஆக்கப்படாததாய், இயல்பாய் அமைந்த ஒன்றாகும். **"கை புனைந்(து) இயற்றாக் கவின் பெறுவனப்பு"[21]** என இயற்கை குறித்துக் கூறுவார் நக்கீரர். அவர் கா, கவிர் ஆகிய இயற்கை அழகின் வெளிப்பாடே முருகன் என்பார். அதற்கு அரணாகக் கையால்

செய்யப்படுவது செயற்கை, கையால் செய்யப்படாதது இயற்கை எனக் கூறுவார் திரு.வி.க.[22]

"இயற்கை இறைவன் படைப்பு, கலை மனிதன் படைப்பு, மனிதன் உருவாக்காத, உருவாக்க இயலாத அனைத்தும் இயற்கை" என்பார் அன்னி மிருதுலகுமாரி தாமசு.[23]

சங்க இலயத்தியத்தில் 'இயற்கை என்னும் சொல் 12 இடங்களில் ஆளப்பெற்றுள்ளது. அச்சொல் பெரும்பான்மை 'இயல்பு' என்னும் பொருளிலும் ஓர் இடத்தில் மட்டும் இயல்பு, இயற்கை (Nature) என்ற பொருள்படுமாறும் ஆளப்பெற்றுள்ளது என்பதை,

**"ஐம்பெரும் பூதத்(து) இயற்கை போல"[24]**

**"இருவீர் வேறல் இயற்கையும் அன்றே"[25]**

**"ஒருவனை ஒருவன் அடுதலும் தொலைதலும்**
**புதுவது அன்றிவ் வுலகத்(து) இயற்கை"[26]**

**"நால்வேறு இயற்கைப் பதினொரு மூவரொடு"[27]**

**"காரி உண்டிக் கடவுள(து) இயற்கையும்"[28]**

**"மாயா இயற்கைப் பாவையின்"[29]**

**"மணம்மகிழ் இயற்கை காட்டி யோயே"[30]**

**"தொல்முறை இயற்கையின் மதி"[31]**

**"பண்டுமிவ் உலகத்(து) இயற்கை, இஃதின்றும்"[32]**

**"விரைசெலல் இயற்கை வங்கூழ் ஆட்ட"[33]**

**"அரிதுபெரிது சிறப்பின் காமத்(து) இயற்கையும்"[34]**

"வான்வழங்(கு) இயற்கை வளிபூட்டினையோ"[35]

"மாரி பொய்ப்பினும் வாரி குன்றினும்
இயற்கை அல்லன செயற்கையில் தோன்றினும்'[36]

என வரும் பாடலடிகளால் அறியமுடிகின்றன. மேற் சுட்டியவாறு இயற்கை என்னும் சொல் பல்வேறு பொருள்களிலும் வழங்கப்பெற்றாலும் இந்த ஆய்வில் மனிதன் கையால் புனையப்படாத, அவன் முயற்சியால் உருவாக்கப்படாத பொருள்களையே இயற்கை (Nature) என்னும் சொல் குறிப்பதாகக் கொள்ளப் பெற்றுள்ளது.

**இயற்கையின் இன்றியமையாமை**

மனிதன் இயற்கையைச் சார்ந்து வாழ்கிறான். இயற்கையின்றி மனிதனின் வாழ்வில்லை. நிலனும், நீரும், வெப்பமும் தண்மையும் காற்றும் ஒளியுமின்றி மனிதன் வாழ முடியாது. "இயற்கை செஞ்ஞாயிற்றின் ஒளியாய், வெள்ளிய நிலவாய், எழில் மலையாய், மணி கொழிக்கும் அருவியாய், செழும் பொழிலாய்த் துணை செய்து வருகிறது"[37] என்று திரு.வி.க. கூறுவார். எம்பெடக்கிளிசு (Emducles) என்பவரும் தாம் எழுதிய இயற்கை (On nature) என்ற பாடலில், இயற்கை பூத அமைப்பை விவரிக்கிறது எனவும், நெருப்பு, காற்று, மண், நீர் என்னும் மாறாதனவும், நிலையானதுமான நாற்பெரும் பூதங்களும் காதலால் இணைந்தும் பூசலால் பிரிந்தும் மாறி மாறி அமைந்து, உலகம் இயங்குகிறது எனவும் குறிப்பிடுவார்.[38] சங்கப் பாடல்களிலும், ஐம்பூத அமைப்பும் ஆற்றலும் விளக்கப்பெறுகின்றன.

**மண்திணிந்த நிலனும்**
**நிலன்ஏந்திய விசும்பும்**
**விசும்புதைவரு வளியும்**
**வளித்தலைஇய தீயும்**

**தீமுரணிய நீரும் என்றாங்(கு)**

**ஐம்பூதத்(து) இயற்கை போல.[39]**

என்னும் புறப்பாடல் ஐம்பூதங்களாகிய இயற்கையைக் கூறும்.

இவ்வுலகம் நிலம், நீர், தீ, வளி, விண் என்னும் ஐம்பூதங்களால் ஆனது. இவ்வைவகை பூதங்களும் மக்கள் வாழ்க்கைக்கு உறுதுணையாக உள்ளன. இந்த ஐம்பெரும் பூதத்தில் நீர் சிறந்ததாகும். அதனால்தான் திருவள்ளுவரும் 'நீரின்றி யமையா துலகு'[40] என்கிறார். எவ்வுயிர்க்கும் பாதுகாப்பு நீரே, நீரின் இன்றியமையாமையினை "எல்லா உயிர்க்கும் ஏம மாகிய நீர்"[41] என்றும் "நீரின்றமையா யாக்கை"[42] என்றும் புறநானூறு கூறுகிறது. இந்நீர் மழையால் ஆவது. மழை இன்றேல் இவ்வுலகில்லை. மழையால் இவ்வுலகம் நிலைத்து நிற்பதால் அது அமிழ்தமாயிற்று என்பதை,

**"வானின்(று) உலகம் வழங்கி வருதலான்**

**தானமிழ்தம் என்றுணரற் பாற்று"[43]**

என்ற திருவள்ளுவனின் வாக்கால் அறியலாம். மழை பொய்யாது மாறினும், நிலம் விளையாது ஒழியினும், எல்லா உயிர்கட்கும் உயிர் வாழ்க்கை இல்லை[44] என்று ஊன்பொதி பசுங்குடையார் கூறுவார். நீரைப் போன்றே நிலனும் பிற இயற்கைப் பொருள்களும் உயிர் வாழ இன்றியமையாதனவாகும்.

"இந்நிலம் இல்லையேல் நாம் பிறவி எடுத்து உலவுதல் முடியாது. இந்நிலம் இருந்தாலும் இதன்கண் மரம், செடி, கொடிகளும் அவற்றின் பயன்களான இலையும், பூவும், காயும், கனியும் கிழங்கும் வித்தும் இவற்றின் வேறான நீரும், நெருப்பும், காற்றும் இல்லையானால் நாம் ஒரு நொடிப்பொழுதேனும் இங்கிருந்து உயிர்வாழ்தல் இயலாது"[45] என்பார் மறைமலையடிகள். இதன் வழி இயற்கை ஆற்றல் மிக்கது என்பதையும் மக்களை வாழ்விப்பது என்பதையும் அறியமுடிகிறது.

**இயற்கையின் உருவம்**

இயற்கை பலருக்குப் பல்வேறு வகையில் தோற்றமளிக்கிறது. "அழியாது கிடக்கும் இயற்கைக்கு அடிப்படையாக நிலவுவது அழகாகும், அழகினின்றும் அரும்பி மலர்ந்து காட்சியளிப்பது இயற்கை என்று சுருங்கச் சொல்லலாம்"[46] என்று திரு.வி.கலியாண சுந்தரனார் கூறுவார். மாந்தர்தம் புலன்களால் உணரக்கூடிய புறவுலகாய், விளங்குவதே இயற்கை"[47] என்பர் தனிநாயக அடிகள்.

இந்நிலையில் இலக்கியம் யாக்கின்ற புலவர்கள் இலக்கியத்திற்கு மெருகூட்டும் வருணனைப் பகுதிகளில் இயற்கையை எடுத்தாளுகின்றனர். அவற்றின்வழித் தம் கருத்துகளையும், குறிப்புப் பொருளையும் உணர்த்துகின்றனர்.

ஆபர்கிராம்பி என்ற ஆராய்ச்சியாளர், 'கலையுலகத்து விதிகள் இயற்கையிலிருந்து தேர்ந்து அறியப்பட்டனவேயன்றிச் செயற்கையாக உருவாக்கப்படவில்லை' (Discovered not devised) என்று கூறியிருக்கிறார்.[48] கலையுலகின் அடிப்படை இயற்கையே என்ற தமிழ் இலக்கிய மரபினையே இவர் கூற்று வலியுறுத்துகிறது.

**மேனாட்டுக் கவிஞர் பார்வையில் இயற்கை**

பத்தொன்பதாம் நூற்றாண்டின் இறுதியில் புதியதோர் அழகு வழிபாடு ஐரோப்பா எங்கும் வெற்றியுடன் பரவியது. இதனைப் பின்பற்றியவர்கள் 'கலை கலைக்காகவே' என்ற கோட்பாட்டினைப் பின்பற்றியவர்களாக விளங்கினார்கள். வாழ்க்கையின் தொடர்பினை நீக்கி, இயற்கை இன்பத்தை மட்டுமே கருத்தினில் கொண்டு பாடினர். அவ்வகையில் வேர்ட்ஸ்வொர்த்து, டென்னிசன், கீட்சு, பைரன், முதலியவர்களைக் குறிப்பிடலாம். அவர்கள் இயற்கையை இயற்கையாகவே

கண்டனர். ஆனால் சங்கப் புலவர்கள் இயற்கையினூடே வாழ்வியலைக் கண்டனர். சங்க காலப் புலவர் இயற்கையைத் தனியாகப் பாடவில்லை. வாழ்க்கையோடு இயைபுபடுத்தியே பாடியுள்ளனர். சங்க காலப் பாடல்கள் 'செம்புலப் பெயல் நீர் போல' இயற்கையும் வாழ்க்கையும் ஒன்றி இணைந்தனவாகும்.

**நிலவியல் ஆற்றல்**

'நிலவியல் ஆற்றல் மனித வாழ்வினையும் வளர்ச்சியினையும் தன் வயமாக்கும்' என்ற உண்மையை இக்கால அறிவியல் துறையினர் கண்டறிந்தனர். இந்த உண்மையைச் சங்க காலத் தமிழ்ப் புலவர்கள் அநுபவத்தால் உணர்ந்து சில அகத்திணை மரபுகளையும் புறத்திணை மரபுகளையும் உருவாக்கியுள்ளனர்.

**நானிலமும் ஐந்திணைப் பாகுபாடும்**

( உலகின் நில அமைப்பினைக் கண்ட தமிழன் அதனை நான்கு கூறாக – பகுதியாகப் பிரித்து எண்ணினான். அந்த நானிலமே குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் என்பனவாகும். இயற்கையை நுணுகிப் பார்த்து மேலும் ஒரு நிலத்தைச் சேர்த்துக்கொண்டான். அதுதான் பாலை என்ற நிலமாகும். பழந்தமிழன் இயற்கைக் காட்சிகளையும் அவற்றால் மனித வாழ்வில் உருவாகும் நிலைகளையும் கண்டதன் விளைவே ஐந்திணைப் பாகுபாடாகும். ஆக ஐந்திணைகளாவன குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் பாலை என்பனவாம். )

**குறிஞ்சி**

குறிஞ்சி நிலமாவது மலையும் மலை சார்ந்த இடமுமாகும். இதற்குரிய பெரும்பொழுது கூதிர்ப்பருவம் என்று சொல்லப்படுகிற (ஐப்பசி,

கார்த்திகை ஆகிய மாதங்கள்) குளிர்காலமும், முன்பனிக்காலமும் (மார்கழி மாதம், தை மாதம்) ஆகும்.[49] சிறுபொழுது நள்ளிரவு நேரம் ஆகும்.[50] இதற்குரிய ஒழுக்கமாகிய உரிப்பொருள் புணர்தலும் புணர்தல் நிமித்தமும் ஆகும்.

புணர்தலும் புணர்தல் நிமித்தத்திற்குக் கூதிரும் யாமமும் வகுக்கப்பட்டமைக்கு நச்சினார்க்கினியர் பின்வருமாறு விளக்கம் தருகிறார். "குறிஞ்சியாவது புணர்தற்பொருட்டு. அஃது இயற்கைப் புணர்ச்சி முதலியனவாம். இயற்கைப் புணர்ச்சி நிகழ்ந்தபின் களவு நீட்டிப்பக் கருதும் தலைவிக்கு அக்களவினைச் சிறப்பிக்குங்கால், தலைவி அரியளாக வேண்டும், ஆகவே, அவ்வருமையை ஆக்குவது ஐப்பசியும் கார்த்திகையுமாகிய கூதிரும் அதன் இடையாமமும் ஆகும். என்னை? இருள் தூங்கித் துளி மிகுதலின் சே' றல் அரிதாகலானும், பானாட்கங்குலிற் பரந்துடன் வழங்காது மாவும் புள்ளும் துணையுடன் இன்புற்று வதிதலின் காமக் குறிப்புக் கழியப் பெருகுதலானும், காவல் மிகுதி நோக்காது வரும் தலைவனைக் குறிக்கண் எதிர்ப்பட்டுப் புணருங்கால் இன்பம் பெருகுதலின் இந்நிலத்திற்குக் கூதிர்க் காலமும் யாமமும் சிறந்தது"[51] என்று கூறுகிறார்.

**முல்லை**

காடும் காடு சார்ந்த இடமும் முல்லையாகும். இதற்குரிய பொழுது கார்ப்பருவமும் மாலை நேரமும் ஆகும். இதனைக், "காரும் மாலையும் முல்லை"[52] என்பதனால் அறியலாம். இதன் உரிப்பொருள் இருத்தலும் இருத்தல் நிமித்தமும் ஆகும்.

பொருளீட்டித் திரும்புகிறவன் வெயில் வெப்பம் தணிந்துள்ள மாலைக் காலத்தில் தேரினைச் செலுத்தி வருகிறான். கோடையில்லாத காலமாகையால் அவனுக்கு வேண்டிய நீரும் நிழலும் கிடைக்கின்றன.

மனத்திலே அமைதி நிலவுகிறது. நீர் வளம் மிக்கிருப்பதால் விலங்குகளும் பறவைகளும் தங்களுக்குத் தேவையான உணவினைப் பெற்றுத் தங்கள் துணையுடன் அன்போடு திரிந்துகொண்டிருக்கின்றன. வருகிற நெடுவழியெங்கும் முல்லையின் நறுமணம் நிறைந்திருக்கிறது. இத்தகைய இயற்கைச் சூழல், இல்லத்தில் தனியே இன்பமின்றி இருக்கின்ற தலைவியை விரைவில் சென்று சேர வேண்டும் என்ற ஆவலைத் தலைவனுக்கு உண்டாக்கும். எனவே, தேரினை விரைந்து செலுத்துமாறு தலைவன் தேர்ப்பாகனுக்குச் சொல்லுவான். தொலைவில் தேர் வருவதைக் கண்ட தோழி, தலைவன் வருகைக்காகத் தன்னை ஆற்றிக் கொண்டு இல்லத்தில் இருக்கிற தலைவிக்கு அதனை அறிவிப்பாள். இதனால் முல்லைக்குக் கார் காலமும் மாலையும் உரியனவாயின.

**மருதம்**

வயலும் வயல் சார்ந்த இடமும் மருதத்திணைக்குரியது. இதற்கு ஆறுவகைப் பெரும்பொழுதும் உரியதாகும். அஃதாவது ஆண்டு முழுவதுமாகும். இதற்குரிய சிறுபொழுது வைகறையும் விடியலும் என்பதை “வைகறை விடியல் மருதம்”[53] என்பதனால் அறியலாம்.

இதற்குரிய உரிப்பொருள் ஊடலும் ஊடல் நிமித்தமும் ஆகும். பரத்தையிடம் சென்ற தலைவன், இரவுக் காலமெல்லாம் பரத்தையொடு அளவளாவி ஆடல் பாடல்களில் திளைத்துக், களித்துப் பிறர் காணுமுன் இல்லம் சேர நினைத்து வானம் புலரா வைகறையில் இல்லத்திற்குத் திரும்புகிறான். தலைவி வாயில் மறுக்கிறாள். வானம் புலர்ந்து வரும் விடியற்காலத்தே தலைவனின் வேறுபட்ட தோற்றத்தைப் பிறர் காணுவது நாணத்தைத் தரும் என்று தலைவி ஊடல் நீங்கித் தலைவனை ஏற்றுக்கொள்கிறாள். இவ்விளக்கத்தால் மருதத்திற்கு வைகறை விடியல் ஆகிய சிறுபொழுதுகள் பொருத்தமாய் அமையக் காணலாம்.

வயலிலே விளைந்து வந்த பயனைப் பெற்றபின், தலைவன் மனம் ஆடல், பாடல் முதலிய கலைகளை நாடிச் செல்கிற காரணத்தால், அக்கலைகளில் தேர்ந்த பரத்தையரை அவன் நாடுவது பொருத்தமாகிறது.

**நெய்தல்**

கடலும் கடல் சார்ந்த இடமும் நெய்தல் திணைக்குரியது. இதற்கு ஆறுவகைப் பெரும்பொழுதும் உரியது ஆகும். அஃதாவது ஆண்டு முழுவதும் ஆகும். சிறுபொழுது மாலை ஆகிய எற்பாடு என்பதை

**"எற்பாடு---------**

**நெய்தலாதல் மெய்பெறத் தோன்றும்"[54]**

என்ற நூற்பாவால் அறியலாம். இதற்குரிய உரிப்பொருள் இரங்கலும் இரங்கல் நிமித்தமும் ஆகும்.

கதிரவன் மறையும் மாலைப் பொழுதினில் இரை தேடச் சென்ற பறவைகளெல்லாம் தங்கள் கூடுகட்குத் திரும்புகின்றன. புன்னை மரச் சோலையில் நிலவொளியும், மலர் மணமும் நிறைந்திருக்கின்றன. தலைவிக்குத் தனிமை உணர்ச்சி மேம்படுகிறது. இரங்கல் தோன்றுகிறது. ஆகவே இரங்கலும் இரங்கல் நிமித்தமும் இத்திணைக்குப் பொருத்தமாக அமைகின்றன.

**பாலை**

பாலைக்கென்று தனியொரு நிலம் இல்லை. எனினும், குறிஞ்சியும் முல்லையும் ஆகிய பகுதிகளில் தொடர்ந்து பல காலம் மழை பெய்யாமையால் அப்பகுதி வறண்டு, ஈரப் பசையற்ற நிலமாக மாறிவிடும். அப்பகுதியே பாலை நிலம் எனப்படும். இதனை,

**“வேனலங் கிழவனொடு வெங்கதிர் வேந்தன்**
**தான்நலம் திருகத் தன்மையிற் குன்றி**
**முல்லையும் குறிஞ்சியும் முறைமையின் திரிந்து**
**நல்லியல்பு இழந்து நடுங்குதுயர் உறுத்துப்**
**பாலை என்பதோர் படிவம் கொள்ளும்”**[55]

என்னும் சிலப்பதிகார அடிகளால் அறியலாம்.

இப்பாலைத்திணை ‘நடுவு நிலைத் திணை’ என்றழைக்கப்பெறுகிறது. இதற்குரிய பெரும்பொழுது வேனிலும் பின்பனியும் ஆகும் என்பதை

**“நடுவுநிலைத் திணையே நண்பகல் வேனிலோடு**
**முடிவுநிலை மருங்கின் முன்னிய நெறித்தே”**[56]

**“பின்பனி தானும் உரித்தென மொழிப”**[57]

என்னும் நூற்பாக்களால் அறியலாம். சிறுபொழுது நண்பகலாகும்.[58] இதற்குரிய உரிப்பொருள் பிரிதலும் பிரிதல் நிமித்தமும் ஆகும்.

வேனிற் காலத்தில் காலையும் மாலையும்கூட நண்பகல் போலவே வெப்பமுடையதாக இருக்கும். நீரும் நிழலுமின்றி நிலம் வாடிக் கிடக்கும். பறவைகளும் விலங்குகளும் வெளியில் சென்று இரையும் நீரும் தேட இயலாதவாறு வெப்பம் கொடிதாக இருக்கும். இதற்கும் மேலாகத் துணையைப் பிரிந்திருக்கும் தனிமையும் இவ்வெப்பத்தின் கொடுமையை மேம்படுத்தவே செய்யும். “அகப்பொருள் நூல்களில் ஏனைய திணைகளைக் காட்டிலும் மிகுதியாக விரித்து ஓதப்படுவது பாலைத் திணையே ஆகும்”[59] என்னும் மு.வ.வின் கருத்து இங்கு நினைவுகூரத்தக்கது.

**ஐவகை நிலத்தின் பெயரும் மலரே**

மேற்குறித்த ஐவகை நிலத்திற்கும் அவ்வவ் நிலத்தில் மலர்ந்த மலரின் பெயரையே பழந்தமிழர் சூட்டியுள்ளனர். அவ்வகையில் பெயர்

பெறுவதற்கு, முதலாசிரியர் ஏகதேச காரணம் பற்றி இட்டதோர் குறி என்பார் இளம்பூரணர். இதனை, "முல்லை குறிஞ்சி என்பன இடுகுறியோ காரணக்குறியோ எனின், ஏகதேச காரணம் பற்றி முதலாசிரியர் இட்டதோர் குறி என்று கொள்ளப்படும்"[60] என்னும் கூற்றால் அறியலாம். மேலும் அவர் "பாலை என்பதற்கு நிலம் இன்றேனும், வேனிற்காலம் பற்றி வருதலின் அக்காலத்துத் தளிரும் சினையும் வாடுதலின்றி நிற்பது பாலை என்பதோர் மரம் உண்டு ஆகலின், அச்சிறப்பு நோக்கிப் பாலை"[61] என்று குறிப்பிடுவதால் பாலையாகிய நிலத்திற்கும் சேர்த்துப் பூவின் பெயரையே குறித்துச் சென்றுள்ளதை அறியமுடிகிறது.

**சங்ககாலப் போர் வகைகள்**

அகத்திணை, அன்பின் ஐந்திணையுடன் கைக்கிளை, பெருந்திணையுடன் சேர்ந்து ஏழு திணைகளையுடைது. குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை, பெருந்திணை, கைக்கிளை ஆகிய இவற்றின் புறனாக முறையே வெட்சி, வஞ்சி, உழிஞை, தும்பை, வாகை, காஞ்சி, பாடாண் பகுதி ஆகியன உள்ளன. பண்டைய போர்த் திணைகளின் பெயர்களையும் இயற்கையின் – மலரின் பெயர்களைக் கொண்டே வழங்கியுள்ளனர்.

**வெட்சி**

பகைவரின் ஆநிரைகளைக் கவர்தல் வெட்சியாகும். இவ்வீரர்கள் வெட்சிப் பூவைச் சூடுவர். "வெட்சி குறிஞ்சிக்குப் புறனாயது எவ்வாறெனின், நிரைகோடல் குறிஞ்சிக்குரிய மலைசார்ந்த நிலத்தின்கண் நிகழ்தலானும், அந்நிலத்தின் மக்களாயின் பிறநாட்டு ஆன்நிரையைக் களவிற் கோடல், ஒருபுடைக் குறிஞ்சிக்கு உரித்தாகிய களவொடு ஒத்ததானும், அதற்கு அது புறனாயிற்று"[62] என்று வெட்சி குறிஞ்சிக்குப் புறம் என்பதை விளக்குவார்.

### வஞ்சி

மண்ணாசை கொண்டு பகைவர் மீது போர் தொடுத்தல் வஞ்சித்திணையாகும். இவ்வீரர்கள் வஞ்சிப்பூவைச் சூடுவர். "வஞ்சி முல்லைக்குப் புறனாயவாறு என்னையெனின், 'மாயோன் மேய காடுறை யுலகமும்' கார்காலமும் முல்லைக்கு முதற்பொருள் ஆதலானும், பகைவயிற் சேரலாகிய வஞ்சிக்கு நிழலும் நீரும் உள்ள காலம் வேண்டுதலானும் பருமரக்காடு சார்ந்த இடம்" இதற்கு உரியதாயிற்று என்பார் இளம்பூரணர்.[63]

### உழிஞை

பகைவரின் மதில் வளைத்தலும் அதனைக் கைக்கொள்ளுதலும் உழிஞைத் திணையாகும். இவ்வீரர்கள் உழிஞைப் பூவைச் சூடுவர்.

"உழிஞை தானே மருதத்துப் புறனே"[64] என்பது மருத நிலத்தின் புறமாக உழிஞை ஆகிய மதிற்போர் நடைபெறும். வஞ்சி வேந்தனுடன் போர் செய்ய ஆற்றாமையால் நாட்டில் உள்ள கோட்டையில் சென்றுவிட, அவ்வரசன் மதிலைக் கைப்பற்ற விடியற்காலைப் பொழுது ஏற்றதாக அமைவதால் உழிஞைத் திணைக்கு மருதம் புறம் ஆயிற்று.

### தும்பை

இருபெரு வேந்தரும் ஒரு போர்க் களத்தில் எதிர்எதிர் நின்று போர் செய்வது தும்பைத் திணையாகும். இருதிறத்து வீரர்களும் தும்பைப் பூவைச் சூடுவர்.

"தும்பை தானே நெய்தலது புறனே"[65] என்பதற்கு இளம்பூரணர் 'இரு பெருவேந்தரும் ஒரு களத்துப் பொருதலின் அதற்கு இடம் காடும் மலையும் கழனியும் ஆகாமையானும், களரும் மணலும் பரந்த வெளி நிலத்துப் பொருதல் வேண்டுதலானும், அந்நிலம் கடல் சார்ந்த வழி அல்லது

இன்மையானும் நெய்தற்கு ஓதிய எற்பாடு போர்த் தொழிற்கு முடிவாதலானும் தும்பைக்கு நெய்தல் நிலம் புறம்' ஆயிற்று என்பர்.[66]

**வாகை**

போரில் வெற்றி பெற்றோர் வாகைப்பூவின் நெற்றினைச் சூடுவர். இது சலசலக்கும். இச்சலசலப்பொலியே வெற்றிக் களிப்பினை உணர்த்துவதாக அமைந்துள்ளது.

**"வாகை தானே பாலையது புறனே"**[67]

என்பது இருபெரும் வேந்தர் போரிட்டு, அதில் வெற்றி பெற்றோர் வாகை சூடுவர். பாலைக்குத் தனி நிலம் இல்லாதவாறு போல இவ்வாகையும் எல்லா நிலத்தும் எல்லாக் குலத்தினும், காலத்திலும் நிகழ்வதாகும்.

**காஞ்சி**

நிலையாமையை உணர்த்தக் கூடியது காஞ்சித் திணையகும். இளமை, செல்வம், யாக்கை முதலியவை நிலை இல்லாதன; பொருந்தாதன; பெருந்திணையும் பொருந்தாத காமத்தைக் கொண்டது. 'ஏறிய மடல் திறம்' முதலாகிய துன்பம் தரும் காமப்பகுதி அன்பின் ஐந்திணைக்குப் புறன் ஆயது. அதுபோலப் புறத்திணை ஐந்திற்கும் புறன் ஆயது காஞ்சித் திணை என்பதை உணர்த்தவே,

**"காஞ்சி தானே பெருந்திணைப் புறனே"**[68]

என்றார் தொல்காப்பியர்.

**பாடாண் பகுதி**

பாடாண் திணை என்பது பெருமையை ஆளும் தன்மை என்று பொருள் கொள்ளலாம். **"பாடாண் பகுதி கைக்கிளைப் புறனே"**[69] என்பதனால் கைக்கிளையாகிய ஒருதலைக்காமம் ஒரு நிலத்திற்கு

உரித்தன்றி எல்லா நிலத்தும் இடம் பெறும். அதுபோல இப்பாடாணும் ஒருவற்கு உரித்தன்றி யாதேனும் ஒரு காரணத்தான் அனைவருக்கும் உரியதாகும் என்பதை அறியலாம்.

காதல், வீரம் என்பவற்றைத் தலைமைக் கூறுகளாகக் கொண்டு பிற கூறுகளையும் துணையாகப் பெற்றுள்ளது மனித வாழ்க்கை. அத்தகைய மனித வாழ்க்கையின் பல்வேறு கூறுகளையும் வருணித்துத் தெளிவுபடுத்துவதற்காகவே பண்டைத் தமிழ்ச் சான்றோர் இயற்கையைப் பயன்படுத்தினர். சுருங்கச் சொன்னால், மனித இதயத்தின் உணர்வுகளையும் இயற்கையின் கவர்ந்திழுக்கும் எழிலையும் நெருங்கிய பிணைப்புடையனவாய் இணைத்தனர் எனலாம்.

## சங்க இலக்கிய இயற்கைப் பாகுபாடு

இயற்கையை, சங்கப் புலவர்கள் பின்வரும் வகைகளில் பாடியிருப்பதாக இர.சாந்தகுமாரி கூறுகிறார்.

1. இயற்கையை மனித உணர்வுடன் இணைத்துக் காட்டல்
2. கருத்துகளைக் குறிப்பால் புலப்படுத்த இயற்கையைத் துணையாகக் கொள்ளுதல்.
3. இயற்கைக் காட்சிகளில் ஈடுபட்டுச் சித்திரித்தல்.
4. இயற்கையின் வாயிலாக அரிய நீதிகளையும் வாழ்வியல் உண்மைகளையும் கூறுதல்.[70]

அன்னி மிருதுலகுமாரி தாமசு அவர்கள் சங்க இலக்கியத்தில் இயற்கையைக் கீழ்க்காணுமாறு பாகுபாடு செய்கிறார்.

1. இயற்கை பாடல் பின்னணியாக இடம் பெறல்.
2. இயற்கை உள்ளுறையாகப் பயன்படல்.
3. இயற்கை உவமை வாயிலாக வெளிப்படல்.
4. இயற்கை இயற்கைப் பொருள்களை அழைத்துப் பேசல்.[71]

இவற்றின்வழிச் சங்க இலக்கியத்தில் இயற்கையைப் பின்வருமாறு பாகுபாடு செய்யலாம். அவையாவன:–

1. இயற்கையை மனித உணர்வுடன் இணைத்துக் காட்டல்.
2. இயற்கை உவமை, உள்ளுறை முதலியவற்றின் வழி வெளிப்படல்.
3. இயற்கைக் காட்சிகளில் வருணனை.
4. இயற்கையின் வாயிலாக அரிய நீதிகளையும் வாழ்வியல் உண்மைகளையும் கூறுதல்.

தலைவனின் நட்பு உலகில் உள்ள அனைத்தையும் விட மிகவும் சிறந்தது என்பதை,

**"நிலத்தினும் பெரிதே; வானினும் உயர்ந்தன்று**
**நீரினும் ஆரள வின்றே சாரல்**
**கருங்கோற் குறிஞ்சிப்பூக் கொண்டு**
**பெருந்தேன் இழைக்கும் நாடனொடு நட்பே"**[72]

என்ற குறுந்தொகைப் பாடலால் அறியலாம்.

ஒருவனுக்குக் காலை, பகல், மாலை, நள்ளிரவு, விடியல் ஆகிய சிறுபொழுதுகளின் செவ்வி தெரிந்தால் அவன் கொண்ட காமம் உண்மை அல்லவாம் என்பதைக்,

**"காலையும் பகலும், கையறு மாலையும்**
**ஊர்துஞ்சு யாமமும் விடியலும் என்றிப்**
**பொழுதிடை தெரியின், பொய்யே காமம்"**[73]

என்பதனால் அறிய முடிகிறது.

கார் காலத்தில் தலைவனைப் பிரிந்து தலைவி வருந்துகிறாள். தலைவியின் பிரிவுத் துயர் கண்டு முல்லை மலர்கள் நகுவன போல் மலர்ந்தனவாம் என்பதைப்,

**"பெயல்புறந் தந்த பூங்கொடி முல்லை**
**தொகுமுகை இலங்கெ யிறாக**
**நகுமே தோழி நறுந்தண் காரே"[74]**

என்ற பாடல் உணர்த்துகிறது.

ஒல்லையூர் கிழார் மகன் பெருஞ்சாத்தன் இறந்தபோது பிரிவாற்றாது வருந்திய குடவாயிற் கீரத்தனார், வள்ளல் இறந்தபின்னர் மலர் சூடுவார் உண்டோ? முல்லையும் பூத்தியோ? என்று முல்லையை நோக்கி இரங்கிக் கூறுவதாக,

**"வல்வேற் சாத்தன் மாய்ந்த பின்றை**
**முல்லையும் பூத்தியோ ஒல்லையூர் நாட்டே"[75]**

என்ற பாடல் அமைந்துள்ளது. திங்களின் வரவு பாரி மகளிரின் துயரத்தைத் தூண்டியது.[76] காதலன் பிரிவால் வாடும் தலைவியின் துன்பத்தை இரவு நேரக் கடல் ஒலி மிகுதிப்படுத்துகிறது. தன்னைப் போன்று கடலும் இரவெல்லாம் தூங்காது துயருற்று வருந்துவதாக இரங்கிக் கூறுகிறாள்.[77]

மானிட உணர்வுகளோடு இயற்கையின் எழிலை இயைபுறச் செய்தது பண்டைத் தமிழ் இலக்கிய மரபு என்னும் மு.வ.வின் கூற்று நினைவு கூரத்தக்கது.[78]

## உவமை உள்ளுறைவழி இயற்கை வெளிப்படல்

சங்கப் புலவர்கள் உயிரினங்களின் இயல்புகளைச் செவ்விதின் உணர்ந்திருந்தனர். ஆதலின் ஒரு பொருளைப் பற்றிப் பாடும்போது

அதனோடு ஒப்புமையுடைய பிறிதொரு பொருள், அவர்கள் எண்ணத்தில் இயல்பாகத் தோன்றியது. தோன்றவே, அதனை அப்படியே உவமையாக்கினர். இயற்கைப் பொருளின் இயல்பும் வண்ணமும் வடிவும் புலப்பட உவமித்திருத்தலைச் சங்கப் பாடல்கள் பலவற்றிற் காணலாம்.

கதிரவன் இருக்கும் திசையினை நோக்கி நிற்றல் நெருஞ்சிப் பூவின் இயல்பு. அது காலையில் கிழக்கும், நண்பகலில் உச்சியும், மாலையில் மேற்கும் நோக்கி நிற்கும் பெற்றியது. தலைவனையே நோக்கி நிற்கும் தலைவியின் தன்மையைக் கூற வந்த புலவர் நெருஞ்சிப் பூவை உவமையாக்கினார்.

**"........ஓங்குமலை நாடன்**
**ஞாயி றனையன் தோழி**
**நெருஞ்சி யனையவென் பெரும்பணைத் தோளே"[79]**

இப்பாடல் தலைவி தோழிக்குக் கூறுவதாக அமைந்துள்ளது.

புறநானூற்றிலும் இம்மலரினை உவமையாக வைத்து மோசிகீரனார் பாடியுள்ளார். நெருஞ்சிப்பூ கதிரவனை எதிர்நோக்கி நிற்றல் போல யாழ்ப்பாணனது இரக்கும் கலம் கொண்கானங் கிழானது மார்பகத்தையே நோக்கி நிற்கிறது.

**"பாழூர் நெருஞ்சிப் பசலை வான்பூ**
**ஏர்தரு சுடரின் எதிர்கொண் டாஅங்கு"[80]**

என்பன அவ்வுவமை அடிகளாகும்.

யாமைப் பார்ப்பு தன் தாய்முகம் கண்டு வளரும் இயல்புடையது. இவ்வியல்புண்மை உணர்ந்த புலவர் தலைவி கூற்றில் வைத்து அதனை உவமையாக்கி உள்ளார். என்பதைத்,

**“தீம்பெரும் பொய்கை யாமை யிளம்பார்ப்புத்**
**தாய்முக நோக்கி வளர்ந்திசி னாஅங்(கு)**
**அதுவே ஐயநின் மாப்பே**
**அறிந்தனை ஒழுகுமதி அறனுமா ரதுவே”**[81]

என்னும் ஐங்குறுநூற்றுப் பாடலால் அறியலாம். அஃதாவது பரத்தையிற் பிரிந்து வந்த தலைவனை நோக்கி நின்னோடு உடனுறை வாழ்வு நிகழா விடினும் நின்னைக் கண்டேனும் வாழ வாய்ப்பளித்துக் காட்சி நல்குவாயாக எனத் தலைவி புலந்துரைப்பதே இப்பாடல் கருத்தாகும்.

அகத்திணை இலக்கியங்களில் உள்ளுறை உவமம் இடம் பெறுதல் பெருவழக்காகும். உள்ளுறை அகத்திற்கே உரியது. அது புறப்பாடல்களில் குறிப்புப் பொருளாகக் குறைந்த அளவில் பயின்று வரும்.

தலையானங்கானத்துச் செருவென்ற பாண்டிய நெடுஞ்செழியனின் மறத்தைப் புகழ்ந்தேத்தும் பாடலில் கல்லாடனார் அவன் நாட்டு இயற்கையைப் புனைகிறார். அது குறிப்புப் பொருளுடன் விளங்குகிறது.

ஒரு கலைமான் புலியால் தாக்கப்பட்டு இறந்தது. அதன் பிணைமான் தன் சிறு மான்மறியைத் தழுவிக் கொண்டு வேளை வெண்பூவை உண்ணுகிறது என்பதே அப்புனைவாகும்.

**“அறுமருப் பெழிற்கலை புலிப்பாற் பட்டெனச்**
**சிறுமறி தழீஇய தெறிநடை மடப்பிணை**
**பூளை நீடிய வெருவரு பறந்தலை**
**வேளை வெண்பூக் கறிக்கும்**
**ஆளில் அத்த மாகிய காடே”**[82]

இதன்வழி, பாண்டியன் பறந்தலையில் பகைவர்களைக் கொன்றழித்தான். பகைவர் மனைவியர் தம் இளஞ்சிறாரைப் புரத்தல்

பொருட்டு இறக்காமல் அடகு அயின்று உயிர் வாழ்கின்றனர் என்னும் குறிப்புப் பொருளை அறியமுடிகிறது.

பாரி மகளிரை மணஞ் செய்து வைக்க கபிலர் விச்சிக்கோனிடம் அழைத்துச் சென்றார். அவன் நாட்டு இயற்கையைப் புனைந்து கூறும் வாயிலாகப் பாரி மகளிரை மணந்து இனிது இல்லறம் நடத்துக என்னும் கருத்தினைக் கபிலர் உள்ளுறையாக உணர்த்தினார்.

**“பனிவரை நிவந்த பாசிலைப் பலவின்**
**கனிகவர்ந் துண்ட கருவிரற் கடுவன்**
**செம்முக மந்தியொடு சிறந்துசேண் விளங்கி**
**மழைமிசை யறியா மால்வரை யடுக்கத்துக்**
**கழைமிசைத் துஞ்சும் கல்லக வெற்ப”**[83]

என்பதால் ‘பலாவின் பழத்தை உண்ட கடுவன், செம்முக மந்தியோடு பொலிந்து மூங்கிலின் உச்சியில் துயிலுதற்கு இடனான மலைநாட!’ என்று மன்னனை விளிக்கிறார். ‘அதுபோல நீயும் இம்மகளிரை வரைந்து கொண்டு இன்புற்று வாழ்வாயாக!’ என்ற உள்ளுறைப் பொருளில் குறிப்பிடுகிறார்.

மேற்கூறிய பாடல்களில் மனிதரின் நடத்தையும் எண்ணங்களையும் விளக்க இயற்கையினின்று உவமைகள், உள்ளுறைகள் காட்டப்பெற்றன.

**இயற்கை வருணனை**

இயற்கைக் காட்சிகளைச் சொல்லோவியங்களாக அமைத்துப் பாடும் மரபு சங்க இலக்கியங்களில் காணலாம். பத்துப்பாட்டு ஆற்றுப்படை இலக்கியங்களில் இவ்வகை வருணனைகள் பயின்று வருகின்றன. ஆற்றுப்படையில் வரும் வழி வருணனையில்,

**"நகுமுல்லை உகுதே றுவீப்**

**பொன்கொன்றை மணிக்காயா**

**நல்புறவின் நடை"**[84]

என்று முல்லைக் காட்டின் முல்லை நில வருணனை கூறப்பெற்றுள்ளது. நெய்தல் நில வருணனை சிறுபாணாற்றுப்படையில்

**"அலைநீர்த் தாழை அன்னம் பூப்பவும்**

**தலைநாட் செருந்தி தமனியங் காட்டவும்**

**கடுஞ்சூல் முண்டகம் கதிர்மணி கழாஅலவும்**

**நெடுங்காற் புன்னை நித்திலம் பூப்பவும்"**[85]

என்று பல மலர்கள் பூத்துக் குலுங்குவதை அழகுற வருணிக்கிறது.

முல்லைப் பாட்டில் தலைவன் வரும் வழியில் முல்லை நிலத்து மலர்களின் தோற்றம் நயமுற அமைந்துள்ளதைச்,

**"செறியிலைக் காயா அஞ்சனம் மலர**

**முறியிணர்க் கொன்றை நன்பொன் காலக்**

**கோடற் குவிமுகை யங்கை யவிழத்**

**தோடார் தோன்றி குருதி பூப்ப"**[86]

என்பதனால் அறியலாம்.

தலைவனைப் பாடும்போது செழிப்புடைய அவன் நாட்டினையும் பாடும் வகையில் கபிலர், பாரியின் பறம்பு மலை இயற்கை வளத்தைச் சிறப்புறப் பாடியுள்ளார்.

**"அளிதோ தானே பாரியது பறம்பே**

**நளிகொண் முரசின் மூவிரு முற்றினும்**

**உழவ ருழாதன நான்குபய னுடைத்தே**

**ஒன்றே சிறியிலை வெதிரி னெல்விளையும்மே**

**இரண்டே தீஞ்சுவைப் பலவின் பழமூழ்க்கும்மே**

**மூன்றே கொழுங்கொடி வள்ளிக் கிழங்கு வீழ்க்கும்மே**

**நான்கே அணிநிற வோரி பாய்தலின் மீதழிந்து**

**திணிநெடுங் குன்றம் தேன்சொரி யும்மே**

**வான்க ணற்றவன் மலையே வானத்து**

**மீன்க ணற்றதன் சுவையே"[87]**

என்பது கபிலர் காட்டும் உயர்ந்த பறம்பு மலைக்காட்சியாகும்.

## இயற்கையில் வாழ்வியல் உண்மையும் அறமும் உரைத்தல்

இயற்கை நிகழ்ச்சிகளின் வாயிலாக அறத்தை விளக்குவது சங்கப் பாடல்களில் மிக அரிதாகவே காணப்படுகிறது. பண்புடையார் நட்பு தாமரையில் தேன் எடுத்துச் சந்தன மரத்தில் கூடுகட்டுவது போன்றதாகும் என்பதைத்

**"தாமரைத் தண்தா தூதி மீமிசைச்**

**சாந்தின் தொடுத்த தீந்தேன் போலப்**

**புரைய மன்ற புரையோர் கேண்மை"[88]**

என்னும் நற்றிணைப் பாடலால் தெளியலாம். 'பண்புடையார் தொடர்பு நூல் நயம் போல் இன்பம் செய்யும்' என்றார் திருவள்ளுவர். 'நுனியிற் கரும்பு தின்றற்றே' என நாலடியார் கூறும்.

வாழ்க்கையின் இயல்பினை இயற்கைப் பொருள்களைக் கொண்டு சங்க இலக்கியம் விளக்குகிறது. சந்தனம், முத்து முதலியன அவற்றை நுகர்வோருக்கே பயன்தரும். அதுபோலத் தலைவியும் பிறந்த வீட்டுக்கன்றிப் புகுந்த இடத்திற்கே பயன் தருவாள் என்று ஒப்பிட்டுக் கூறப்பட்டுள்ளதைப்,

**"பலவுறு நறுஞ்சாந்தம் படுப்பவர்க் கல்லதை**
**மலையுளே பிறப்பினும் மலைக்கவைதா மென்செய்யும்**
**நினையுங்கால் நும்மகள் நுமக்குமாங் கனையளே**
**சீர்கெழு வெண்முத்த மணிபவர்க் கல்லதை**
**நீருளே பிறப்பினும் நீர்க்கவைதா மென்செய்யும்**
**தேருங்கால் நும்மகள் நுமக்காங் கனையளே"[89]**

என்பதனால் அறியலாம்.

உலக வாழ்வில் பிறப்பும் இறப்பும், கேடும் ஆக்கமும் மாறி மாறி வருதல் இயற்கை. இத்தன்மை திங்களின் வளர்ச்சி தேய்வுகளால் ஆவதைத்

**"தேய்தல் உண்மையும் பெருகல் உண்மையும்**
**மாய்தல் உண்மையும் பிறத்தல் உண்மையும்**
**அறியா தோரையும் அறியக் காட்டித்**
**திங்கள் புத்தேள் திரிதரும்"[90]**

என்ற புறப்பாடல் உணர்த்தும்.

அங்கும் இங்கும் ஓடித்திரிந்து ஒரு பகல் பொழுதிலேயே இறக்கும் 'ஈயல்' மூலம் வாழ்க்கை நிலையாமையை எடுத்தியம்புகிறார். அது

**"நுண்பல சிதலை அந்துமுயன் றெடுத்த**
**செம்புற் றீயல் போல**
**ஒருபகல் வாழ்க்கைக் குலமரு வோரே"[91]**

என்பதனால் அறிய முடிகிறது.

## இயற்கைப் பெயரால் நூல்களும் உள்தலைப்புகளும்

குறிஞ்சிப்பாட்டு, முல்லைப்பாட்டு, நெடுநல்வாடை, மலைபடுகடாம், மதுரைக்காஞ்சி, பட்டினப்பாலை ஆகிய நூல்களின் பெயர் இயற்கைப் பொருள்களின் பெயராய் அமைந்துள்ளன.

வேழப்பத்து (2–வது) ஞாழற்பத்து (15வது), நெய்தற்பத்து (19வது), கள்வன் பத்து (3வது) எருமைப்பத்து (10வது), வெள்ளாங்குருகுப் பத்து (16வது), சிறுவெண்காக்கைப் பத்து (17வது), வளைப் பத்து (20வது), கேழற்பத்து (27வது); குரக்குப்பத்து (28வது), கிள்ளைப்பத்து (29வது), மஞ்ஞைப்பத்து (30வது) ஆகிய கருப்பொருளைக்கொண்ட உள்தலைப்புகளும் இடைச்சுரப்பத்து (33வது); புறவணிப்பத்து (44வது), இளவேனிற்பத்து (35வது); ஆகிய முதற்பொருள்களைக் கொண்ட உள் தலைப்புகளும் இயற்கைப் பொருள்களாக இடம் பெற்றுள்ளன.

பதிற்றுப்பத்தில் 27 பாடல்களின் தலைப்புகள் இயற்கைப் பொருள்களாய் உள்ளன. அவை வருமாறு: பூத்த நெய்தல், நிரைய வெள்ளம், வளனறு பைதிரம், ததைந்த காஞ்சி, சீர்சால் வெள்ளம், கான் உணங்கு கடுநெறி, காடுறு கடுநெறி, தொடர்ந்த குவளை, உருத்துவரு மலிர்நிறை, கமழ்குரல் துழாய், கழை அமல் கழனி, நாடு காண் அவிர்சுடர், சுடர் வீவேங்கை, வெருவருபுனல்தார், வடுசுடு நுண் அயிர், சிறுசெங்குவளை, குண்டுகண் அகழி, மாகூர்திங்கள், மரம்படு தீங்கனி, புதல்சூழ் பறவை, மண்கெழு ஞாலம், பறைக்குரல் அருவி, உருத்தெழு வெள்ளம், வினை நவில் யானை, தொழில் நவில் யானை, நாடுகாண் நெடுவரை, வெண்தலைச் செம்புனல் என்பனவாகும்.

குறிஞ்சிப்பாட்டில் கபிலர் தொண்ணூற்றொன்பது வகையான மலர்களைச் சுட்டிச் சென்றுள்ளார். இவையெல்லாம் பழந்தமிழரின் இயற்கை நாட்டத்தினையும் அவர்களின் இயற்கை அறிவினையும் வெளிப்படுத்தும்.

## சங்க இலக்கியத்தில் அகப்பொருள் இலக்கிய, புறப்பொருள் இலக்கிய இயற்கை வேறுபாடுகள் - பயன்பாடு

சங்க அகப்பாடல்களில் சுட்டி ஒருவர் பெயர் கொளப்பெறார். சங்கப் புறப்பொருள் இலக்கியத்தில் இன்னார் எனப் பெயர் சுட்டப் பெறலாம். அக

இலக்கியம் தலைவன் தலைவியின் இல்வாழ்க்கையைக் கொண்டது. புற இலக்கியம் வெற்றி, கொடை, வீரம் முதலியன உள்ளடக்கிய உலக வாழ்க்கையைச் சார்ந்தது.

இயற்கைப் பொருள் தாக்கம் புறப்பொருள் இலக்கியத்தைக் காட்டிலும் அகப்பொருள் இலக்கியத்தில் அதிகம் உள்ளது.

சங்க அகப்பாட்டுகள் யாவும் இயற்கையோடு விரவிய வகையிலேயே உணர்வுகளை ஓவியமாக்கிக் காட்டுகின்றன.

தலைவன், தலைவி, தோழி முதலியவர்களின் செயல்களை அவர்களின் கூற்றுகள் வாயிலாகவும் அனுபவங்கள் வாயிலாகவும் வெளிப்படுத்துகின்றன சங்க இலக்கியத்தின் அகப்பாடல்கள். எனவே பண்டைய அகப்பொருட்பாடல்களை நாடக இயல்பின எனக் குறிப்பிடல் வேண்டும். அகப்பாடல்களில் முதல், கரு, உரி என்ற மூன்று பொருள்களும் இடம் பெறுவதால் அகப் பாடல்கள் நாடகப் பண்பினை நன்கு பெற்று ஒளிர்கின்றன.

அகப்பாடல்கள் காதல் உணர்வின் பல நிலைகளைக் குறிப்பிட நிலப்பகுதிகளுக்கும் பருவங்களுக்கும் நேரம் வகுத்தன. அகப்பொருளுக்கே உரியதாக உள்ளுறையும் இறைச்சியும் பயின்று வந்துள்ளன.

இயற்கை தன் ஆற்றலால் மனித வாழ்க்கையைக் கவரவும் மாற்றவும் வல்லது என்ற உண்மை புறப்பாடல்களைவிட அகப்பொருட் பாடல்களில்தான் மிகத் தெளிவாகப் புலப்படுகிறது. “அகப்பொருட் பாடல்களைப் போலப் புறப்பொருட்பாடல்களில் இயற்கை விளக்கம் பெருவரவிற்றாக இல்லை” என்பார் மு.வரதராசனார்.[92]

**புறப்பாடல்களில் இயற்கை**

புலவர்கள் தங்களுடைய புரவலரைப் பாடும்போது அத்தலைவரின் உரிமைச் செல்வமான நிலப் பகுதியின் நீர்வள நில வளங்களைப் பற்றியும் அங்கே நிலவும் இயற்கை எழிலைப் பற்றியும் பாடுவார்கள். பகைவர்களுடைய நாடுகள் முன்னே எவ்வாறு வளம் செழித்து, எழில் கொழித்து இருந்தன என்று குறிப்பிட்டு, அவை தம்மால் பாடப்படும் புரவலனின் படையெடுப்பால் எவ்வாறு பாழாயின என்று விரிவாகப் பாடுவர். பகைவர் நாட்டுச் சீரழிவையும் புரவலர் நாட்டுச் சீர் சிறப்புகளையும் சங்கப் புலவர் பாடியுள்ளனர். இவ்வகைச் செய்திகள் பதிற்றுப்பத்திலும் புறநானூற்றிலும் பெருமளவில் இடம் பெறுவதைக் காண்கிறோம்.

புறப்பொருள் பாடல்களில் இயற்கை வருணனைக்கு ஆற்றுப்படைப் பாடல்கள் பெருமளவில் இடமளிக்கின்றன. ஆற்றுப்படையில் வள்ளலின் உறைவிடத்திற்கு வழி கூறும்போது, வழி நெடுகிலும் உள்ள இயற்கைக் காட்சிகள் கூறப் பெறுகின்றன. அந்த இயற்கைக் காட்சியில் குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல்,பாலை ஆகிய ஐந்து நில வருணனைகள் இடம் பெறுகின்றன. ஐவகை நிலங்களிலும் அந்தந்த நில மக்கள் வழிப்போக்கர்களாகிய இரவலர்களுக்கு விருந்தளிப்பதையும் அறிகிறோம். ஆற்றுப்படையில் விரிவான வருணனைகள் இடம் பெறுகிறது. திருமுருகாற்றுப்படையின் தொடக்கத்தில் அமைந்த மலைக்காட்சியையும் இறுதியில் பொலியும் அருவிக் காட்சியையும் விடுத்து நோக்கினால் இயற்கைக்கு இடமில்லை என்றே சொல்லுதல் வேண்டும். ஆயின் ஏனைய நான்கு ஆற்றுப்படைகளிலும் இயற்கையின் திருவோலக்கமே மிகப்பெரிதும் போற்றப்படுகிறது.

## பாலைக்கொடுமை

அகப்பொருள் நூல்களில் ஏனைய திணைகளைக் காட்டிலும் மிகுதியாக விரித்து ஓதப்படுவது பாலைத் திணையே ஆகும் என்பார் மு.வ.[93] புறப்பாடல்களில் காட்டப்படுவதைவிட அகப்பாடல்களில் பாலையின் கொடுமை தலைவிரித்தாடுகிறது. ஆற்றுப்படை இலக்கியத்திலும் பாலைநில வருணனை வருகிறது. ஆயின் அதில் பாலை நில வருணனையுடன் விருந்தோம்பலின் இனிமையும் செம்மையும் இடம்பெறுகின்றன என்பதை நெஞ்சில் நிறுத்த வேண்டும்.

சங்க அகப்பொருள் இலக்கியத்தில் பாலைத்திணையின் கொடுமை பேசப்படுகிறது. அங்கே அகப்பொருளில் இருந்த பாலைக் கொடுமை பிற்காலப் புறப்பொருள் இலக்கியமான பரணி இலக்கியத்தில் போர் பாடியது, பாலை பாடியது பகுதிகளில் தலைவிரித்தாடுகிறது.

## தாலாட்டு, பள்ளி எழுச்சி

ஆற்றுப்படை இலக்கியத்தில் பாணன் விடியற் காலத்தே அரண்மனை புறமாகச் சென்று தடாரி என்ற இயத்தை இயம்புகிறான். அதனைக் கேட்ட அளவிலேயே அவ்வள்ளல் இரவலருக்குப் பரிசளிப்பதாக வருகிறது. இதில் பாணன் இயத்தை விடியற்காலத்தில் பாடுவதன் வாயிலாக அரசன் எழுகிறான். அதன் வளர்ச்சியாகப் பள்ளி எழுச்சி என்ற இலக்கியம் தோற்றம் பெற்றது எனலாம்.

இப்பள்ளி எழுச்சியே பக்தி இலக்கியத்தில் திருப்பள்ளியெழுச்சியாக வளர்ச்சியடைந்தது.

அகப்பொருள் மயக்கத்தில் உரிப்பொருள் அல்லாதன மயங்கப்பெறும். இருநிலங்கள் ஒருங்கு மயங்குதல் அகப்பொருளில் இல்லை.

புறப்பொருளில் ஒழுக்க மயக்கமும் பொழுது, கருப்பொருள் மயக்கங்களும் காணப்படுகின்றன. நிலம் இரண்டு மயங்கிய இயற்கை வருணனையைப் புறப்பாடல்களில் காணலாம்.

புறப்பாடல்களில் புலவர்தாமே நேரில் கூறும் கூற்றுகள் இடம்பெறுகின்றன. புலவர்கள் தம்மை வெளிப்படுத்திக்கொள்ளப் புறப்பாடல்களைப் பயன்படுத்திக் கொள்கின்றனர்.

இயற்கை ஓவியங்கள் பெருவரவிற்றாக உவமையில் வருதலைக் காண்கிறோம்.

பரிபாடல் அகமும் புறமும் உடைய பாடல்களைக் கொண்டது. இதில் திருமாலிருஞ்சோலை திருப்பரங்குன்றம் ஆகிய மலைகளைப் பற்றிய மலை வருணனை வருவதைக் காண்கிறோம்.

## காப்பியத்தில் இயற்கை

சங்கத் தனிப் பாடல்களில் சுருங்கிய சொற்கோப்புடன் வருணனை அமைந்தது. தனியான ஆற்றுப்படை இலக்கியத்தில் வருணனை சற்று அதிகரித்தது. இயற்கை, தொடர்நிலைச் செய்யுட்களின் காலத்தில் மாறியது. சில அடிகளைத் தனதாக்கிக் கொண்டு முகிழ்ந்த இயற்கை, பல அடிகளோடு, பல பாடல்களையும், படலத்தையும் சருக்கத்தின் பகுதியையும் தனதாக்கிக் கொண்டு வளர்ந்தது.

பெருங்காப்பியத்தின் இலக்கணமாகத் தண்டியலங்காரம்,

**“மலைகட னாடு வளநகர் பருவம்**
**இருசுடர்த் தோற்றமென் றினையன புணர்ந்து**
**நன்மணம் புணர்தல் பொன்முடி கவித்தல்**
**பூம்பொழில் நுகர்தல் புனல்விளை யாடல்**
**தேம்பிழி மதுக்களி சிறுவரைப் பெறுதல்”**[94]

என்று கூறுகிறது.

இவற்றுள் இயற்கைத் தோற்றங்கள் மலை, கடல், நாடு, நகர், பருவம், இருசுடர் தோற்றம் ஆகியவை அடங்கும்.

காப்பிய இலக்கணத்தை வரையறை செய்வதில் இலக்கண விளக்கம், தொன்னூல் விளக்கம், பிரபந்த மரபியல் ஆகியன முழுமையாகத் தண்டியலங்காரத்தைப் பின்பற்றுகின்றன.

நவநீதப் பாட்டியல்,

**"மலையாறு நாடூர் மலர்த்தார் வயம்பரி வார்மதத்த**
**கொலையார் களிறு கொடிமுர சாணை குலவு பத்தும்**
**தலையான நூலோர் தசாங்கத் தென்ப"**[95]

என்ற நூற்பாவால் இப்பத்து அங்கங்களும் (தசாங்கம்) காப்பியத்தில் இடம்பெற வேண்டும் என அறிவுறுத்துகிறது. இதிலேயும்அதிக அளவு இயற்கைப் பொருள் இடம்பெறுவதை அறியலாம். இவ்வகை இயற்கையெல்லாம் காப்பியத்தில் இடம்பெற்று இயற்கை வருணனை விரிவடைந்தது. ஆற்றுப்படையின் வருணனையின் வளர்ச்சியே 'தசாங்கம்' தோன்ற வழிகோலியது எனலாம்.

**பக்தி இலக்கியத்தில் இயற்கை**

தொடர்நிலைச் செய்யுள் நிலையிலிருந்து மாறி, பக்தி இலக்கியத்தில் மீண்டும் தனிப்பாடல் நிலையில் இயற்கை சென்றது. நாயன்மார்களும் ஆழ்வார்களும் இயற்கையை இறைவனாகக் கண்டனர். ஐம்பூதங்களையும் இறையோடு தொடர்புபடுத்தினர்.

**தற்காலம்**

பாரதியார், பாரதிதாசன் உள்ளிட்டோர் இயற்கையை இயற்கையாகவே பாடியுள்ளனர். பாரதியார், 'திக்கெட்டும் அதிர இடியிடித்து மின்னி மழை

பொழிதலை 'மழை' எனும் பாடலில் வடித்தார். மேலும் அவர் இயற்கையைப்,

**"புல்லை நகையுறுத்திப் பூவை வியப்பாக்கி**
**மண்ணைத் தெளிவாக்கி நீரில் மலர்ச்சிறந்து**
**விண்ணை வெளியாக்கி விந்தைசெயுஞ் சோதி"[96]**

என்று பாடினார். கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை அவர்கள்,

**"மீனினம் ஓடிப் பறக்குதம்மா—ஊடே**
**வெள்ளி ஓடமொன்று சொல்லுதம்மா**
**வானும் கடலாக மாறுதம்மா—இந்த**
**மாட்சியில் உள்ளம் முழுகுதம்மா"[97]**

என்பர். இராமலிங்கம் பிள்ளை அவர்கள்,

எழுசுடர் சோதியான இறைவனை இறைஞ்சி நிற்றலைச்

**"சூரியன் வருவது யாராலே?**
**சந்திரன் திரிவதும் எவராலே"[98]**

என்னும் பாடலால் விளக்கிக் காட்டுவார்.

பாவேந்தர் பாரதிதாசன் குன்றின் கோலக் காட்சியை,

**"அருவிகள் வயிரத் தொங்கல்**
**அடர்கொடி பச்சைப் பட்டே**
**குருவிகள் தங்கக் கட்டி**
**குளிர்மலர் மணியின் குப்பை**
**எருதின்மேல் பாயும் வேங்கை**
**நிலவுமேல் எழுந்த மின்னல்**
**சருகெலாம் ஒளிசேர் தங்கத்**
**தகடுகள் பாரடாநீ"[99]**

என்று பாடி வியப்படைகிறார். இதன்வழித் தற்காலப் புலவர் இயற்கையை இயற்கையாகப் பாடுகின்றனர் என்பது புலப்படும்.

இவ்வாறாகப் பல்வகையாக நோக்கும்போது எவ்விடத்தும் எக்காலத்தும் ஒரு படித்தாகவே உள்ள இயற்கை, பாடுகிறவர்களின் நோக்கத்திற்கேற்ப அவர்தம் படைப்புகளில் புலப்படுத்தப்படுவதை உணர்ந்து கொள்ளலாம். “எல்லாக் காலத்தும் மனித இதயத்தையும் கவர்ந்து தன்வயப்படுத்துவதோடு தன்வயமாக்கும் ஆற்றல் இயற்கைக்கு உண்டு”[100] என்னும் மு.வ.வின் கூற்று நினைவு கூரத்தக்கதாகும். சங்க இலக்கியத்தின் மையம் மானிட வாழ்வே. இயற்கை அதற்கு உறுதுணையாய் இரண்டாம் இடமே பெறுகிறது. இயற்கைக் காட்சிகளைப் பாடுதலில் எவ்வகைத் தயக்கத்தையும் அப்புலவர்களிடையே காண இயலவில்லை. வாழ்வின் கூறு வேறு, இயற்கை வேறு என்று பிரித்துணர முடியாத அளவில் சங்கப் புறப்பாடல்களில் இயற்கை பயின்று வந்துள்ளதை அறியலாம்.

## தொகுப்புரை

முச்சங்கத்தில் கடைச்சங்க காலத்தில் தோன்றிய நூல்களே சங்க இலக்கியமாகும்.

மக்கள் வாழ்விற்கும் உணர்விற்கும் இயற்கை பின்னணியாக அமைந்துள்ளது.

இயற்கைப் பொருள்களாக ஐம்பூதங்களும், தாவரங்களும், நீர்வாழ்வனவும், ஊர்வனவும், பறப்பனவும், விலங்குகளும் விளங்குகின்றன. மேலும் மனிதர்களும் இயற்கையில் அடங்குவர் எனலாம். ‘இயற்கை’ என்ற சொல்லின் பொருளையும் அச்சொல் சங்கப் புறப் பாடல்களில் பயின்று வருவதையும் இயற்கையின் இன்றியமையாமையும் அறிய முடிகிறது.

நிலவியல் அடிப்படையில் நிலத்தை மனிதன் நானிலமாகப் பிரித்தான்; நுணுகிப் பார்த்து மேலும் ஒரு நிலமான ‘பாலை’ என்ற நிலத்தையும் சேர்த்துக் கொண்டு ஐந்நிலமாக அமைத்துக்கொண்டான்.

ஒவ்வொரு முதற்பொருளாகிய நிலத்துக்கும் அதற்குரிய பொழுது எவ்வகையில் பொருந்தி வருகிறது என்பதை அறிய முடிகிறது.

ஐவகை நிலத்தின் பெயரும் பூவின் பெயராக இருப்பதைத் தெளியமுடிகிறது.

புறத்திணையாகிய வெட்சி, சரந்தை, வஞ்சி ஆகியனவும் பூவின் பெயரையே பெற்றுள்ளன.

சங்க இலக்கியத்தில் இயற்கைப் பயன்பாடு மனித உணர்வுகளுடனும், உவமை, உள்ளுறை முதலியவற்றுடனும், வருணனையிடத்தும் நீதிகளையும் வாழ்வியல் உண்மைகளையும் கூறுமிடத்தும் வெளிப்படுகிறது.

அகத்திணை இலக்கியத்தில் பெருமளவில் வரும் உள்ளுறை புறத்திணை இலக்கியத்தில் குறிப்புப் பொருளில் சிறிதளவில் வருகிறது என்பதை அறிய முடிகிறது.

நூல்களின் பெயர்களும், நூலின் உள்தலைப்புப் பெயர்களும் இயற்கைப் பொருட்களின் பெயர்களைப் பெற்று விளங்குவதை அறிய முடிகிறது.

சங்க இலக்கிய அகப்பாடல்களுக்கும் புறப் பாடல்களுக்கும் உள்ள வேறுபாடுகளை அறிய முடிகிறது.

பிற்கால இலக்கியங்களில் இயற்கையின் தாக்கம் எவ்வகையில் உள்ளது என்ற போக்கும் சுட்டப்பட்டுள்ளது.

குறிப்புகள்

# சங்க இலக்கியத்தில் இயற்கைப் பயன்பாடு

1. M. Arnold, Essay's in Criticism, 'The Youth of Man, PP. 1-5., The Youth of Nature,PP. 10-15.'
2. இரா. மாயாண்டி, சங்க இலக்கியத்தில் கற்பனை, ப.143.
3. நற்றி. 99: 6–10.
4. திரு.வி. கலியாண சுந்தரனார், முருகன் அல்லது அழகு, ப. 13.
5. ச. மல்லிகா, கண்ணதாசனின் திரை இசைப்பாடல்களில் இயற்கை ஆய்வேடு, ப. 3.
6. ச.வே. சுப்பிரமணியன் (பதி), சங்க இலக்கியக் கட்டுரைகள் கருத்தரங்கம், ப. 9.
7. சி.கோ. சுப்பிரமணிய முதலியார் (உரை), திருத்தொண்டர் புராணம் (இரண்டாம் பகுதி), ப. 1231.
8. பாரதிதாசன், அழகின் சிரிப்பு, பட்டணம் பாடல் 2.
9. மேற்படி, குன்றம், பாடல் 2.
10. இராம. குருநாதன், குறிஞ்சி வளம், ப. 77
11. தொல். சொல். கிளவியாக்கம், நூ. 19.
12. தொல். சொல். சேனாவரையர், கிளவியாக்கம், நூ. 19.
13. கழகத் தமிழ் அகராதி, ப. 130.
14. தமிழ்–தமிழ் அகர முதலி, ப. 114.
15. தமிழ் லெக்ஸிகன், தொகுதி–1, சென்னைப் பல்கலைக்கழகம், ப.302.
16. மதுரைத் தமிழ்ப் பேரகராதி, ப. 260.

17. கிரியாவின் தற்காலத் தமிழ் அகராதி, 1992, ப. 101.

18. திவாகர நிகண்டு, நூ. 187.

19. பிங்கல நிகண்டு, நூ. 3429.

20. English Tamil Dictionary, P. 660

21. முருகு. 17.

22. திரு.வி. கலியாண சுந்தரனார், முருகன் அல்லது அழகு, ப. 13.

23. அன்னி மிருதுலகுமாரி தாமசு, பரிபாடலில் இயற்கை, ப. 18.

24. புறம். 2:6

25. மேற்படி. 45:6

26 மேற்படி. 76:1–2

27. முருகு. 167.

28. மலைபடு. 83.

29. நற்றி. 201:11.

30. குறுந். 229:7.

31. பரி. 2:1.

32. கலித். 22:3.

33. அகம். 255:4.

34. மேற்படி, 353:5.

35. மேற்படி, 384:9.

36. புறம். 35:27–28.

37. திரு.வி. கலியாண சுந்தரனார், சைவத்தின் சமரசம், ப.39.

38. இராம. பெரிய கருப்பன், சங்க இலக்கிய ஒப்பீடு, இலக்கிய வகைகள், ப.130.

39. புறம். 2:1–6.

40. குறள். 20.

41. புறம். 1:11–12.

42. மேற்படி, 18:18

43. குறள்.11.

44. புறம். 203:1–3

45. மறைமலை அடிகள், தமிழர் மதம், ப. 50.

46. திரு.வி. கலியாண சுந்தரனார், முருகன் அல்லது அழகு, ப. 27.

47. Xavier. S.Thaninayagam, Landscape and Poetry, P. 22.

48. Abercrombie, Principles of literary Criticism, 1971, P. 141.

49. தொல். பொருள்., அகத்திணையியல், நூ. 7–8.

50. தொல். பொருள்., அகத்திணையியல், நூ. 6.

51. தொல். பொருள்., அகத்திணையியல், நச்சர் உரை.

52. தொல். பொருள்., அகத்திணையியல், நூ. 6.

53. தொல். பொருள்., அகத்திணையியல், நூ. 8.

54. தொல். பொருள்., அகத்திணையியல், நூ. 10.

55. சிலம்பு. நாடுகாண்., 62–66.

56. தொல். பொருள்., அகத்திணையியல், நூ. 11.

57. தொல். பொருள்., அகத்திணையியல், நூ. 12.

58. தொல். பொருள்., அகத்திணையியல், நூ. 11.

59. மு. வரதராசனார், பழந்தமிழ் இலக்கியத்தில் இயற்கை (மொ), ப. 25.

60. தொல். பொருள்., அகத்திணையியல் (இளம்பூரணர் உரை), நூ. 5.

61. தொல். பொருள்., அகத்திணையியல் (இளம்பூரணர் உரை), நூ. 5.

62. தொல். பொருள்., புறத்திணையியல் (இளம்பூரணர் உரை), நூ. 59.

63. தொல். பொருள்., புறத்திணையியல் (இளம்பூரணர் உரை), நூ. 64.

64. தொல். பொருள்., புறத்திணையியல் (இளம்பூரணர் உரை), நூ. 67.

65. தொல். பொருள்., புறத்திணையியல் (இளம்பூரணர் உரை), நூ. 70.

66. தொல். பொருள்., புறத்திணையியல் (இளம்பூரணர் உரை), நூ. 70.

67. தொல். பொருள்., புறத்திணையியல் (இளம்பூரணர் உரை), நூ. 73.

68. தொல். பொருள்., புறத்திணையியல் (இளம்பூரணர் உரை), நூ. 76.

69. சாந்தகுமாரி. இர. பெரியபுராணத்தில் இயற்கை (ஆய்வேடு), ப. 24.

70. தொல். பொருள்., புறத்திணையியல் (இளம்பூரணர் உரை), நூ. 78.

71. அன்னி மிருதுலகுமாரி தாமசு. பரிபாடலில் இயற்கை, ப. 43.

72. குறுந்.3.

73. குறுந்.32:1–3.

74. குறுந்.126:3–5.

75. புறம்.242:5–6.

76. புறம்.112.

77. குறுந்.163.

78. மு.வரதராசன். பழந்தமிழ் இலக்கியத்தில் இயற்கை (மொ) ப. 17.

79. குறுந். 315:2–4.

80. புறம். 155:4–5.

81. ஐங்கு. 44.

82. புறம். 23:18–22.

83. மேற்படி, 200:1–5.

84. பொருந. 200–202.

85. சிறுபாண். 146–149.

86. மேற்படி, 93–96.

87. புறம். 109:1–10.

88. நற்றி. 1:3–5.

89. கலித். 9:12–17.

90. புறம். 27:11–14.

91. மேற்படி, 51:1–11.

92. மு.வரதராசனார், பழந்தமிழ் இலக்கியத்தில் இயற்கை, ப.34.

93. மேற்படி, ப.35.

94. தண்டியலங்காரம், நூ. 8.

95. நவநீதப்பாட்டியல், நூற். 24.

96. பாரதியார், பாரதியார் கவிதைகள் (குயில்பாட்டு), ப. 366

97. கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை, மலரும் மாலையும், ப. 305.

98. அ. இராமலிங்கம் பிள்ளை, நாமக்கல் கவிஞர் பாடல்கள், பா. 3:4.

99. பாரதிதாசன், அழகின் சிரிப்பு, சிற்றூர்–பா.8.

100. மு.வரதராசன், பழந்தமிழ் இலக்கியத்தில் இயற்கை (மொ), ப.32.

**இயல் - இரண்டு**

# இட வருணனை

இந்த இயல் ஆற்றுப்படையால் அறியலாகும் குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என்ற ஐவகை நில வருணனைகளை ஆய்கின்றது. ஆற்றுப்படை வாயிலாக அறியலாகும் ஐவகை நில வருணனைப் பகுதியில் உலகத் தோற்றம், தமிழக எல்லை ஆகியன குறித்தும் குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் ஆகிய நானிலம் பற்றியும் திணை மயக்கம் பற்றியும் பாலை நிலம் குறித்தும் ஆய்கிறது. மேலும் புறப்பாடல்கள் வழி மலைகள், ஆறுகள், குறித்தும் இவ்வியல் ஆய்கிறது.

## உலகம்

உலகம் நிலம், நீர், தீ, வளி, விசும்பு ஆகிய ஐந்தும் ஒன்றோடு ஒன்று கலந்து இணைந்தது என்பதைப் பண்டைத் தமிழர் கண்டு அறிந்திருந்தனர். இதனைத் தொல்காப்பியர்,

> **“நிலம்நீர் தீவளி விசும்பொ டைந்தும்**
> **கலந்த மயக்கம் உலகம்”[1]**

எனச் சுட்டுகிறார். மாங்குடிமருதனாரும்,

> **“நீரு நிலனுந் தீயும் வளியும்**
> **மாக விசும்போடு ஐந்துடன் இயற்றிய”[2]**

என்று கூறிச் சென்றுள்ளார். இதன் விளக்கமாக ‘மண்திணிந்த நிலனும்’ எனத் தொடங்கும் புறநானூற்றுப் பாடலானது ஒன்றை ஒன்று அடுத்துள்ள நிலையில் விரவிய புவியினை அதன் அமைப்பினை உணர்த்தும்.[3] மண் திணிந்த நிலம் என்பது அணுவிற்குள் செறிந்த புவியினைக் குறிப்பதாகக் கொள்ளலாம். நாம் வாழும் புவியின் தோற்றமும், ஆண்டு மலை தோன்றிய வரலாறும் அறியத்தக்கன.

**புவித்தோற்றம்**

ஞாயிற்றிலிருந்து விழுந்த துண்டம் சிறியனவும் பெரியனவுமாகி உருண்டை வடிவமாக மாறிப் புவிக்கோளாக ஆயிற்று.[4] ஞாயிற்றிலிருந்து பிரிந்த நிலையில் புவிக்கோள் எரிந்து கொண்டே இருந்தது. புவியின் சுழற்சி மிகுந்த விரைவுடன் அதிகரிக்க, வெப்பமும் மிகுதியாயிற்று. ஞாயிற்றின் கதிர் புவிக்கோள் மீதுபட, வளியின் ஆற்றல் குறையத் தொடங்கியது. வெம்மை குறைந்து புவிக்கோள் குளிர்ந்து இறுகிக் கெட்டிப்பட்டது.[5]

**மலையின் தோற்றம்**

கெட்டிப்பட்ட புவிக்கோள் உள்ளுக்குள் உருகுபாறைகளாய் அமைந்தது. உருகிய நிலையில் ஆழமாக உள்ளமைந்த திரவக் குழம்பு, திட நிலையால் மூடப்பட்டு அதன் மேற்பரப்புத் தடித்துக் கடினமாகியது. மேற்பரப்பு முறையாக மாறுதலடைந்து சுருங்கியது. புவிக்கோளின் அடியில் திண்மையும் நெருக்கமும் ஏற்பட்டு ஆண்டுள்ள கடினப் பகுதிகள் கெட்டியாக வெளித்தள்ளப்பெற்றன. இந்நிகழ்ச்சி தொடர்ந்து நிகழவும், நிலத்தின் மேற்பரப்புகளில் புடைத்தெழுந்த பகுதிகள் மலைகளாகத் தோன்றலாயின.[6] மேசையில் பரப்பிய விரிப்பினை நடுவில் பிடித்து இழுக்க, உள்ளிருக்கும் காற்றின் அழுத்தம் காரணமாக விரிப்பின் மேற்பரப்பில் மடிப்புத் தோன்றுவதை ஈண்டு நினைவுகூரலாம்.[7]

**கல்லும் மண்ணும் கலந்த நிலையில் மலை**

நிலப்பரப்பில் மலை நிலைத்து நிற்பது போல் காணப்பட்டாலும், அது மழையாலும் பனியாலும் சிறுகச் சிறுக அடித்துச் செல்லப்பட்டுக் கடலுள் ஆழும். வளி மண்டலத்தில் உள்ள எரிபொருள்களும் உயிர்வளியும் மலையினைக் கரைக்கும் இயல்பு வாய்ந்தமையே இதற்குக் காரணமாகும்.[8]

இதனை அறிந்துதான் "கல்தோன்றி மண்தோன்றாக் காலத்தே"[9] என்று ஐயனாரிதனார் குறித்தார் போலும். ஆகவே கல்தோன்றிய பின்னர் மண் தோன்றியது என்பதை அறியலாம்.

## ஆறுகளும் கடல்களும்

ஆறுகளும் கடல்களும் தோன்றிய தன்மையினையும் நிலவியலார் நன்கு ஆராய்ந்து கூறியுள்ளனர். "தணல் பிழம்பு குளிர்ந்து இறுகிப் பாறைப் படலாமாகும் போது நீராவிப்படலம் தோன்றி உலகைச் சூழ்ந்து நின்றது. தணல் படலம் பாறைப்படலமாக மாறியவுடன் நீராவிப் படலம் குளிர்ந்து விடா மழையாகப் பொழிந்தது. பொழிந்த நீர், ஊழிப் பெருக்கெடுத்து ஓடிப் பள்ளங்களில் தங்கியது. இவ்வாறு தங்கிய அகன்ற ஆழமான பள்ளங்களே கடல்கள்; பெருக்கெடுத்தோடிய வழிகளே ஆறுகள்."[10] இவ்வாறாக மலைகள், ஆறுகள், கடல்கள் கொண்ட நில உலகம் தோற்றம் பெற்றது.

## முதலில் மனித வாழ்வு மலையில்

மலையில்தான் மனிதர் முதன்முதலாக வாழத் தொடங்கினர். பழந்தமிழரும் மலையில்தான் முதன்முதலில் வாழ்வு பெற்றனர் என்பார் திரு.வி.க.[11]

## கடல்கோள்

'கோண்டுவனா' என்ற பகுதி கடல்கோளால் அழிவுற்றது. அதில் தென்னகம் இருந்த லெமூரியாக் கண்டம் அழிவுற்றபோது குமரிக்கோடும் அவ்வாறே கடலில் அமிழ்ந்தது. உயர்ந்த கொடுமுடிகளாக விளங்கும் ஆல்ப்சும்(Alps) இமயமலையும் கடலிலிருந்து தோன்றியவையே. கடல்கோள் ஏற்பட்ட வேளையில் ஆழ்கடலின் அடியில் இருந்த இமயம் உலகின் உயர்ந்த சிகரமாய் மேலோங்கியது என்பார் அ.மு. பரமசிவானந்தம்.[12]

குமரிமலையோடு பல மலைகள் இருந்தமையும் அவற்றில் குமரிமலை உயர்ந்து தனித்தன்மையுடன் விளங்கியமையும் அவை ஒருசேரப் பின்னாளில் கடலால் கொள்ளப்பட்டமையும் சிலப்பதிகாரத்தால் உணர்த்தப் பெறுகின்றன.[13] கடல் கொண்ட குமரி நாட்டில் ஓடிய பஃறுளி ஆற்றினைப் புறநானூற்றுச் செய்யுள்,

**"எங்கோ வாழிய குடுமி தங்கோச்**
**செந்நீர் பசும்பொன் வயிரியர்க் கீந்த**
**முந்நீர் விழவின் நெடியோன்**
**நன்னீர்ப் பஃறுளி மணலினும் பலவே"**[14]

என்று குறிப்பிடுகிறது. இப்பாட்டால் தொல்பழங்காலத்தில் பாண்டிய நாட்டில் பஃறுளி ஆறு ஓடியது என்பதை அறிய முடிகிறது. அங்கே இருந்த நாற்பத்தொன்பது நாடுகளையும் கடல் கொண்டது என்பார் சி. பாலசுப்பிரமணியன்.[15]

## தமிழ் நாட்டு எல்லைகள்

தமிழ் நாட்டு எல்லை என்பது தமிழகத்தின் வடக்கும் தெற்கும் கிழக்கும் மேற்கும் ஆகிய நாற்புற எல்லைகளே ஆகும். கிழக்கு வங்கக் கடலாலும் மேற்கு அரபிக் கடலாலும் சூழப்பட்டிருந்தன; சூழப்பட்டிருக்கின்றன. பல்வேறு கால நிலைகளிலும் இவ்விரு எல்லைகளில் பெருமாற்றம் தோன்றியதில்லை. வடக்கும் தெற்குமே ஆய்தற்குரியன. அவற்றுள்ளும் தெற்குப் பற்றி மாறுபட்ட கருத்துகள் இருப்பினும் சிக்கல் மிகுதியும் இல்லை. தெற்கின் எல்லை எதுவாக இருந்தாலும் அது பண்டைத் தமிழகமாகவே இருந்தது. வடக்கு எல்லை பல மாறுபட்ட கருத்துகளுக்கு இடம் தருகிறது.

**தெற்கு எல்லை**

சங்க காலம் முதல் இன்று வரை குமரிமுனையே தெற்கு எல்லையாக அமைய, அதற்கு முன்னர்த் தமிழகம் தென்குமரியின் தெற்கில் விரிந்து பரந்து இருந்தது என்பதற்கு அகச் சான்றுகளும் அறிஞர் கருத்துகளும் மிகுதியாக உள்ளன.

தொல்காப்பியப் பாயிரத்தில் பனம்பாரனார், "வடவேங்கடம் தென்குமரி ஆயிடைத் தமிழ்கூறும் நல்லுலகம்"[16] என்று கூறுகிறார். குமரிக்குத் தெற்கில் இருந்த பஃறுளியாறும் பன்மலை அடுக்கமும் அழிந்தன என்று சிலம்பு கூறும்.

பஃறுளியாறு குமரி நாட்டில் பாய்ந்த ஓராறு என்றும், அது பாய்ந்த குமரி நாடு மிகப் பெரியதொரு நிலனாயிருந்தது என்றும் மறைமலையடிகள் குறிப்பிடுவார்.[17] ஆனால் ந.சி. கந்தையா பிள்ளை பஃறுளியே மறைந்த தமிழகத்தின் தெற்கெல்லை என்ற வகையில் "குமரி நாட்டின்கண் வடக்கே குமரியாறும் தெற்கே பஃறுளியாறும் ஓடிக் கொண்டிருந்தன என்பார்."[18] "பஃறுளியாறு குமரியாற்றுக்குத் தெற்கின்கண் ஓடிய ஓராறு" என்று கூறுவார் உ.வே.சா.[19]

இருவர் கருத்தும் பொருந்தாதென்று நாவலர் சோமசுந்தர பாரதியார் விளக்கிக்காட்டுகிறார். குமரியாற்றின் தெற்கின்கண் ஓடியது பஃறுளி என அவர்கள் குறிப்பது சரியானால், குமரி தமிழகத்தின் தெற்கு எல்லை என்பது பொருந்துமாறில்லை. குமரி தமிழகத்தின் தென்கரை எல்லை யாதலின் குமரிக்குத் தெற்கே பாண்டியனுடைய பஃறுளியாறு ஓடிற்றாயின் அந்த ஆறும் அது ஓடிய பாண்டிய நாட்டின் நிலமும் தமிழ் வரம்பறுத்த நல்லுலகத்தின் புறம்பே இருந்தனவாகக் கொள்ள வேண்டும்.[20]

"வடவேங்கடம் தென்குமரி
ஆயிடைத் தமிழ்கூறும் நல்லுலகத்து"

என்னும் தொல்காப்பியப் பாயிர அடிகள் பழந்தமிழ் நாட்டின் தெற்கின்கண் கடைசியெல்லை குமரி என ஐயமறக் கூறுகின்றன[21] என்றும்,

"தென்குமரி வடபெருங்கல்
குணகுடகட லாவெல்லை"[22]

என்ற அடிகளை எடுத்துக்காட்டி, குமரியே தமிழகத்தின் தெற்கெல்லை என்றும் நிறுவுவார் சோமசுந்தர பாரதியார்.

குமரி தெற்கு எல்லையானால் பஃறுளியின் இடம் யாது? அதற்கும் பாரதியார் 'பஃறுளியாறு பாண்டிய நாட்டின் தெற்கில் ஒரு பகுதிக்கு எல்லை' என்று குறிப்பிட்டு, "அந்நாட்டுத் தென்பாலி முகத்திற்கு வடவெல்லையாகிய பஃறுளி யென்னும் ஆற்றிற்கும் குமரி என்னும் யாற்றிற்கும் இடையே எழுநூற்றுக் காவத ஆறும் கடல் கொண்டொழிதலால் தொடியோன் நதியுமென்னாது குமரியாகிய பௌவமென்றார் என்று சான்று காட்டுகிறார்."[23]

"முடிவாக முதலூழி இறுதியில் அழிந்த தமிழ்நாட்டுப் பகுதியினர் வடவெல்லை பஃறுளி என்பதும் அதன் தெற்கு எல்லை குமரியாற்றின் வடகரை என்பதும் தெளியலாம்"[24] எனத் தம் கருத்தினை நிறுவுகிறார்.

எனவே, பஃறுளி, குமரி ஆகிய இரண்டு ஆறுகளில் எது தமிழகத்தின் தெற்கெல்லையில் இருந்தது என்று வாதிடுவதைக் காட்டிலும், இந்த இரண்டும் கடந்த பரந்த நிலப்பரப்பு ஒன்று இன்றைய தமிழகத்தின் தெற்கில் இருந்தது என்று கொள்வது பொருத்தமுடையதாக அமையும்.

**வடக்கு எல்லை**

தமிழ் நாட்டு எல்லை மொழி இன அடிப்படையிலும் ஆட்சியின் அடிப்படையிலும் அமைகிறது. பழந்தமிழ் நாட்டின் வடக்கு எல்லையைச் சங்கப் பாடல்கள் சுட்டிக்காட்டுகின்றன.

தமிழ் நாட்டின் வடக்கு எல்லை குறித்து அறிஞர்கள் பல்வேறு நிலைகளில் ஆய்ந்துள்ளனர். "கிருட்டினா ஆற்றுக்குத் தெற்கே கன்னியாகுமரி வரையிலுள்ள நிலப்பரப்பு மூன்று பெருவேந்தராலும் ஏழு குறுநில மன்னராலும் ஆளப்பட்டது"[25] என்பார் ந.சி. கந்தையா.

தொல்காப்பியர் காலத்துக்கும் முற்பட்ட ஸ்மிருதிகள் வடமொழியில் உள்ளன. அவற்றின் மூலமாக நம் தமிழ்நாட்டின் வடவெல்லை துங்க பத்திரை என்று அறியும்போது நமக்குப் புதுமையாக இருக்கிறது என்று கூறுவார் மொ.அ. துரையரங்கசாமி.[26]

"இயற்கை நிகழ்ச்சிகளால் கடலில் அமிழ்ந்துபோன நிலப்பகுதிகள் போக எஞ்சியிருக்கும் இயற்கை எல்லைப்படி இக்காலத்தில் தமிழ் நாடாக இருக்க வேண்டுவது இப்போதைய இந்தியாவே ஆகும். வடக்கே இமயமலையும் தெற்கே குமரிக்கடலும் மேற்கும் கிழக்கும் கடல்களுமே இதன் எல்லைகள்"[27] என்று இமயமலையே பண்டைய தமிழ் நாட்டின் எல்லை என்று நிறுவுகிறார் இளவழகனார். ஆனால் இக்கருத்துக்கு மாறாக "வடவேங்கடம் வரையில் தமிழர்களுடைய நாடாகும் என்பது வெளிப்படை"[28] என்பார் சந்திரசேகரன்.

மிகமிக நெடுங்காலத்திற்கு முன்பு வடக்கே விந்திய மலையும் தெற்கே குமரிமலையும் கிழக்கும் மேற்கும் கடல்களும் பண்டைத் தமிழகத்தின் எல்லைகளாக இருந்தன என்ற ஜார்ஜ் எலியர் என்பாரின் கருத்தினைத் தம் நூலுள் தருகிறார் அ. திருமலை முத்துசாமி.[29]

மேற்கண்ட கருத்துகளைத் தொகுத்துக் காணுகிறபோது தமிழகத்தின் வடவெல்லையாக இமயம், வேங்கடம், விந்தியம் ஆகிய மூன்றும் கூறப்பட்டுள்ளதை அறிகிறோம். ஆனால், சங்க இலக்கியத்தில் யாண்டும் விந்தியம் வடவெல்லையாக இருந்ததற்குச் சான்றில்லை. ஆகவே வேங்கடம், இமயம் இரண்டுமே சங்க இலக்கியம் கூறும் வட எல்லைக் குறிப்புகள் எனலாம்.

தொல்காப்பியத்திற்குப் பாயிரம் வகுத்த பனம்பாரனார் காலத்தில் தமிழகத்தின் வடக்கு எல்லை வேங்கடமே என்பதில் ஐயமில்லை. இளம்பூரணர் கருத்தும் இதுவே. நாட்டெல்லையைக் காரிக்கிழார் என்பார்,

**"வடாஅது பனிபடு நெடுவரை வடக்கும்**
**தெனாஅது உருகெழு குமரியின் தெற்கும்**
**குணாஅது கரைபொரு தொடுகடற் குணக்கும்**
**குடாஅது தொன்றுமுதிர் பௌவத்தின் குடக்கும்"**[30]

என்று குறிப்பிடுகிறார். 'பனிபடு நெடுவரை' என்பதனால் இமயம் எல்லையாக இருந்தது என்ற குறிப்புப் பெறப்படுகிறது. குறுங்கோழியூர் கிழாரும் மாங்குடி மருதனாரும்,

**"தென்குமரி வடபெருங்கல்**
**குணகுடகட லாவெல்லை"**[31]

என்று தமிழகத்தின் எல்லையைக் குறிப்பிடுகின்றனர். இரு புலவரும் ஒரே தொடரை அமைத்திருப்பது கருதத்தக்கது. இவை இமயம் வரை தமிழக எல்லை பெருகி இருந்ததைப் புலப்படுத்தும். மேலும் 'இமயம்' என்று மலையின் பெயரையே பல சங்கப் பாடல்கள் தெளிவாகத் தருகின்றன.[32] அவை இமயம் பற்றிய செய்திகளைத் தருவதோடு அதனைத் தமிழ் மன்னர்கள் வென்ற செய்தியையும் குறிப்பிடுகின்றன. இமயவரம்பன்

நெடுங்சேரலாதன், ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியன் முதலிய மன்னர்களின் பெயர்களே அவர்கள் இமயம் வரை சென்று, வென்று, தங்கள் ஆட்சியை நிலைநாட்டியிருந்தனர் என்ற கருத்தினைத் தெளிவாக்குகின்றன.

ஆகவே, தமிழ் வேந்தர்கள் தாம் விரும்பிய காலத்து ஆட்சி விரிவு வேண்டி வடநாட்டின் மீது படையெடுத்து வென்றார்கள். ஆனால் அவர்கள் அந்நாட்டில் தங்கள் மொழி, பண்பாடு இவற்றை நிலைநாட்ட விரும்பவில்லை. மேலும் தமிழக மன்னர்கள் சிறந்த ஆட்சி அமைப்புப் பெற்றிருந்த காரணத்தால் வடபகுதியை மிக எளிதில் வென்றனர்.

இதுகாறும் கண்ட பல்வேறு செய்திகளுள் சங்க காலத் தமிழகம் மிகப்பரந்து விரிந்து காட்சியளிக்கிறது என்பதையும், கங்கையும், இமயமும் தமிழரின் எல்லைக்குள் குறிப்பிட்ட கால வரையறையில் இருந்தன என்பதையும் அறியமுடிகிறது.

இனி, வேங்கடம் வட எல்லை என்கிற கருத்து ஆராய வேண்டிய ஒன்றாகும்.

**"வேங்கட வரைப்பின் வடபுலம் பசித்தென"**[33]

என்று வேங்கடமும் வடபுலமும் பற்றிய குறிப்பு உள்ளது. இவ்வாறு குறிப்பதால் வேங்கடத்திற்கு அப்பாற்பட்ட வடபுலம் தமிழகத்தினின்று வேறுபுலம் என்று பொருள்படுகிறது. அதனால் தமிழகத்தின் எல்லை வடவேங்கடமே என்று பொருள் கொள்ள வேண்டியுள்ளது.

சங்கப் பாடல்கள் வெவ்வேறு வகையில் வேங்கடத்தைப் பற்றிக் குறிப்பிடுகின்றன.[34] எனவே வடவெல்லை வேங்கடமாகிறது. அப்படியானால் இமயம் வடவெல்லை எனக் குறித்த பாடல்கள் முரணானவையா? அல்லது கற்பனையில் கூறப்பட்டவையா? எனில், முரணும் அன்று. கற்பனையும் அன்று. இந்த இரண்டும் இரண்டு அடிப்படையில் அமைந்தவையாகும்.

ஒன்று இமயம் ஆட்சி அடிப்படையில் அமைந்தது. மற்றொன்று வேங்கடம் மொழி, இன அடிப்படையில் அமைந்தது. மேலும் "வேங்கடத்தெல்லையைக் குறிக்கின்ற பாடல்கள் மிகுதியும் அகப்பாடல்களாகவும். இமயத்தைக் குறிக்கின்ற பாடல்கள் புறப்பாடல்களாகவும் இருப்பது உற்று நோக்குதற்குரியது"[35] என்பார் மு. தங்கராசு.

அகம் தமிழகத்தின் உட்பகுதியையும் புறம் விரிந்துபரந்த ஆட்சிப் பகுதியையும் கூறியிருப்பது நோக்கத் தமிழ்ப் புலவர்கள் மரபு காத்து ஒழுகிய முறையும் விளங்குகிறது.

"'வடவேங்கடம் தென்குமரி ஆயிடைத் தமிழ் கூறும் நல்லுலகம்' எனப் பேசும் சிறப்புப் பாயிரத்தை இது பண்பாட்டு எல்லையன்று; மொழி பேசும் எல்லையே என்பது நன்கு புலப்படும்"[36] என்று கூறுவார் ப. அருணாசலம்.

"சங்க காலத் தமிழகத்தின் வடக்கு எல்லை வேங்கடமலை என்பதில் ஐயமில்லை என்று கூறுவார். மேலும் சங்க காலத்தில் தமிழ் மொழி பேசப்பட்ட தமிழகத்தின் வடக்கு எல்லைதான் இங்குக் கூறப்பட்டது. மொழி எல்லையின் வடபால் பிறமொழி பேசுபவர்கள் வாழ்ந்து வந்த இடங்களிலும் தமிழ்நாட்டு மூவேந்தர்களின் ஆட்சி பரந்திருந்தது என்பது தெளிவு"[37] என்பார் பொதுவன்.

**கிழக்கும் மேற்கும்**

சங்க இலக்கியத்தில் கிழக்கு மேற்கு என்பதற்குக் குணக்கு, குடக்கு என்ற சொற்களே பயின்று வருகின்றன. எல்லைகளைப் பொறுத்தவரையில் வடக்கும் தெற்கும் பற்றிக் குறிப்பிடும் போது ஏற்படுகிற சிக்கல் கிழக்கும் மேற்கும் பற்றிக் கூறும்போது எழுவதில்லை. கிழக்கும் மேற்கும் கடல்களால் சூழப்பெற்றுள்ளன என்பது தெளிவான செய்தியாகும்.

**“குணாஅது கரைபொரு தொடுகடற் குணக்கும்**

**குடாஅது தொன்றுமுதிர் பௌவத்தின் குடக்கும்”[38]**

என்றும்,

**“குணகுட கடலா வெல்லை”[39]**

என்றும்,

**“குணகுட கடலோ டாயிடை மணந்த”[40]**

என்றும் கூறப்பட்டுள்ளன. கடலானது கிழக்கும் மேற்கும் தமிழகத்தின் எல்லையாய் அமைந்த பாங்கினைச் சங்கப் பாடல்கள் விளக்கி நிற்கின்றன.

ஆகவே தமிழகத்தின் எல்லை மாற்றம் என்பது சேர, சோழ பாண்டியர்களுள்ளே அவ்வப்போது அவரவர் ஆற்றலுக்கேற்ப ஏற்பட்டதே ஒழியப் பிறநாட்டார் போரிட்டுக் கைக்கொண்டதால் ஏற்பட்டதாகக் கூற இயலாது. முப்பெரும் வேந்தர் மீதும் படையெடுத்துப் பிற நாட்டவர் எவரும் வெற்றி பெற்ற வரலாறு இல்லை. இயற்கை எல்லைப் பாதுகாப்பும், மன்னர்களின் விழிப்புணர்ச்சியும் மக்களின் கடப்பாட்டு உள்ளமும் சங்க கால மாந்தருக்கு நல்ல அமைதியையும் சிறந்த வளத்தையும் தந்து, நிறைவான வாழ்க்கையை அளித்தன.

## திணை (நில) வரலாறு

திணை என்னும் சொல் பெரும்பான்மையும் நிலத்தைக் குறிக்கிறது. பத்துப்பாட்டில் ‘பஃறிணை’[41] எனவும் ‘ஐம்பால் திணை’[42] எனவும் வரும் ‘திணை’ என்னும் சொற்கள் நிலத்தைச் சுட்டுகின்றன.

பழந்தமிழர் இயற்கையோடு அமைந்த நிலப்பகுப்பினை அழகுறக் கண்டு அதன் இயல்பிற்கு ஏற்பத் திணைப் பெயரிட்டு அழைத்தனர்.

மேகக் கூட்டங்களால் பெருமளவு மழை மலைகளில் பொழிய, மலைமீது பொழிந்த நீர் அருவிகளாக விழ, அருவிகள் பல ஒன்று சேர்ந்து

காட்டாறாக உருவெடுக்கிறது. அக்காட்டாறு பாய்ந்தோடக்கூடிய பகுதி முல்லை எனப்பெறுகிறது.

காட்டில் ஓடிய காட்டாற்று வெள்ளம் நாட்டில் ஓடி குளம் குட்டைகளை நிறைத்து மென்னிலமான நன்செய் நிலத்தில் வளம் சேர்க்கிறது. அந்த ஆறு பாய்ந்த நெறி மருதமாகும்.

ஆற்றில் ஓடிய மிகையான நீர் இறுதியாகக் கடலில் கலக்கிறது. அக்கடல் சார்ந்த வெளி நெய்தல் எனப்படுகிறது. பழந்தமிழர் இவற்றை 'நானிலம்' என்றழைத்தனர். முல்லையும் குறிஞ்சியும் முறைமையில் திரிந்து நல்லியல்பு இழத்தலைப் பாலையாகக் கண்டனர். இவ்வைந்து நிலப்பாகுபாடு மனித இனத்தின் சிறந்த தோற்ற வரலாற்றையும் நாகரிகத்தின் முன்னேற்றத்தையும் காட்டுகிறது என்பதைப் புவியியலாரும் மனிதவியலாரும் மிகப் பெரிய அளவில் ஆய்ந்து கூறியுள்ளனர்.[43] "இப்பாகுபாடு மனிதன் ஒரு நிலத்திலிருந்து இன்னொரு நிலத்தின்கண் பெற்ற நாகரிக வளர்ச்சியைக் காட்டும்"[44] என்பார் பி.டி. சீனிவாச அய்யங்கார். மேற்குறித்த ஐவகை இடவருணனைகள் குறித்து ஆற்றுப்படை வாயிலாகக் காணலாம்.

**தொல்காப்பியரும் ஆற்றுப்படையும்**

பரிசில் பெற்று வரும் ஒருவன், தன் எதிர்ப்பட்ட தன்னையொத்த வேறொருவனைத், தான் பரிசில் பெற்ற தலைவனின் இயல்பு முதலியவற்றைக் கூறி, அவனிடம் ஆற்றுப்படுத்துவது ஆற்றுப்படையாகும். இவ்வாறு ஆற்றுப்படுத்தற்குரியோராகக் கூத்தர், பாணர், பொருநர், விறலி ஆகியோரைக் குறிப்பிடுவார் தொல்காப்பியர்.[45]

**"முன்னிலைச் சுட்டிய ஒருமைக் கிளவி**
**பன்மைக் காயினும் வரைநிலை இன்றே**
**ஆற்றுப்படை மருங்கில் போற்றல் வேண்டும்"**[46]

என்ற நூற்பாவில் ஆற்றுப்படை என்ற சொல் இடம் பெறுவதை அறியலாம்.

### சங்க இலக்கியத்தில் ஆற்றுப்படை

சங்க இலக்கியங்களாகிய தொகை நூல்களில் புறத்தைச் சார்ந்தனவாகிய புறநானூற்றிலும், பதிற்றுப்பத்திலும் ஆற்றுப்படைப் பாடல்கள் காணப்படுகின்றன. இவற்றில் ஐந்து முதல் முப்பத்தொரு அடிவரையுள்ள ஆற்றுப்படைப் பாடல்கள் உள்ளன. பத்துப்பாட்டில் காணப்படும் ஆற்றுப்படை இலக்கியங்கள் அனைத்தும் பல நூறு அடிகள் கொண்டவை.

புறநானூற்றில் பன்னிரண்டு ஆற்றுப்படைப் பாடல்கள் இடம் பெறுகின்றன. அவை 68,69,70,138,141,155,180 ஆகிய எண் கொண்ட ஏழு பாணாற்றுப்படைப் பாடல்களும், 64,103,105,133 எண் கொண்ட நான்கு விறலியாற்றுப்படைப் பாடல்களும், புலவர் ஆற்றுப்படையில் (எண்48) ஒன்றும் ஆக, பன்னிரண்டு பாடல்களாகும். பதிற்றுப்பத்தின்கண் பாணாற்றுப்படையில் (67) ஒன்றும், விறலியாற்றுப்படையில் (40, 49, 57, 60, 78, 87) ஆறும், சேர்த்து ஏழு பாடல்கள் இடம் பெறுகின்றன. பத்துப்பாட்டு ஆற்றுப்படைகள் ஐந்தும் இட வருணனையில் இடம் பெறுகின்றன.

### பத்துப்பாட்டு ஆற்றுப்படையின் தொடக்க முடிவுச் சொற்கள்

ஆற்றுப்படை இலக்கியங்கள் இயற்கைக்குத் தலைமையிடம் அளித்துள்ளன. ஆற்றுப்படை இலக்கியங்கள் அனைத்துமே இயற்கையில் தொடங்கி இயற்கையில் முடிவுறுகின்றன என்பதை நிறுவும் நா. ஜெயராமன் ஞாயிறு (திருமுருகு, பெரும்பாண்), அறாஅ யாணர் (பொருநர்), நிலமடந்தை (சிறுபாண்), விசும்பு (மலைபடு) என்று தொடங்குவதைக் காட்டி, பழமுதிர் சோலை (திருமுருகு), காவிரி புரக்கும் நாடு (பொருநர்), ஒளிறிலங்கருவிய மலை (பெரும்பாண்), குன்று சூழ் இருக்கை நாடு (மலைபடு), குறிஞ்சிக் கோமான் (சிறுபாண்) என்று முடிவு பெறுவதைக் காட்டுகிறார்.[47]

# குறிஞ்சி நிலம்

மலையும் மலை சார்ந்த இடமும் குறிஞ்சியாகும். மலை வானுலகைத் தீண்டுவது போன்று உயரமுடன் விளங்கியது.[48] அம்மலையின் மீது ஏறி நின்று பார்த்தால் தொலைவில் உள்ள நாடுகளெல்லாம் தெரியும்.[49] கதிரவன் காய்ந்தும் மலை காயாமைக்குக் காரணம் அதில் உள்ள மரங்கள் தரும் நிழலாகும். அது குறவரும் மருளும் குன்றமாக விளங்கியது.[50] அது வேல் காய்ந்தது போன்ற கூரிய கற்பாறைகளையுடையது.[51] துறுகல்லை வாழை அரும்புகள் தொடும்படி இருப்பது யானையின் முகத்தில் அம்புகள் பாய்ந்தது போன்றிருந்தது.[52]

## வழி இயல்பு

பக்க மலையில் மலை அடுக்குகள் செறிந்துகிடக்கின்றன. அதன் அருகில் வீழ்ந்தவரைக் கொல்லுகின்ற ஆழமான குளங்கள் உள்ளன. அக்குளங்களுக்கருகில் பாசி இருக்கும். அதில் கால் வைத்தால் வழுக்கிவிடும். ஆகவே அதனைக் கடப்பதற்கு மலை எருக்கின் கோலினையும் சிறு மூங்கில்கோலினையும் ஊன்று கோலாகப் பயன்படுத்தினர் பரிசில் பெறும் கலைஞர்.[53] காட்டில் பராக்குப் பார்த்தால் காலடி தப்பிவிடும்.[54] மலை முகடுகளில் வெயில் நேரத்தில் செல்லலாகாது. அந்தி நேரத்தில் செல்ல வேணடும்.[55] அது செடி கொடி படர்ந்த வழியாக இருக்கும்.[56] அவ்வழியில் பரிசிலர் உண்ணீர் மொண்டுக் கொண்டும் சென்றனர்.[57] நீரில் மூழ்குபவரைக் காப்பாற்ற முயல்பவரைப் போன்று வழி தப்பிய பரிசிலரைக் கானவர் நல்வழியில் அழைத்துச் செல்வர்.[58] மலையடுக்க மரநிழலில் இளைப்பாறும்பொருட்டு அங்கு இருந்தால் பல்வகை ஓசைகளைக் கேட்கலாம்.[59] கானவர் வழிச் செல்வோரைத் துன்புறுத்தாதிருப்பர்.[60]

**அருவி**

மலையுச்சியில் பல இடங்களில் தோன்றும் அருவிகள் கீழ்நோக்கிப் பாய்கையில் காற்றால் அசைவுறும் பல கொடிகள் போலக் காணப்பெறுகின்றன. இந்த அருவிகள் ஓரிடத்தில் ஒன்று சேர்ந்து பேரிரைச்சலோடு பாய்கின்றன. அப்பேரருவி தன் போக்கில் சிறு மூங்கிலின் வேரைப் பிளக்கிறது; தேனீக்கள் அமைந்த தேன்கூடுகளைக் கெடுக்கிறது; நன்கு முற்றிய ஆசினிப் பலாப் பழங்களின் வெடித்துச் சிதறிய சுளைகளைக் கொண்டு செல்கிறது. மலையுச்சியில் உள்ள சுரபுன்னை மணம்மிக்க மலர்களை அந்த அருவி நீரில் உதிர்க்கிறது. அருவியின் ஓட்டத்தையும் ஓசையையும் கண்டும் கேட்டும் கருங்குரங்குகளுடன் கரிய முகத்தையுடைய முசுக்கலைகள் நடுங்குகின்றன. அருவி நீர், புகரை அணிந்த மத்தகத்தையுடைய பெரிய பெண்யானை குளிரடையும்படி வீசுகிறது.

அது தன் போக்கில் அகப்பட்ட யானைக் கொம்புகளைத் தன்னுள் அடக்கி, பொன்னும் மணியும் நிறம் விளங்கும்படி வீசிப் பாயும். அது வாழைப்பழங்களையும் இளநீர்க் குலைகளையும் உதிரச் செய்து. கரிய மிளகுக் கொத்துகளைச் சாய்க்கும். மயில்கள், கோழிகள் முதலிய பறவைகளை வெருவி ஓடச் செய்யும். ஆண் பன்றியையும் கரடியையும் மலைக் குகைளில் பதுங்கச் செய்யும், கருங்கொம்புகளைக் கொண்ட காட்டு எருதுகளை முழக்கமிடச் செய்யும்.[61] வழிச் செல்வார்க்குத் தன் இனிய ஓசையால் வருத்தத்தைப் போக்குவதால் அது **'பாடின் அருவி'** என அழைக்கப்பெறுகிறது.[62]

**சிறுகுடி**

மலை மீது வளரும் மரம், செடி, கொடியிலிருந்து உதிரும் மணமிக்க மலர்களால் மலைச்சாரல் மணம் செய்த வீடு போல மணத்தல் இயல்பு.

அச்சாரலில் மலைவாணர் குடியிருப்பு அமைந்திருக்கும். அது சில வீடுகளைக் கொண்ட சிறுகுடி என்றழைக்கப்பெறும். அங்கு வாழும் கானவர், காட்டில் போர் செய்து இறந்த யானையின் கோடுகளைக் காவடியின் காவு மரமாகக் கொண்டு, காவடி சுமந்து வருவர். அதன் இரு முனைகளிலும் உறிகள் உண்டு. அவர்கள் அந்த உறிகளில் பனை அகணியால் முடையப்பட்ட பல வட்டில்களை வைத்துள்ளார்கள். அவற்றில் மலைத்தேனும் கிழங்குகளும் பன்றி இறைச்சியும் கொண்டுவருவர். இத்தகைய புது வருவாயையுடையது அச்சிறுகுடியாகும்.[63]

## மலைநாட்டில் பயிர்

மலைநாட்டில் எள், தினை, அவரை, வரகு, மூங்கில் நெல், வெண்சிறு கடுகு, இஞ்சி, மஞ்சள், வாழை, கூவைக் கிழங்கு, வள்ளிக் கிழங்கு, ஆசினிப் பலா, கரும்பு, ஐவன நெல், வெண்ணெல் முதலியன வளமுறப் பயிராயின.[64]

## தினைப்புனம் காத்தல்

முற்றின தினைப்புனத்தைப் பன்றி தின்ன வருதல் இயல்பு. ஆதலால், கானவர் அது வரும் வழியில் கல்பொறிகளைப் பொருத்தி அதன் வருகையைத் தடுப்பர்.[65] தினையைத் தின்ன வரும் யானயைக் குறவர் பரண்மீதிருந்து கவண் எறிந்து துரத்தித் தினையைக் காப்பர்.[66] நன்னனின் நவிர மலை உச்சியில் அகிலும் சந்தன மரங்களும் வளர்ந்தன. பொன்னும் மணியும் கிடைத்தன.[67]

## குறிஞ்சி நிலப் புறவொழுக்கம்

கானவர் பக்க மலையில் உள்ள பகை நாட்டுக்கு இரவில் சென்று ஆநிரைகளைக் கவர்ந்து, விடியற் காலையில் வந்து கள்விலைக்கு விலையாகத் தருவர்.[68]

**கானவர் வேட்டையாடல்**

மழை வளம் மிக்கு மூங்கில் வளர்ந்து நெடிய சிகரங்களையுடைய தாய் விளங்கியது மலை.[69] மழை பெய்யாது தவிர்ந்த காலத்தில் நீரை விரும்பித் தோண்டிய பள்ளங்களில் மறைந்திருந்து, நள்ளிரவில் அகத்திப்பூ போன்ற மருப்பினையுடைய பன்றியை வேட்டையாடுவர்.[70] தினையைத் தின்னவரும் யானையைக் குறவர் பரண்மீதிருந்து கவண் எறிந்து துரத்தித் தினையைக் காப்பர். பகல் பொழுதில் வேட்டை நாயின் துணையுடன் செடி புதர்களில் உள்ள முயல்களை வலை வைத்துப் பிடிப்பர்.[71]

**தேனெடுத்தல்**

செங்குத்தான மலையில் ஏற, இரு மூங்கில்களைக் கூட்டிய கண்ணேணியை நிறுத்தி, ஓங்கி உயர்ந்த மர உச்சியில் உள்ள தேனிறாலை அழித்துத் தேனெடுப்பர்.[72]

**கூத்தும் பாட்டும்**

நறவினை அருந்திய கானவர், தம் மகளிரோடு மான் தோல் போர்த்திய சிறுபறை ஒலித்துக் குரவைக் கூத்தாடினர்.[73] மகளிர் தினையைக் குற்றிக் கொண்டே வள்ளைப் பாட்டுப் பாடினர்.[74] மலைவாணர், தம் மலைச் சாரல்களில் தெய்வங்கள் வாழ்வதாக நம்பினர்.[75]

**மலைக்கண் பல்வகை ஒலிகள்**

நன்னனது மலைநாட்டுப் பகுதியில் பகற்பொழுதில் பலவகை ஒலிகள் எழுந்தபடி இருந்தன. அவ்வொலிகள் பின்வருமாறு:

தன் இனத்தைப் பிரிந்த ஆண்யானையைக் கானவர் பிடிக்க முயன்ற போது உண்டான ஆரவாரம். பன்றியின் மீது அம்பு எய்ய, அப்பன்றியால் கானவர் இறக்க, அவருக்காக மற்றவர் அழும் ஓசை. தம் கணவர் மார்பில்

புலி பாய்ந்து உண்டாக்கிய புண்ணை ஆற்றுவதற்காகக் கொடிச்சியர் பாடிய பாடலோசை; முதல் நாளில் பூத்த வேங்கையின் பொன் போன்ற பூங்கொத்துகளைப் பறிப்பதற்கு மகளிர் 'புலி – புலி' என்று கூவிய ஓசை; புலி, களிற்றின் மீது பாய்ந்ததைக் கண்டு அதன் பிடி செய்த இடியோசை போன்ற பிளிறல்; தன் குட்டி எடுத்தற்கரிய ஆழ்ந்த முறையில் தவறி வீழ்ந்து இறந்ததைக் கண்டு மந்தி அலறிய ஓசை.

கானவர் ஏறவியலாத உயரத்தில் கண்ணேணியின் உதவியால் ஏறித் தேனீக்களை விரட்டித் தேன் எடுத்த போது உண்டான ஆரவாரம்; நன்னனுடைய வீரர் அவனுடைய பகைவர் குறும்புகளை அழித்த போது உண்டான மகிழ்ச்சி ஆரவாரம்; நறவை நாட்காலையிற் குடித்த கானவர் தம் பெண்களுடன் கூடிச் சிறுபறை ஓசைக்கேற்பக் குரவைக் கூத்தாடிய ஆரவாரம்; காட்டாற்று நெடிய சுழியில் அகப்பட்ட களிற்றின் வலிய சினத்தைத் தணிக்க, தம் ஏவலைக் கேட்க யானைப் பாகரின் பயிற்சி ஆரவாரம்; மூங்கில் தட்டையால் தினைப் புனங்களில் மகளிரின் கிளி ஓட்டும் ஆரவாரம்.

காட்டு எருதும் கலைமானும் போரிடுவதைக் கண்டோர் செய்த ஆரவாரம்; எருமைக்கடாக்கள் தம்முட் பொருதலால் உண்டான ஆரவாரம்; பலாக் கொட்டைகளின் மீது கன்றுகளைப் பிணித்துக் கடாவிடல். அக்கன்றுகளைக் காந்தளின் துடுப்புப் போன்ற மடலால் சிறுவர்கள் அடித்துச் செய்த ஆரவாரம்; கரும்பு ஆலையின் ஓசை; சேம்பின் கிழங்கினையும் மஞ்சட்கிழங்கினையும் பன்றி அகழாதிருக்கக் கானவர் கொட்டிய பறை ஓசை; அருவிகளில் தெய்வமகளிர் குடைந்தாடுகையில் உண்டான ஓசை; மேற்குறித்த ஓசைகளால் மலையிடத்தெழுந்த எதிரொலி; ஆகிய ஒலிகள் மலைநாட்டுப் பகற்காட்சிகளாய்ச் சிறந்த ஓவியங்களாய் நம் அகக்கண்முன் காட்சி அளித்து இன்புறுத்தும்.[76]

**மறமகளிர் வீரம்**

களிற்றியானை தன்னைத் தாக்கவரினும் தன்மீது பாம்பு ஊர்ந்து செலினும் மேகம் முதல் இடி இடிப்பினும் சூல்கொண்ட மகளிர் அதனைக் கண்டு அஞ்சா வாழ்க்கையினர்.[77]

**நன்னனுக்கு வழங்கப்பட்ட குறிஞ்சி நிலப் பொருள்கள்**

ஆமானின் குழவி, யானைக்கன்று, வாய்திறவாத கரடிக் குட்டி, மலை ஆட்டுக்கிடாய், கீரிப்பிள்ளை, மரையானின் குழவி, ஆண் உடும்பு, தோகை மயில், காட்டுக் கோழிச்சேவல், பலாப்பழம், மாம்பழம், மணக்கும் நறைக்கொடி, தூறைக்கிழங்கு, மரத்திலிருந்து சிதறி உதிர்ந்த பளிங்கு போன்ற கற்பூரம், மாணிக்கக் கற்கள், யானைக் கொம்பு, காந்தள், புன்னை, திலகம் ஆகியவற்றின் பூக்கள், சந்தனக் கட்டைகள், மிளகு, முற்றிய கள், தயிர், தேனிறால் ஆகியவை மலைவாணர்கள் நன்னனுக்கு அளிக்க அரண்மனை முற்றத்தில் வைத்தனர்.[78] இதேபோன்று மலைவளம் காணச்சென்ற சேரன் செங்குட்டுவனுக்கும் கானவர் காணிக்கையாய்ப் பொருள்களை அளித்தனர்.[79]

**விருந்தோம்பல்**

கானவர், பாணர்களுக்குத் தேன், கிழங்கு, பன்றி இறைச்சி ஆகிய உணவை அளித்தனர்.[80] குறமகளிர் தேனால் ஆன கள், நெல்லால் ஆன கள், கடமான் இறைச்சி, எய்ப்பன்றி இறைச்சி மோரை உலைநீராக வைத்துச் சமைத்த நெல்லரிசிச் சோறு ஆகியவற்றை அளித்து உபசரித்தனர். அவர்கள் தம் பிள்ளைகளைக் கொண்டு முறைகூறி அவர்களைத் தடுத்து உணவளித்தனர்.[81] இதனால் திருவள்ளுவர் கூறிய,

> **"வருவிருந்து வைகலும் ஓம்புவான் வாழ்க்கை**
> **பருவந்து பாழ்படுதல் இன்று"**[82]

என்னும் குறளின் கருத்து வலிவுபெறுகிறது.

கானவர் இனிய பழத்தையும் சூடுதற்கு மணமிகு மலரையும் காட்டி நல்வழியில் அழைத்துச் செல்வர்.[83] அரிசியையும் வெள்ளாட்டுக் கறியும் கலந்த சோற்றையும் தினைமாவையும் விருந்தாக அளிப்பார்.[84] வரும் விருந்தினருக்கு மென்மையான தினைமாவை உறவு முறையிட்டு அழைத்து உடனிருந்து உண்பர்.[85]

## முல்லைநிலம்

காடும் காடு சார்ந்த பகுதி முல்லை நிலம் எனப்படும். இதனைக் 'காடுறை உலகு'[86] எனத் தொல்காப்பியம் குறிப்பிடுகிறது. பி.டி. சீனிவாச ஐயங்கார், 'The Wood land between the high lands and the low lands' என்று முல்லை நிலத்தைக் குறிப்பிடுவார்.[87] முல்லை நிலம் காடு, கானம், குறும்பொறை, கொல்லை, செந்நிலம், முரம்பு, முல்லை, வன்புலம் ஆகிய சொற்களால் வழங்கப்பெறும் என்றும் மலையாகிய குறிஞ்சிக்குப் புறத்தே காடாகிய முல்லை அமைவதால் இது 'புறவு' எனப்பட்டது சாலப் பொருத்தமுடையதாகும் என்பார் ஐ. அண்ணாமலை.[88] முல்லை என்ற சொல்லுக்குத் தேவநேயப் பாவாணார் விளக்கம் தரும்போது, "புல்வெளிகளாயுள்ளவற்றைக் கால்நடை மேய்ச்சலுக்கு விட்டுவிட்டு, குறுங்காடும் பெருங்காடுமாயுள்ளவற்றைத் தீயினாற் சுட்டெரித்துக் கொன்று விளைநிலமாக்கியவிடம் பிற்காலத்தில் கொல்லை எனப்பட்டது"[89] என்பார்.

முல்லை நிலம் முல்லை மலர் முதலிய மணமிக்க மலர்களையுடைய கொடிகள் மிகுந்தது. வில்லின் ஓசைக்கு வெருவிச் சிவந்த கண்ணையுடைய மரையேறு, குறிஞ்சி நிலத்தை அடுத்துள்ள முல்லைநிலக் குறுங்காட்டில் விரைந்தோடும். பசுக்கள் வேற்றுப்புலங்களில் சென்று மேய்ந்துவரும். கோவலர் பசுவின் பாலைக் கறந்துவருவர். முல்லை நிலக்காடுகளில் செம்மறி ஆடுகளும் வெள்ளாடுகளும் 'கல்'லென்னும் ஓசையுடன் தங்கியிருக்கும். அங்குள்ள மக்கள் பாலும் பால்சோறும் உண்பர். மூங்கில் குழாயில்

எருமையின் தயிரைத் தோய்த்தார்கள். கொடிய விலங்குகள் ஆடுகளை நெருங்காதவாறு தீமூட்டி இரவைக் கழிப்பர்.[90] முல்லைநிலத்தில் புதிய அரும்புகளையுடைய அவரைக் கொடிகள் பவழம் போன்ற பூக்களைப் பூத்தன; கரிய அரும்பினையுடைய காயாக்கள் திரண்ட மயிலின் கழுத்துப்போன்ற பூக்களைப் பூத்தன; முசுண்டைக்கொடி கொட்டம் போன்ற பூக்களுடன் விளங்கியது. வளவிய குலையினையுடைய காந்தள்கள், கைவிரல்கள் போலப் பூத்தன. கொல்லை நிலத்து நெடுவழிகளில் 'இந்திரக்கோபம்' என்னும் பூச்சிகள் ஊர்ந்தன. இவை கார்காலத்தை உணர்த்தின. முல்லைக் கொடிகள் முல்லைப்பூக்கள் மலர்வதால் பேரழகுடன் விளங்கின.[91] முல்லைமலர், குரவமலர், தளவமலர், குருந்தமலர் ஆகியன முல்லை நிலத்தின் சிறந்த மலர்களாகும்.[92]

மரங்கள் நிரம்பியனவாய் நிழல் பொருந்தியனவாய்க் குறுங்காடுகள் விளங்கின.[93] நெடுந்தொலைவு மணம் கமழும் பூக்களைத் தெய்வம் அணுகுவதே அல்லாமல் மக்கள் அணுகார். அவற்றை அணுகின் தெய்வத்தால் தீங்கு உண்டாகும் என நம்பினர்.[94]

## கோவலர் குடியிருப்பு

ஆடுகள் தின்னும்பொருட்டுத் தழைகளைக் கட்டிய குறுகிய காலையுடைய குடில். அக்குடிலின் வாயில் சிறிய தூறு போன்றது. வாயிலில் கழிகளால் கட்டப்பெற்ற கதவையுடையது. வரகுக் கற்றையால் வேயப்பட்டது. வீட்டின் முற்றம் வெள்ளாடுகளையும் செம்மறி ஆடுகளையும் கட்டும் முளைகளையுடையது. அக்குடியிருப்புகள் கட்டுமுள் வேலிகளையுடையன.[95]

## முல்லைநிலச் சிற்றூர்கள்

முல்லைநிலத்தில் பயிரிட்டு வாழ்ந்த குடிமக்கள் இருந்த ஊர் சிலவே. அவர்களது வீட்டு முற்றத்தில் பிடிகள் நின்றாற்போன்று வரகினைக்

கொண்ட குதிர்கள் நிற்கும். யானையின் காலினைப் போன்ற வரகு நட்டு நிற்கும் பந்தரை உடையது. அக்குடிலின் கூரை, வரகு வைக்கோலால் வேயப்பட்டிருக்கும்.[96]

## உழவு

சிற்றூர் மக்கள் உழவுத் தொழிலிற் பயின்ற பெரிய எருதுகளைக் கலப்பையில் சேர்த்து, உடும்பு முகம் போன்ற கொழு, நிலத்தில் மறைய அழுத்தி உழுதனர்; விதைத்தனர்; களை எடுத்தனர்; பயிர் விளைந்ததும் அறுவடை செய்தனர்.[97]

## கோவலர் வடிவு

இடையர்மகன் இடைவிடாது செருப்பு அணிந்ததால் வடுவுடைய வலிய அடியையுடையவன். பசுக்களுக்கு வருத்தம் செய்யும் கோல் உடையவன்; கோடரி வைத்திருப்பதால் கைத் தழும்புடையவன்; இருபக்கமும் காக்கள் (காவடிகள்) தொங்கவிடப்பட்ட தழும்புடையவன்; மயிர் பொருந்திய தோள் கட்டுடையவன்; பசும்பால் தடவப்பட்ட மயிர் உடையவன்; கோடுகளிலும் கொடிகளிலும் மலர்ந்த கதம்ப மாலையைச் சூடியவன்; பால்சோற்றை உண்ணக் கூடியவனுமாவான்.[98]

## கோவலர் இயல்பு

கோவலர் அறம் செய்யும் உள்ளத்தையுடையவர்.[99] சீழ்க்கைக்காக மடித்த வாயினையுடையவர்.[100] இவர்கள் பச்சை இலைகளாலான தழை மாலைகளையும் அழுக்கான ஆடைகளையும் உடையவர்கள்.[101] முல்லை மலரால் ஆன மாலை சூடினர்.[102] ஆயர் பசுக்கூட்டத்துடன் காட்டில் தங்குவர்.[103]

## முல்லையும் குறிஞ்சியும்

முல்லை நிலத்தை விட்டு நீங்கிவந்த ஆன் ஏறும் குறிஞ்சி நில மலையிலிருந்து வந்த மரை ஏறும் போரிட்டன. இதனால் காட்டு மல்லிகையும் குறிஞ்சியும் வாடின. கோவலரும் குறவரும்ஆர்த்தனர்.[104] ஆயரும் மலைவாணரும் ஒன்றுகூடி விழா எடுத்தனர்.[105]

## ஆயர் மகளிர்

'ஆயர் மகளிர் காடுகளில் செருப்பு அணிந்து சென்றனர்'[106] அவள் பறவைகள் எழும் விடியற்காலத்தில் எழுந்து புலியின் முழக்கம் போன்ற மத்தொலியுடன் தயிர்கடைந்து வெண்ணெய் எடுத்தாள். தலைமீது சும்மாட்டினை வைத்து அதன் மீது மோர் பானையை வைத்துக்கொண்டு குறிஞ்சி நிலம் சென்று மோரை விற்றாள். அவள் மாமை நிறத்தினள்; மூங்கில் போன்ற தோள்களையுடையவள்; கருமணல் போன்ற கூந்தலையுடையவள்; 'தாளுருவி' என்னும் நகை அசையும் காதினள்.[107] அவள் மோர் விற்றதைக் கொண்டு தன் குடும்பத்துக்கு வேண்டிய நெல் முதலியவற்றை வாங்கிக்கொண்டாள். அவற்றைக்கொண்டு தன்சுற்றத்தை உபசரித்தாள். நெய் விற்ற விலைக்குக் கட்டிப் பசும்பொன்னை விரும்பிக் கொள்ளாது பால் எருமையும் நல்ல பசுவையும் கரிய எருமை நாகினையும் வாங்கினாள்.[108] ஆதலால் 'முல்லைநிலம் வாழ்க்கையின் குறிக்கோளும் பயனுமாக உள்ளது''[109] என்பார் அ.கி.நாயுடு.

ஆயர் மகளிர் நெய்யை விற்றுப் பசும்பொன்னை வாங்காமல் நெய்க்குப் பதிலாகப் பால் எருமை, பசு, நாகு ஆகியவற்றை வாங்கிச் செல்வது பொருளாதாரச் சிந்தனையைத் தூண்டுவதாக உள்ளது. ஆயர் மகளிர் ஆடம்பர வாழ்க்கைக்கு ஆசைப்படாமல் இருப்பதை வைத்துக்கொண்டு சுற்றம் தழுவி, பொருளாதாரத்தில் மேம்பட மேற்கொண்ட

செயல் போற்றும்படியாக உள்ளது. “அன்றைய பெண்கள் நிறைந்த உழைப்பாளராக இருந்தனர் என்றும் அன்றாடக் கடமைகளை மேற்கொண்டனர் என்றும் பெருங்கல்வி அறிவில்லாத ஓர் இடைக்குல மடந்தை இத்துணைச் சிறந்த காரியத்தைச் செய்கிறாள் என்றும் அது அவர்களுடைய வாழ்க்கை முறையை மிக விளக்கமாக எடுத்துக்காட்டுகிறது”[110] என்றும் கூறும் அ.ச. ஞானசம்பந்தனின் கருத்து நினைவுகூரத்தக்கதாகும்.

அதனால்தான் மு.வரதராசனாரும் “மக்கள் இயற்கையோடு இயைந்த வாழ்வு வாழ்ந்து நாகரிகத்தை வளர்ப்பதற்கு ஏற்ற நிலப்பகுதி முல்லை என்றும் அங்கும் வாழ்க்கை துன்பமாகத் தோன்றாமல் பொழுதுபோக்காகத் தோன்றக்கூடிய வகையில் இயற்கை மனிதனுக்குத் துணை செய்கிறது என்றும், கவலை குறைந்த வாழ்க்கை முல்லை நிலத்தில் அமைந்திருக்கிறது”[111] என்றும் கூறுவார்.

**விருந்தோம்பல்**

ஆயர் விருந்தோம்பலை இன்றியமையாக் கடமையாகக் கொண்டிருந்தனர். அவர்கள் கலைஞர் குழுவிற்குப் பசுவின் பாலையும் பால் சோற்றையும் தருவர்.[112] புளிச்சோறும் ஆமானினது சூட்டு இறைச்சியும் முல்லை நில வேலூரில் கலைஞர் பெற்றனர்.[113] ஆயர் தினை அரிசிச் சோறும் பாலும் விருந்தளித்தனர்.[114] வரகரிசிச் சோறும் அவரைப்பருப்பும் அன்போடு அளித்தனர்.[115] வீட்டில் தங்கிச் செல்வதற்கு ஆட்டுத் தோலாலான படுக்கையை அளிப்பர்.[116]

**முல்லை நிலத்தின் மாட்சி**

‘கிரேக்க இலக்கியத்தின் தனிச் சிறப்புகளுள் ஒன்றாகிய முல்லைப்பாடல் முல்லை நில வாழ்க்கையின் முதற்பொருள் (இயற்கைச்

சூழ்நிலை) கருப்பொருள் (இயற்கை வளம்), உரிப்பொருள் (வாழ்க்கைநிலை) ஆகியவை வழுவாது கூறும் புது இயல்புடையது. மேனாட்டிலக்கியம் முழுதும் இது உயர்வாகப் பேணப்பட்டுப் பின்பற்றப்பட்டுள்ளது. இதன் தூய கலையுணர்வு கிரேக்க நாகரிகத்தின் தனிப்பெருஞ்சிறப்பைக் குறிப்பதாகவே கொள்ளப்படுகிறது. வெறும் புலமைப் பொறியாகக் கொள்ளப்படுவதில்லை. கிரேக்கரிடையே முல்லைநிலக் கவிஞர் காட்டிய இதே உயர்நெறியைத் தமிழர் எல்லா நிலங்களின் வாழ்விலும் காட்டினர். முல்லைநிலக் கவிஞன் முல்லைநில உவமைகளையும், வாழ்க்கைப் பண்புகளையும் குறித்தது போலவே குறிஞ்சி, மருதம், நெய்தல், பாலை, நிலக் கவிஞர்களும் அவ்வவ் நிலங்களின் வாழ்க்கையைச் சித்திரிக்கின்றனர். இத்திணை மரபாகிய இயற்கைப் படப்பிடிப்புக்குச் சங்க இலக்கியமே உலகின் தலையாய முன்மாதிரியாகும்'[117] என்று போற்றுவார் கா. அப்பாதுரை.

## மருதநிலம்

வயலும் வயல் சார்ந்த இடமும் மருதம் எனப்படும். "மருதம் சான்ற மருதத் தண்பணை"[118] என்றதனால் மருத மரங்கள் மிக்கிருக்கும் நிலம் ஆதலின் மருதம் எனப் பெயர்பெற்றது. இந்த நிலம் நீர் வளத்தால் சிறந்தது. "இதில் நெல், கரும்பு முதலிய உயரிய பயிர்கள் நன்கு பயிராகும். உணவுக் குறைபாடு இல்லாத நிலம் ஆதலின் ஐவகை நிலங்களிலும் மருதமே உயர்வாகக் கருதப்படுகிறது" என்பார் மா. இராசமாணிக்கனார்.[119] இந்நிலத்தின் சிறந்த மலர்கள் தாமரை, கழுநீர் மலர் முதலியவை ஆகும்.

### சேரநாட்டு மருதநிலம் (ஆறு)

மிகுந்த நுரைகளுடன் சந்தன மரக் கட்டைகளையும் அகிற் கட்டைகளையும் சுமந்துகொண்டு செல்லும் ஆறு, கடலினை நோக்கிச் செல்கிறது. அந்த ஆறு வெளுத்த நுரையுடன் சிவந்த நீரையுடையது. நீரைக்

கடப்பதற்குப் புனையாய் உதவும் வேழக்கரும்பைவிடப் பல வேற்படையுடைய சேரன் கொடையில் வல்லவன்.[120] கரும்பு தொடர்பு உவமமாகச் சான்றோரால் கூறப்படுவது மரபு என்பதை,

**"-------------- நட்பே**

**கொழுங்கோல் வேழத்துப் புணைதுணை யாகப்**

**புனலாடு கேண்மை அனைத்தே"[121]**

என்ற அகநானூற்றுப் பாடலாலும் அறியலாம்.

**சோழநாட்டு மருதநிலம்**

கஞ்சங்குல்லை தீய்தல், மரக் கொம்புகள் தீயால் எரிதல், மலை அருவிகள் வற்றுதல், மேகம் கடல் நீரை முகத்தலை மறத்தல் ஆகியவை நேரும்போது வற்கடம் தோன்றும். அக்கொடிய காலத்திலும் காவிரி ஆற்றில் நீர் பெருகிவரும். காவிரி ஆறு நறைக்கொடி, நரந்தம்புல், அகில், சந்தனம் ஆகியவற்றைச் சுமந்து வந்து துறைதோறும் தள்ளிச்செல்லும், அந்நீர் குளத்தை நிறைக்கும். ஆற்றுநீரில் ஆடவரும் பெண்டிரும் நீராடுவர்.

ஆற்றுநீரால் நெல் விளைச்சல் மிகும். உழவர் கடா விட்டுக் குன்று போன்ற குதிர்களில் நெல்லை நிரப்புவர். ஒரு வேலி நிலம் ஆயிரம் கலம் நெல்லை விளைவிக்கும்.[122]

சோழநாட்டின் ஒவ்வொரு 'மா' நிலத்திலும் திடர்தோறும் நெற்கூடுகள் பொருந்தியிருக்கும். தாழ்ந்த தென்னை மரங்களையுடைய குளிர்ந்த மரச்சோலைகளில் குடியிருப்புகள் இருக்கும். அங்குள்ள மக்கள் குருதி கலந்த சோற்றைப் பலியாக இடுவர். காக்கை அப்பலியை விழுங்கும். காக்கை ஆமைப் பார்ப்பை எடுத்துவந்து பசி வரும்போது தின்னப் பாதுகாத்து வைக்கும். வளைவுடைய காஞ்சி மரத்திலும் செவ்விய மரத்திலும் ஆண் மயில்கள் தங்கும். அவை பாகற் பழத்தையும் பலாப் பழத்தையும் தின்னும்.

அப்பொழுது அவற்றின் பெண் மயில்கள் அவற்றை அழைக்கும்.[123] அவற்றைப் பொருட்படுத்தாமல் நெய்தல் நிலத்தில் யாழோசை போன்று வண்டுகள் பாடுவதைக்கேட்டு அங்குச் சென்று, பாடற்கு ஏற்ப நிலவு போன்ற இடுமணலில் தோகையை விரித்து ஆடும்.[124]

**குடியிருப்புச் சூழல்**

பொய்கைக் கரையில் வளர்ந்துள்ள கடம்ப மரத்தின் மலர்கள் மாலை போலக் காணப்படும். அம்மலர்கள் இந்திரக்கோபத்தைப் போன்ற தாதினை உதிர்க்கும். அத்தாது நீர் உண்ணும் துறையில் படியும். அது ஓவியம் போலக் காட்சியளிக்கும். பெரிய நகிலைப் போன்ற மேல்நோக்கி எழுகின்ற தாமரையின் முகை, அழகிய முகம் போல் மலரும். சாதிலிங்கத்தில் தோய்ந்த அங்கை போன்ற தாமரை மலரின் இதழ்கள் சிவந்திருக்கும். அவ்விதழ்கள் சூழ்ந்த செம்பொன்னால் செய்தது போன்ற மலர்ப் பீடத்தில் ஆண் தும்பி தன் உயிர்க்குக் காவலாகிய இனிய பெடையைத் தழுவிக்கொண்டு உறங்கும். காலையில் துயிலெழுந்து 'சீகாமரம்' என்ற பண்ணை ஒத்துப்பாடும். சோழநாடு இத்தகைய நிலவளம் சூழ்ந்த குடியிருப்புகளையுடையது.[125]

ஈன்று அணிமை நீங்கிய குழந்தைக்குப் பால் சுரக்கும் கொங்கைபோல நீர் மிகுந்தது காவிரி. அது உலக உயிர்களையெல்லாம் காக்கும் இயல்புடையது.[126]

தை மாதத்தில் குளிர்ந்திருக்கும் குளத்தைப் போல் அள்ள அள்ளக் குறையாத அகன்ற நகரில் சமைப்பதற்குரிய தீயையன்றிப் பகைவரால் சுட்டெரிக்கும் நெருப்பினை அறியாதது சோழநாடு.[127]

**மழைவளம்**

கிழக்குக் கடலில் நீரை முகந்து மேற்கு மலையிடத்தை வளைத்துக்கொண்டு இரவு பகல் என்று அறிய இயலாதபடி மழை பொழியும்.

அம்மழை நீர் கவலைக் கிழங்கு தோண்டப்பட்ட குழியில் விழுந்து அருவிகள் ஒலிக்க, அவ்வருவிகள் ஒன்று சேர்ந்து ஆறாக உருக்கொண்டு ஓடும். அந்த ஆற்றின் நீர், யானைகள் நின்றால் மறைக்கும் நெற்கதிர் கழனிகளிலும், நறுமணம் மிக்க தாமரை, நெய்தல், நீலமலர், ஆம்பல் மலர்ந்துள்ள பொய்கைகளிலும் மடுக்களிலும் சென்று நிரம்பும்.[128]

## ஓசைகள்

கம்புட்கோழி தாமரை இலைகளில் உறங்கும். மீன் பிடிப்பவர் அப்பறவையின் உறக்கம்கெடும்படி வள்ளைக் கொடிகளைத் தள்ளி வலைவீசி மீன்களைப் பிடிப்பர்; அவற்றைக் கொன்று குவித்தலால் ஓசை எழும். கரும்பு ஆலைகள் வேலை செய்வதால் ஓசை எழும். கழனிகளில் உழத்தியர் களைகளைப் பறிப்பதால் ஓசை உண்டாகும். முதுமையுள்ள வலியற்ற எருது சேற்றில் சிக்கிக்கொள்ள அதனைத் தூக்கிக் கரை சேர்ப்பவர் உண்டாக்கும் ஓசை, நெல்லை அறுவடை செய்யும்போது தாளினை அரியும் ஓசை ஆகியன எழும். திருப்பரங்குன்றத்தில் முருகனுக்கு விழா எடுக்கும்ஓசை எழும். ஆறுகளில் புதுநீர் வரும்போது கணவரும் மனைவியரும் சேர்ந்து நீராடும் ஓசை உண்டாகும். பாணர் வீடுகளில் ஆடல் பாடல் ஒலி எழும். இவ்வோசைகள் யாவும் பாண்டிநாட்டு மருதநிலத்தைச் சேர்ந்தவையாகும்.[129]

## ஓய்மாநாட்டு மருதநிலம்

வேலூரிலிருந்து ஆமூர் நோக்கிச் செல்லும் வழியில் மருத நிலக்காட்சி தோன்றும். காஞ்சிமரம் சிறிய கொம்புகளையும் குறுந்தாளையும் உடையது. அதன்கண் நறிய மலர்கள் மலரும். சிச்சிலிப் பறவை அம்மரத்தடி நீர்நிலையிலுள்ள கயல் மீனைப் பற்றச் சமயம் பார்த்திருக்கும். கயல் மீனை அதன் அலகினால் பற்றும்பொழுது அதன் கால்நகங்கள் நீர்நிலையிலுள்ள தாமரை இலைகளைக் கிழிக்கும். அந்த வெண்டாமரை மலரில் உள்ள

தேனினை உண்ணக் கரிய வண்டுகள் வரிசையாகச் சூழம் காட்சி, திங்களைப் பற்றும் கருநாகப் பாம்பினைப்போல் தோன்றும். இத்தகைய வளம் பொருந்திய நிலத்தில் ஆமூர் உள்ளது.[130]

### ஏர் உழாமலேயே நடவு

நண்டின் வளை அடையும்படியும் பசிய கோரையின் அடியில் குத்தியும் தம் கொம்புகளில் மண்ணிருக்க கரிய ஆன் ஏறுகள் போரிட்டன. அவ்வாறு போரிட்ட அந்த வயலில் உழாமலே உழவர் நாற்றினை நட்டனர்.[131] சிலப்பதிகாரமும் 'உழாஅ நுண்டொளி யுன்புக் கழுந்திய' என்று சுட்டிச் செல்கிறது.[132] பாரியின் பறம்பு மலையில் உழாமலேயே நெல், பலா, வள்ளிக்கிழங்கு, தேன் ஆகிய நான்கும் விளையும் என்று புறநானூறு கூறுகிறது.[133]

### நெற்போர்

பாம்புகள் தங்கும் மருதமரம். அதன் நிழலில் நெற்களங்கள் விளங்கும். அக்களத்திலிருக்கும் நெற்போரின்மீது சிலந்திகளின் வலை பின்னப்பட்டிருப்பது பூதம் வெள்ளாடையுடுத்தி நிற்பது போல் தோன்றும். பின்னர்க் கடாவிட்டு நெல்லாக்குவர்.[134] களத்தில் உள்ள நெல்லினை எலிகள் தின்னாமல் இருக்க மருத மரப்பொந்துகளில் பாம்புகள் தங்கிக் காவலாய் இருந்தன என்பார் அ. மாணிக்கனார்.[135]

### கரும்புச்சாறும் வெல்லமும்

யாளி பாய்தலால் யானைகள் பலவும் கலங்கி ஓலமிடல் போல மருதநிலத்தில் கருப்பஞ்சாற்றைப் பிழியும் ஆலைகள் ஒலியெழுப்பும். பாணர் முதலிய புதியவர் கருப்பஞ்சாற்றைப் பருகிப் பின்னர் வெல்லக்கட்டியைத் தின்பர்.[136] இக்கரும்புச்சாறு பிழிவதைப் பற்றிப் பட்டினப்பாலையில்,

**"கார்க்கரும்பின் கமழாலைந்**

**தீத்தெறுவின் கவின்வாடி**

**நீர்ச்செறுவின் நீணெய்தல்**

**பூச்சாம்பும் புலம்"[137]**

என்று வருவதை நினைவுகூரலாம்.

## மீன்பிடிக்கும் பாணர்

"பாணருள் இழிந்த நிலையில் உள்ளவர் மீன் பிடிப்பது வழக்கம்" என்பார் மா. இராசமாணிக்கனார்.[138] அவர்கள் தூண்டிலிட்டு மீனைப் பிடிப்பார்கள். அந்நீர்நிலைகளில் செந்தாமரை மலர்கள் மலரும். அவை கடவுளுக்குரியவை. பாணர் முதலியோர் அவற்றைப் பறித்துச் சூடார். சிறிய நீர்நிலைகளில் சாதிலிங்கம் போன்ற இதழையுடைய குவளை மலர்களும், நீல மலர்களும் பிற மலர்களும் மலர்ந்து காணப்படும். ஊரார் அவற்றைப் பறிப்பர். வழிப்போக்கராகிய பாணர் முதலியோர்க்கும் அவற்றைச் சூடத் தருவர்.[139]

## தோப்புக் குடிகள் இல்லம்

காஞ்சியை நோக்கி வழிநடப்பவர், வழியில் தென்னந் தோப்புகளைக் காண்பர். அங்கு உரல் போன்ற யானையின் உடம்பினை ஒக்கும் சருச் சரையையுடைய தெங்கின் உயர்ந்த ஓலைகளை முடைந்து வேய்ந்த மனைகள் இருக்கும். அவற்றின் முற்றங்களில் மஞ்சள் பயிராகும். வீட்டிற்குப் பின்னே நறுமணம் வீசும் பூந்தோட்டங்கள் உண்டு.[140]

சில தோப்புகளில் பாக்கு மரங்களும் தென்னை மரங்களும் அடர்ந்து காணப்படும். வழிச்செல்பவரின் பசிதீரத் தேங்காய் விழும்.[141] ஆகவே, "அந்நாட்டு ஓரறிவு உயிரும் விருந்தை ஓம்பும்"[142] என்பார் அ. மாணிக்கனார்.

**உழவர் இல்லம்**

உழவரின் இல்லங்களில் எருதுகளுடன் பசுக்களும் அவற்றின் கன்றுகளும் நிறைந்திருக்கும். நெல் சொரியப்பட்ட நெற்கூடுகளும் உடையனவாய் அந்த இல்லங்கள் விளங்கும்.[143] உழவரின் செல்வத்தில் தலைசிறந்தது எருது. ஆதலான் 'பகட்டா' எனப்பட்டது.[144] "இளைய ஆன்கன்றின் கால்கள் உறுதியாய் நிற்காமல் வளைந்திருக்கும் இயல்புடையன"[145] என்பார் பொ.வே. சோமசுந்தரம். பட்டினப்பாலையும் 'நல்லானோடு பகடோம்பியும்'[146] என்று குறிப்பிடுகிறது.

**நன்னனது மலைநாட்டு மருதநிலம்**

நன்னனது குளிந்த மருத நிலத்தையுடைய நாடு காஞ்சி மரங்கள், மென்மையான விளைநிலங்கள், பொழில்கள், பள்ளிகள் முதலியவற்றை உடையது.[147] நெல் அறுக்கும் உழவர் பயிர்களுக்கிடையே மறைந்து வாழும் பறவைகளை வெருட்டப் பறை முழக்குவர். அவ்வோசை கேட்டு ஆண் எருமை வெருவித் தன் இனத்தினின்றும் பிரிந்து வழிப்போக்கர் மீது பாயும். சேயாற்றின் நீர் பள்ளமான இடத்தில் விழும்போது நீரில் பல குமிழிகள் தோன்றும். அது காண்பவர் கண்களுக்கு இனிய காட்சியை நல்குவதாகும்.[148]

**உழவர் சிறார்**

உழவர் சிறுவர் முள்ளி மலரைப் பறித்துக் கோரையை மென்று நார்கிழித்து அந்த நாரால் தொடுத்த மாலையைத் தலையில் சூடிக் கொள்வர். கண்பினது காயை முறித்து அதன் சுண்ணத்தைத் தம் மார்பில் பொன் உரைகல் போன்று அப்பிக் கொள்வர்.[149]

சிறுவர் பழஞ்சோற்றை வெறுத்ததால் தின்பதற்கு அவலை உலக்கையால் இடிப்பர். அவ்வோசையைக் கேட்டுக் கிளி அஞ்சும்; புது வருவாயை உடையது வயல்.[150] சிறந்த சிறுதேரினை உருட்டிய சிறார்

வருத்தம் தீரச் செவிலித் தயாரிடம் பாலினை உண்டு அவரை அணைத்தபடி துயின்றனர்.[151] இம்மக்கட்செல்வத்தின் சிறப்பினைப்,

**"படைப்புப் பலபடைத்துப் பலரோ(டு) உண்ணும்**
**உடைப்பெரும் செல்வ ராயினும்"[152]**

என்ற பாண்டியன் அறிவுடை நம்பியின் புறப்பாடல் புலப்படுத்தும். உழவரின் சிறுவர் தென்னையின் பெரிய காயை வெறுத்து, நெற்போரின் மீது ஏறி, பனையின் பழத்தைத் தொட முயல்வர்.[153]

**விருந்தோம்பல்**

மருத நிலமான ஆமூரில் உழத்தியர் தம் மக்களை அனுப்பிப் பாணரை முறைமையால் தடுத்து வெண்மையான அரிசிச் சோற்றை நண்டின் கலவையுடன் தருவர்.[154]

தொண்டை நாட்டு மருதநிலத்தில் வெண்மையான சோற்றையும் பெட்டைக்கோழிக்கறி பொரியலையயும் அளித்தனர்.[155] மேலும் கரும்புச்சாறும் வெல்லக்கட்டியும் உண்பதற்கு அளித்துப் போற்றினர்.[156]

தண்டலை உழவர் பலாப்பழம், இளநீர், நுங்கு, வாழைப்பழம், வள்ளிக்கிழங்கு, மேலும் சில பண்டங்களை அளித்து ஓம்புவர்.[157] நெற்களத்தில் பாணர் முதலியோருக்கு நெல் வழங்குவதை வழக்கமாகக் கொண்டிருந்தனர்.[158] இதனைக் களவழி வாழ்த்து என்று துறைப்படுத்திப் புறப்பொருள் வெண்பாமாலை கூறுவதைப்,

**"பகடுவாழ் கென்று பனிவயலு ளாமை**
**அகடுபோல் அங்கட் டடாரித் – துகடுடைத்துக்**
**குன்றுபோற் போர்விற் குரிசில் வளம்பாட**
**இன்றும் போம்எங்கட் கிடர்"[159]**

என்பதனால் அறியலாம்.

நன்னனின் மலைநாட்டு மருத நிலத்தில் வாளைமீன், வரால் மீன் ஆகியவற்றை ஊனுடன் நாள்காலையில் தேறலைத் தருவர். மேலும் உழத்தியர் நெல் வழங்குவர்.[160] ஆம்பலின் அகன்ற இலையில் கள் உண்டனர்.[161]

## நெய்தல் நிலம்

கடலும் கடல் சார்ந்த இடமும் நெய்தல் எனப்பெறும். இங்கு நெய்தல் மலர் மிகுதியாதலின் இந்நிலம் இப்பெயர் பெற்றது என்பார் மா.இராசமாணிக்கனார்.[162] கடற்கரையில் வாழ்ந்த பரதவரே இந்நிலத்துக்குரிய குடிமக்கள். சங்கப் புறப்பாடல்களில், சிறுபாணாற்றுப்படையில் ஓரிடத்தும் மதுரைக்காஞ்சியில் ஓரிடத்துமாக ஈரிடங்களில் மட்டுமே நிலத்தைச் சுட்டும் பொருளில் நெய்தல் என்ற சொல் ஆளப்படுகிறது என்பார் தி. முத்து கண்ணப்பன்.[163] அவைமுறையே வருமாறு:

**"பாடல் சான்ற நெய்தல் நெடுவழி"**[164]

**"நெய்தல் சான்ற வளம்பல பயின்று"**[165]

என்பன; மற்ற இடங்களில் கொடியையோ பூவையோ குறிக்கும் சொல்லாக நெய்தல் உள்ளது.

### நெய்தல் குடியிருப்பு

கடற்கரை ஓரங்களில் பரதவர் வாழ்ந்த குடியிருப்புகள் 'பட்டினம்' எனப்படும். சிறு குடியிருப்புகள் 'பாக்கம்' எனப்படும் என்பார் சு. வித்தியானந்தன்.[166]

### சேரநாட்டு நெய்தல் நிலம்

தெற்குக் கடலில் எடுக்கப்படும் முத்துகள் கொடுமணம், பந்தர் ஆகிய ஊர்களில் விலைபோயின[167] கரிய நீர்நிலையின்கண் மார்கழி

மாதத்தில் மலர்ந்த நெய்தல் பூவால் தொண்டி நகரம் தேன் மணம் கமழ்வதாக விளங்கியது.[168]

## சோழநாட்டு நெய்தல் நிலம்

குலைகளையுடைய தென்னை மரங்களும், வாழை மரங்களும் மலர்ந்த சுரபுன்னை மரங்களும் கொழுவிய காந்தட் செடிகளும் சோழநாட்டு நெய்தல் நிலத்தில் வளமுறத் தோன்றும். அங்குத் துடியோசை போன்ற ஓசையுடைய பேராந்தை வாழும்.[169]

## பாண்டியநாட்டு நெய்தல் நிலம்

பாண்டிய நாட்டு நெய்தல் நிலம் கடல் வாணிகச் சிறப்புடையது. கடல் கடந்த நாடுகட்கு முத்து, சங்கு, பல்வேறு பண்டங்கள், வெள்ளுப்பு, மீன் உணக்கல், பேரணிகள் ஆகியவற்றைக் கப்பல்கள் பாண்டி நாட்டிலிருந்து ஏற்றிச்செல்லும். அக்கப்பல்கள் குதிரைகளை இங்கு இறக்குமதி செய்யும்.[170]

## ஓய்மாநாட்டு நல்லூரிலிருந்து எயிற்பட்டினம் வரையில் நெய்தல் நிலம்

கடற்கரையில் உள்ள வெள்ளிய மணலில் தாழை அன்னம்போலப் பூக்கும்; இளவேனிற்காலம் தொடங்கும் நாளில் செருந்தி மலர் பொன்னைப்போலப் பூக்கும். கழிமுள்ளி நீலமணி போல மலரும். நெடிய தாளையுடைய புன்னை முத்துப்போல அரும்பும். கடற்கரை ஓரத்தில் இக்காட்சியைப் பார்த்துக்கொண்டே வடக்கிருந்து தெற்கு நோக்கிவரின், அந்நெய்தல் நிலத்து நெடிய வழியில் நீலமணி போன்ற உப்பங்கழி சூழ்ந்த ஊர்களையுடைய எயிற்பட்டினம் தோன்றும். அப்பட்டினத்தில் குளிர்ந்த நீரையுடைய குளங்கள் உண்டு.[171]

## தொண்டைநாட்டு நெய்தல் நிலம்

கயல் மீன்களும் இறால் மீன்களும் துள்ளுகின்ற கரிய ஆழ்ந்த பெரிய குளங்களையுடையது வலைஞர் குடியிருப்பு. அவ்வலைஞர் பிள்ளைகளுடன் மீன்களைப் பிடிப்பர். அக்குளம் கோடைக்காலத்தும் நீர் வற்றாத வளமுடையது.[172]

நீராடும் மகளிர் நீர் உண்ணும் துறையில் பொன் மகரக் குழையை வைத்துவிட்டு நீராடச் சென்றனர். சிச்சிலிப் பறவை அந்த மகரக் குழையை இரை என எண்ணி எடுத்துச் சென்று அந்தணர் வேள்விச் சாலையில் உள்ள வேள்வித் தூணில் போய் அமர்ந்தது. அந்தக் குழை யவனரின் ஓதிம விளக்குப் போன்றும் வைகறை வெள்ளி மீன்போன்றும் தோன்றியது. இத்தகைய வளமுடையது நீர்ப்பெயல்துறை என்ற மாமல்லபுரம்.[173] அந்த நீர்ப்பெயல்துறைப் பட்டினத்தில் குதிரைகளும், பண்டசாலைகளும் நிரம்பியிருந்தன. அங்குள்ள இல்லங்களில் ஆட்டுக்கிடாய்களும் நாய்களும் திரிந்தன.[174]

## நெய்தல்நில விருந்தோம்பல்

எயிற்பட்டினத்தில் பரதவர் இரவலர்க்குக் கள்ளினையும் உலர்ந்த குழல் மீன் சூட்டினை அளித்தனர்.[175] நெய்தல் நில வலைஞர் கொழியல் அரிசிக்கூழையும் நெல்லின் கள்ளையும் பச்சைமீன் சூட்டினையும் அளித்தனர்.[176] நீர்ப்பெயல் துறையில் ஆண்பன்றிக் கறியும் கள்ளையும் அளித்தனர்.[177] நன்னனின் மலைநாட்டுப் பாக்கத்தில் நெய்யில் வெந்த தசைப் பொரியலையும் தினைச்சோற்றையும் வழங்கினர்.[178]

## திணைமயக்கம்

புறப்பாடல்களில் ஒழுக்க மயக்கமும், பொழுது, கருப்பொருள் மயக்கமும் காணப்படுகின்றன. நிலம் இரண்டு மயங்கிய இயற்கை

வருணனையைப் புறப்பொருள் பாடல்களில் காணலாம். "நிலம் மயங்கிய திணை மயக்கம் புறநானூற்றில் சுருக்கமாகவும் (புறம்–49:1–3) பொருநராற்றுப்படையில் (178–248) விளக்கமாகவும் அமைந்துள்ளது"[179] என்பர் மா. நவநீதருட்டினன்.

குறிஞ்சிநிலப் பறவை மயில்கள் மருத நிலத்தின் காஞ்சி, மருத மரங்களிலிருந்து ஆரவாரம் செய்யும்.[180] யாழிசை ஒத்த வண்டொலியைக் கேட்டு நெய்தல் நிலத்தின் நிலவு போன்ற மணலிலே ஆடும்.[181]

மருத நிலத்து நாரைகள் கரும்பு, நெல் அரிபவரின் பாட்டொலிக்கு அஞ்சி முல்லை நிலத்தில் தங்கி, அங்கிருந்து நெய்தல் நிலக் கடலில் மீனைத் தின்று பனை மடலிலே தங்கும்.[182]

முல்லை நிலக் காட்டுக் கோழிகள் மருத நிலத்து நெற்கதிரைத் தின்னும். மருத நிலத்து மனைக் கோழிகள் குறிஞ்சி நிலத் தினையைத் தின்னும். மலையில் உள்ள மந்திகள் உப்பங்கழிகளில் மூழ்கி நீராடும். உப்பங்கழிகளில் திரியும் நாரை மலையில் சென்று தங்கும்.[183]

**மக்களின்வழித் திணைமயக்கம்**

பரதவர் குறிஞ்சிப் பண் பாடினர். குறவர் நெய்தல் மலர் மாலை சூடிக்கொண்டனர். முல்லை ஆயர்கள் மருதப்பண் பாடினர். மருதநில உழவர் முல்லை நிலத்தைப் புகழ்ந்தனர்.[184]

**பண்டமாற்று**

குறிஞ்சி நில மக்கள் தேனையும் கிழங்கையும் விற்று அதற்கு ஈடாக மீன் நெய்யையும் மீனையும் பெற்றுச்செல்வர். மருதநிலத்தார் கரும்பையும் அவலையும் விற்பர், அதற்கு மாற்றாகக் குறிஞ்சி நிலத்தின் மான் தசையையும் கள்ளினையும் பெற்றுச் செல்வர்.[185]

இத்திணைமயக்கத்தின்வழி ஒரு நிலத்துவாழ் உயிர்களுக்கு மற்றொரு நிலத்துவாழ் உயிர்கள் உதவியாக அமைந்தன எனலாம். எனவே நானிலக் கருப்பொருளும் நானில மாந்தர்களுக்கும் பயன்தரும்படி அமைந்தன என்றும் நானிலங்களும் ஒன்றற்கொன்று அணித்தாக அமைந்துள்ளன என்றும் நானிலமும் ஒன்றோடு ஒன்று ஒன்றிப் பொருந்துமாறு இனிதின் வாழ்ந்தமைக்குக் கரிகாலன் செங்கோன்மை ஏதுவாகும் என்றும் பொ.வே. சோமசுந்தரனார் கூறுவார்.[186]

## பாலை

இலக்கியத்தில் விளக்கப்பட்டுள்ள பாலை நிலத்திற்கொப்ப இன்றும் இராமநாதபுரப் பகுதிகள் அமைந்துள்ளன என்று இராமநாதபுரம் மாவட்டத்தைப் பற்றிய அரசுப் பதிவேடு கூறுகிறது.[187]

'பழந்தமிழக நிலவியல்' குறித்து ஆராய்ந்த செல்வநாயகம் என்பார் பின்வருமாறு கூறுகிறார். 'பழங்காலத் தமிழகத்தில் நிலம் ஐந்திணை நிலமாகப் பகுக்கப்பட்டது. அவை ஒவ்வொன்றும் தனிப்பட்ட நில அமைப்பும், அதற்குப் பொருத்தமான மக்கள் வாழ்வியலும் பெற்று அமைந்திருந்தது. இப்பகுப்பு நிலவியல் அடிப்படையில் சிறப்பாக அமைந்ததாகும்.[188] அவர் அந்தக் கட்டுரையின் மற்றொரு பகுதியில் பாலையை விளக்கும்போது பிறநாடுகளில் உள்ளது போன்ற பாலைவனம் தமிழகத்தில் இல்லாததையும் பருவ மாறுபாட்டால் உண்டாகிற பாலையே உண்டு என்பதையும் விளக்குகிறார்.

தமிழகம் முழுவதும் பருவ மாறுபாட்டிற்குட்படுவதால் இங்கு உண்மையான பாலைவனப் பகுதி என்பதொன்றில்லை. இருப்பினும், தொடர்ந்து பருவ மழை தவறுங் காலங்களில் தற்காலிக வறட்சியைக் காணும் நிலப்பகுதிகளும் உண்டு. அக்காலங்களில், ஆறுகளும் குளங்களும்

வறண்டு விடுகின்றன. இராமநாதபுரம், திருநெல்வேலி மாவட்டங்கள் உட்பட்ட இந்தியத் தீபகற்பத்தின் தெற்குமுனை அடிக்கடி மழையின்மையையும் வறட்சியையும் காண நேர்கிறது. இப்பகுதிகள் பழங்காலத்திலும் இன்றிருப்பது போலவே இருந்திருக்கக்கூடும். சங்கப் புலவர்கள் இக்குறிப்பிட்ட பகுதிகளைத்தான் பாலை எனக் குறிப்பிட்டார்கள் எனலாம். பயிர்கள், விலங்குகள் ஆகியவற்றிற்கு ஏற்றவையாக இல்லாதிருந்த பாலைப்பகுதி இதுவாகும்[189] என்றும் அவர் கூற்று ஐந்திணை நிலத்தில் பாலை என்பது நிலையானது அல்ல என்பதைத் தெளிவுறுத்துகிறது.

“கோபி, சகாரா போல்வதான அறியப்பட்ட பாலை நிலங்களின் தன்மைகளுக்குச் சிறிதளவேனும் ஒத்துக் காணப்படுவதாகிய பாலைவன அமைப்புத் தமிழகத்தில் இருந்ததில்லை”[190] என்பார் தனிநாயகம்.

“ஐந்திணைகளில் மலையும் காடும் திரிந்ததன் விளைவே பாலை என்பதால், பழந்தமிழர், ‘பாலை’ என்பதைத் தனிப்பொருளாக, நிலமாகக் கொள்ளவில்லை என்று கூறிப் பாலைக்குத் தனிநிலம் இல்லை”[191] என்பார் ந. சஞ்சீவி.

மு. வரதராசன் “நிலத்தை நான்கு வகையாகப் பகுத்து, நானிலம் என்று வழங்கும் மரபு உண்டு.... நால்வகை நிலங்களுள், மழையின்மையால் வறட்சியுற்றுக் கெடுவன குறிஞ்சியும் முல்லையும் ஆகும். அவ்வாறு கெட்ட நிலையில் அவை பாலை எனப்படும்”[192] என்று குறிப்பிட்டுச் செல்வார்.

பாலைக்குத் தனியாக நிலமில்லை. முதுவேனிற் காலத்தில் காடும் மலையும் வளம் பிரிந்த வறண்ட நிலையே பாலை எனப்படும். பாலை – பிரிவு – வளம் பிரிந்ததால் அப்பெயர் பெற்றது. அக்கால நிலங்களே பாலை எனப்படும். இதனாலேயேதான் தமிழகம் நானிலம் எனப்பட்டது என்பார் புலவர் குழந்தை.[193]

பாலைக்குத் தனியே நிலமில்லை என்பது உ.வே. சாமிநாதையரின் கருத்துமாகும். அவர் "யானைகள் குறிஞ்சி நிலத்தில் வலியோடும், பாலை நிலத்தில் உரனழிந்தும் காணப்படுகின்றன. குறிஞ்சி திரிந்து பாலையாகிறபோது யானைக்கு வேண்டிய உணவின்மையின் உரனமிழந்து போகிறது. எனவே பாலைக்குத் தனியே நிலமில்லை. திரிந்து பாலையாதலே இயல்பு"[194] என்பார்.

சி. இலக்குவனார், 'தொல்காப்பிய ஆராய்ச்சி' என்னும் நூலில் 'பாலை நிலம்' குறித்துக் கூறும்போது, "நிலம் நால்வகையாகப் பிரிக்கப்பட்டது. காடுறையுலகம், மைவரை (மலை) யுலகம், தீம்புனல் உலகம், பெருமணல் உலகம் என்பனவாக முறையே முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல் எனச் சொல்லப்பட்டன. உலகம் இந்நால்வகை இயற்கைப் பிரிவினுள் அடங்கிவிடுகிறது. பாலையின் தோற்றம் இயற்கையன்று. நிலைத்தலும் அன்று. சோலை நிலம் பாலையாகும். பாலைநிலம் சோலையாவதும் என்றும் நிகழக் கூடியனவே. ஆதலின் ஆசிரியர் பாலையை நிலப்பாகுபாட்டினுள் சேர்த்திலர்"[195] என்று கூறுவார். இலக்கியத்தில் எங்கும் பாலைக்குத் தனிநிலம் இருந்ததாகச் சான்று இல்லை என்பார் மு. தங்கராசு.[196]

இதுகாறும் கூறியகருத்துகள்வழி, பாலைக்குத் தனியாக நிலம் அமைந்திருக்கவில்லை என்று அறியமுடிகிறது.

இனி, பாலை என்பது முல்லையும் குறிஞ்சியும் திரிந்து நல்லியல்பு இழந்து வறட்சி தோன்ற அமைகின்ற நிலன்தானா? அன்றி எந்நில மருங்கிலும் தோன்றும் இயல்புடையதா என்பது ஆய்தற்குரியது.

**நானில மருங்கில் பாலை தோன்றும்**

மு.தங்கராசு அவர்கள் பல்வேறு இலக்கிய அடிகளைச் சுட்டிக்காட்டி, அவை அனைத்தும் நீரின்றி வறண்ட வெப்ப நிலத்தைச் சுட்டிக் காட்டுகின்றனவேயன்றிப் பாலைநிலம் எனத் தனியாகக் குறிக்கப் பெறவில்லை என்பார்.[197]

நீரற்று வறண்டுபோன நிலப்பகுதியே பாலைநிலம். தொல்காப்பியர் பாலைக்குத் தனிநிலம் குறிக்கவில்லை. முல்லையிலும் பாலை தோன்றலாம். குறிஞ்சியிலும் பாலை தோன்றலாம்; மருதத்திலும் பாலை தோன்றலாம்; நெய்தலிலும் பாலை தோன்றலாம், வளம் பொய்த்து வறண்டுபோன எந்த நிலத்திலும் பாலை தோன்றும் என்பார் சாமி. சிதம்பரனார்.[198]

முத்துசாமி ஐயர் "பாலைக்கு, நிலமே இல்லை என்று கொள்ளாது, அது மற்றை நால்வகை நிலத்திற்கும் உரியதென்றே கொள்ளவேண்டும் என்பது தொல்காப்பியர் கருத்து" என்று குறிப்பிட்டுள்ள செய்தி எந்நிலத்தின் மருங்கிலும் பாலை தோன்றும் என்பதையே வலியுறுத்துகிறது.

எனவே, பயன் நல்காத வெம்மை மிகுதியும் அடைந்த எந்நிலமும் பாலை என்றாகும். 'நெய்தல் நிலம் கூடப் பாலையாகத் திரியும்' என்று தனிநாயகம் குறிப்பிடுவார்.[199]

'இளங்கோவடிகள் கூறும் குறிஞ்சியும் முல்லையும் முறைமையில் திரிந்த பாலை, பெரும்பான்மை பற்றியதாகும்; அன்றிப் பாலைக்கு அவர் கூறுகிற கூற்றே முழுமையான விளக்கமாக அமையும் என்று ஏற்றுக்கொள்ள இயலாது"[200] என்ற மு. தங்கராசுவின் கருத்து நினைவுகூரத்தக்கதாகும். வளம் சிறிது குறைந்தாலும் விரைந்து நலம் கெடும் இயல்பின குறிஞ்சியும் முல்லையும். ஏனைய நிலங்கள் நெடுநாள் வளம் குன்றிய நிலையில்தான் வெறுமையும் வெம்மையும் அடையும் தன்மையன. இதனைத்தான் இளங்கோவடிகள் கூறும் விளக்கம் உணர்த்துகிறது.

மேற்கூறிய பல்வேறு கூற்றுகளால் தமிழகம் நானில அமைப்புடையதே என்பதும் ஐந்தாவது ஆகிய பாலை என்பது நானிலத்தின் திரிந்த நிலையில் காணப்படும் நிலம் என்பதும் பெறப்படும்.

மயிரை விரித்தது போன்ற கரிய மணல், வெயிலால் வெம்மைகொண்டு விளங்கியது. வெயிலின் வெம்மையால் பரல்கள் சூடேறின. பாலை என்ற நீண்ட வழிபொருந்திய சுரத்தில் கடம்ப மரங்கள் இலையற்றுக் கிளைகளுடன் விளங்கின. இவ்வழியில் விறலி சென்றாள்.[201]

பாலை நில மக்கள் வேடர், எயினர், மறவர், எயிற்றியர், மறத்தியர் எனப்பட்டனர். இவர்கள் வாழ்ந்த ஊர்கள் பறந்தலை, குறும்பு எனப்பட்டன. இருப்பை, ஓமை, உழிஞை, பாலை, யா முதலிய மரங்கள் இந்நிலத்துச் சிறந்த மரங்களாகும். இந்நிலத்தில் குரா, மரா, பாதிரி மலர்கள் சிறந்தவையாகும்.

## எயினர் குரம்பை

பாலை நிலத்தில் ஈத்தின் இலையால் வேய்ந்த குடிசைகளில் எயினர் (வேட்டுவர்) வாழ்ந்தனர். அக்குடில் முள்ளம்பன்றியின் முதுகைப் போன்றதாகும்.[202] குழந்தை பெற்ற எயிற்றி மான் தோல் படுக்கையில் முடங்கிக் கிடந்தாள்.[203] எயிற்றியர் உளி போன்ற வாயையுடைய கடப்பாரையால் கரம்பை நிலத்தைத் தோண்டி அதிலிருந்த புல்லரிசியைக் கொணர்வர். அவற்றை வீட்டு முற்றத்தில் உள்ள மண் உரலில் இட்டு உலக்கையால் குற்றினர். கிணற்றிலுள்ள சிறிதளவு உவர் நீரை முகந்து, உலைவைத்து, புல்லரிசிச் சோறு சமைத்தனர். அச்சோற்றைக் கருவாட்டுடன் உண்டனர்.[204]

## எயினர் வேட்டை

எயினர் குட்டைகளை அடுத்துக் குழிகளைத் தோண்டினர்; இரவில் குட்டையில் இருந்த நீரைப் பருக வந்த பன்றியை அம்பெய்து வீழ்த்தத் தாம் தோண்டிய குழிகளில் பதுங்கியிருந்தனர். பன்றி வேட்டை இல்லாத பொழுது, பகலில் வேட்டை நாய்களுடன் சென்று வலைவிரித்து முயல்களைப் பிடித்தனர்.[205]

## எயினர் விருந்தோம்பல்

அக இலக்கியத்தில் பாலை நிலம் கொடுமையானதாகக் காட்டப்பெறுகிறது. ஆனால் புற இலக்கியமாகிய ஆற்றுப்படையில் பாலை நிலத்தின்கண் விருந்தோம்பல் நிகழ்வு நடைபெறுகிறது.

எயினர் புல்லரிசிச் சோற்றையும் சமைத்த கருவாட்டையும் தேக்கிலையில் வைத்துப் பாணர்களுக்கு அளித்தனர்.[206] அவர்கள் ஈத்தின் விதைபோன்ற சிவந்த சோற்றையும் உடும்பின் பொரியலையும் வழங்கினர்.[207] நன்னனை நினைத்துப் போகின்றோம் என்று வேடர்களிடம் கூறின், கிழங்குகளையும் தசைகளையும் அளித்து உண்ணுமாறு செய்வர்.[208]

## புரவலர் விருந்தோம்பல்

புரவலர் பரிசிலருக்கு ஆடை, கள், உணவு, பரிசுப்பொருள் முதலியவற்றை அளித்தனர்.

### ஆடை

இரவலர்கள் மிகவும் வறிய நிலையில் கிழிந்த ஆடை உடுத்தியவராய்ப் புரவலரைக் காணுகின்றனர். இரவலர்களின் வேறுபாட்டினைக் களையும்பொருட்டு முதலில் அவர்களின் பழைய ஆடைகளைக் களைந்து புரவலர்கள் புத்தாடைகளை அளித்து உடுக்கச் செய்தனர்.

பழைய ஆடைகள் ஈரும் சீலைப் பேனும் நிரம்பியதாயும் கிழிந்தும், கிழிந்த ஆடைகள் தைக்கப்பட்டும் வியர்வையால் நனைந்தும் அழுக்குடையதாகவும் காணப்பட்டன.[209] மேலும் கொட்டைப் பாசியின் வேரைப் போன்று கிழிந்த கந்தை ஆடையாகவும்[210] மழையில் நனைந்த பருந்தின் இறகுபோன்று அழுக்குடைய கிழிந்த ஆடையாகவும் இருந்தன.[211]

புத்தாடைகள் பூத்தொழில் நிரம்பியதாகவும் பாம்பின் தோலைப் போன்று மென்மையாகவும் விளங்கின.[212] அவை பாலாவி[213] போன்றும் மூங்கிலின் உட்பட்டை[214] போன்றும் நுட்பமான நூலால் நெய்யப்பட்ட ஆடையாகவும்[215] பட்டாடையாகவும் விளங்கின.[216]

**கள்**

இரவலரின் வழிநடை வருத்தம் தீரப் புரவலரின் ஏவல் பெண்டிர் பொற்கலத்தில் கள் அளித்தனர்.[217] அந்தக் கள் பாம்பு நஞ்சுபோல் தெளிவுடையதாகவும் மயக்கம் தரத்தக்கதாயும் விளங்கிற்று.[218]

**உணவு**

புரவலர்கள் இரவலரின் பசிப் பிணியைப் போக்கினர். அவர்கள் செம்மறி ஆட்டின் இறைச்சியைச் சூடாகப் பரிமாறச் செய்தனர்.[219] அவர்கள் இறைச்சியையும் சிறந்த அரிசியால் ஆக்கிய சோற்றையும் அருகில் இருந்து உண்ணச் செய்தனர்.[220] இவ்விருந்தோம்பல்,

**"முகத்தான் அமர்ந்தினிது நோக்கி அகத்தானாம்**
**இன்சொ லினதே அறம்"**[221]

என்ற திருவள்ளுவர் வாய்மொழி விளக்கமுறும் வகையில் அமைந்துள்ளமை உன்னற்பாலது.

அவ்வுணவு ஞாயிற்று மண்டிலத்தை இகழும்படியான பொற்கலத்திலும்[222] நிலவைச் சூழ்ந்த விண்மீன்கள் போன்ற பெரிய உண்கலத்தைச் சுற்றியுள்ள பொன்னாலான சிறிய உண்கலங்களிலும் அளிக்கப்பட்டது.[223] இவ்வகைச் சுவையுடைய உணவு பாணர் முதலியோர்க்கு அளிக்கப்பெற்றது.[224] மேலும் பல பண்ணியாரங்களும் வழங்கப்பெற்றன.[225]

## பரிசுப் பொருள்கள்

புரவலர் பரிசிலர்க்குக் கன்றுகள், பிடிகள், களிறுகள் நான்கு குதிரைகளைப் பூட்டிய தேர்கள், குதிரைகள், எருதுகள், ஆநிரை, அணிகலன்கள் முதலிய பொருட்களுடன்[226] பாகனையும்[227] அளித்தனர்.

பாணன், பொருநன் ஆகியோருக்குப் பொற்றாமரை மலரையும் பாடினி, விறலி ஆகியோருக்குப் பொன்னரிமாலையும் முத்துமாலையும் அளித்தனர்.[228]

## ஆற்றுப்படைகளில் நில வருணனையின் அருமை

ஐவகை நில வருணனை, ஆற்றுப்படையில் பல்வேறு நோக்கங்களில் அமைந்துள்ளது. அகப்பாடல்களில் நில வருணனையிலிருந்து, ஆற்றுப்படை நில வருணனை வேறுபடுவதை நன்கு காணலாம். உவமையாக நாட்டுவள வருணனையாக, அகப்பாடற் பின்னணியாக இயற்கை பாடப்பட்ட நிலையையும் பின்னர் வழிநடை வருணனையாக இயற்கை பாடப்படல் ஆற்றுப்படைகளில் சிறப்பாக உள்ள நிலையையும் காணலாம் என்பார் நா.செயராமன்.[229]

இயற்கையை வருணிக்கும் வாய்ப்புப் புலவனுக்கு ஆற்றுப்படை அமைப்பில் மிகுதியும் கிடைக்கிறது. ஏனைய பாடல்களைவிட ..... வழியின் இயற்கை அழகு, செழுமை, நாட்டின் வளம் ஆகியவற்றை விளக்கமாகப் பாடுவதற்குரிய நல்ல வாய்ப்புக் கவிஞனுக்குக் கிட்டுகிறது என்று கூறுவார் தனிநாயகம்.[230]

வழி வருணனையும் மக்கள் விருந்தோம்பும் பகுதியும் மன்னரின் பண்பையும் விருந்தோம்பலையும் விளக்கும் முன்னுரையாகத் திகழ்கிறது என்னும் பி.டி.சீனிவாச ஐயங்காரின் கருத்து இங்கு நினைவுகூரத்தக்கது.[231]

“பாட்டுடைத் தலைவன் பெருமையைப் பாடுமுகத்தான் நிலத்தையும் மக்களையும் ஒட்டிய இந்நில அமைப்பு வருணனையே ஆற்றுப்படைப் பாடல்களில் மேலோங்கியுள்ளது”[232] என்ற தெ.பொ.மீனாட்சிசுந்தரனாரின் கருத்து இட வருணனையில் வலிவுபெறுகிறது.

ஆற்றுப்படையின் இயற்கை இடவருணனை இயற்கை நோக்கு மக்கள் வாழ்வோடு பின்னியதாகக் காணப்படுகிறது. ‘நில அமைப்பு’ என்ற கோப்பிலேயே அந்நிலச் சமுதாய மக்கள் வாழ்வும் புனையப்படுகிறது.

ஐவகை நிலமும் பாடப்படும்போது நிலப் பின்னணியில் மக்கள், தொழில், குடில், உணவு, உடை, அணிகள், விருந்தோம்பல் ஆகியனவும் அமைகின்றன.

ஆற்றுப்படையில் பிற பகுதிகளைவிட இயற்கை வருணனைப் பகுதியே பெரும்பான்மை ஆளுமை செய்கிறது என்பார் மா. நவநீதகிருட்டினன்.[233]

**இடவருணனையின் தேவை**

1. தலைவனின் (வள்ளலின்) இருப்பிடத்தின் ஊர் வழியைக் கூற இடவருணனை தேவை. ஆற்றுப்படைகளில் நிலத்தின் தன்மையாலும் சிறப்பாலும் இயற்கைக் காட்சிகளாலும் வருணனை தேவைப்படுகிறது.

2. பசித்துன்பத்தை மக்களும் களைந்தனர் என்பதை எடுத்துக் கூற இடவருணனை வேண்டுவதாகிறது.

3. தலைநகரை வருணிப்பது இன்றியமையாத கூறு. அதற்கு நாட்டு வருணனை தேவையாகிவிடுகிறது.

4. புலவரின் நாட்டுப்பற்று, நாட்டினை வருணிப்பதில் ஆர்வத்தை வெளிப்படுத்த இடவருணனை தேவையாகிறது.

5. கலைஞர்கள் கூறும் வழி வள்ளலின் இருப்பிடத்திற்கு இட்டுச்செல்லும் வழியாக அமைகிறது. ஆகவே இடவருணனை தேவையாகிறது.

6. இட வருணனை வாயிலாக வழிநெடுகிலும் இயற்கைக் காட்சிகளைக் கூறுவதால் கலைஞர்தம் துன்பநிலை மறப்பர் என்ற எதிர்பார்ப்பு.

## மலைகள்

நாட்டின் பல வளத்திற்கும் அடிப்படையாய் அமைவன மலைகளாகும். மலைவளம் நிறைந்த நாடு மழைவளம் சிறப்பத் தன்னிறைவுடன் திகழும். மனிதனுடைய வாழ்வுக்குத் தேவையான எல்லாப் பொருள்களும் அங்கே கிடைக்கும். தேனும் கிழங்கும் கனியும் காயும் மணியும் பொன்னும் அகிலும் ஆரமும் என்று பல்வேறு பொருள்களை வழங்குகிறது மலை. நிமிர்ந்துயர்ந்து வளர்ந்து நிற்கும் மலைக்காட்சி ஒரு நாட்டின் வளத்தைப் பெருமிதத்தோடு அனைவர்க்கும் காட்டும் அழகிய தோற்றமாகும். தண்சுனை நீரும், அலை அருவி நீரும், கருங்குயிலின் பாட்டும் தோகை மயிலின் ஆட்டமும் புள்ளிமானின் துள்ளலும், பறவைகளின் ஓசையும் விலங்கினத்தின் கூட்டமும் என்றிவ்வாறாக எழிலும் பயனும் மிக்கதாக விளங்குவது மலை. சங்க காலத் தமிழக மலைகள் கண்டாரை ஈர்க்கும் கவின்மிகு காட்சி தருவனவாய் அமைந்தன; மக்களுக்கு வேண்டிய பல்வகைப் பொருள்களைத் தந்து உதவின.

மனிதன் தோன்றி வளர்ந்த வரலாறு எப்படியிருப்பினும் அவன் நிலைத்து இணைந்து வாழக் கற்றுக்கொண்ட இடம் மலைப்பகுதியே ஆகும். 'முதன்முதலாக மக்கள் குடியேறி வாழ்ந்த இடம் மலை' என்பார் ந.சி. கந்தையாபிள்ளை.[234]

கற்கால மக்கள் பெரிதும் குன்றுகளிலும் மலைச்சரிவுகளிலும் வளம் செறிந்த காடுகளின் ஓரங்களிலும் வாழ்ந்து வந்தனர்; இரும்பினைக்

கண்டறிந்த பின்னரே, ஆதி மனிதர் காட்டினைத் தம்முடைய வாழ்விடமாகக் கொண்டிருக்கலாம் என்று கருதுவது பொருத்தமாகத் தோன்றுகிறது.[235]

இமயம் முதல் குமரி வரை பல்வேறு மலைகளைச் சங்க இலக்கியம் காட்டுகிறது. தமிழ் இலக்கிய மரபில் மலை என்னும் சொல் ஓங்கிய பருவதத்தைக் குறிக்கும். மலையிற் குறைந்தது குன்று, அறை, பாறை, கல் எனப் பல பெயர்களைப் பெறும்.[236]

**அயிரைமலை**

சேரநாட்டு மலைகளுள் அயிரைமலை சிறப்புவாய்ந்த ஒன்றாகும்.இது யானைமலைத் தொடருள் ஒன்று. இக்காலத்து இம்மலை 'ஐவர்மலை' என்று வழங்கப்பெறுகிறது.[237]

புகழ்படைத்த சேரநாட்டிடையே பகைவர் போருடற்றாவாறு குறுக்கிட்டுக் கிடக்கும் நேரிதாய் நெடுதுயர்ந்தது அயிரை மலையாகும் என்பதனைச்,

> **"சீருடைத் தேத்த முனைகெட விலங்கிய**
> **நேருயர் நெடுவரை அயிரைப் பொருந"**[238]

என்னும் பதிற்றுப்பத்து அடிகளால் தெளியலாம்.

"அயிரை என்னும் நெடிய மலையைப் போல நீ வாழும் நாள் குறையாது பெருகுமாக" என்று சேரமான் கடுங்கோ வாழியாதனைக் கபிலர் வாழ்த்துகிறார்.[239] இதன்வழி அயிரைமலை உயர்ந்த சிகரங்களைக் கொண்டது என்பது தெரிகிறது.

"அயிரை மலையிலுள்ள கொற்றவையைப் பரவி, முடியரசர்களாகிய சோழ பாண்டியரும் குறுநிலமன்னரும் வணங்கி வழிபட்டு நிற்கவும் வெற்றியெய்திய பெருமக்களின் வழிவந்தவனே"[240] என்று பாடுகிறார்.

ஆகவே அயிரைமலை மிகச் சிறந்த மலையாகச் சங்க காலத்தில் திகழ்ந்தது என்பதும் அங்கு அச்சம் தருகின்ற கொற்றவைக்குக் கோயில் இருந்தது என்பதும் அம்மலை சேரர்க்கு உரிமையுடையதென்பதும் தெளியப்படும்.

**இமய மலை**

உலகில் மிக உயர்ந்த மலையாக விளங்குவது இமயம். இன்று இந்திய நாட்டின் வடவெல்லையாய் இருந்து பாதுகாப்பு அரணாக விளங்கி வருகிறது. சங்க காலத்தில் இவ்விமய மலை தமிழ் மன்னர்களின் ஆட்சி எல்லையாகத் திகழ்ந்தது என்பதை,

**"வடதிசை யெல்லை யிமய மாகத்**
**தென்னங் குமரியொ டாயிடை"**[241]

என்ற பரணரின் ஐந்தாம் பத்தான பதிற்றுப்பத்தால் அறியலாம். தமிழக வேந்தர்கள் அவ்வப்போது படையெடுத்துச் சென்று இமயம் வரையில் தங்கள் ஆட்சியின் பெருமையினை நிலைநாட்டி வந்தார்கள். மூவேந்தருள் யார் இமயம் மீது படையெடுத்துச் சென்றாலும் தமிழர்தம் எல்லையின் அடையாளமாகத் தங்கள் கொடிகளை இமய உச்சியில் நட்டு வந்தார்கள்[242] என்பதனை,

**"வடபுல இமயத்து வாங்குவிற் பொறித்த**
**எழுவுறழ் திணிதோள் இயல்தேர்க் குட்டுவன்"**[243]
**"பொன்னிமயக் கோட்டுப் புலிபொறித்து மண்ணாண்டான்"**[244]
**"கயலெழுதிய விமய நெற்றியின்"**[245]

என்ற அடிகளின்வழி, சேர சோழ பாண்டியர் தம் இலச்சினையைப் பொறித்தனர் என அறியலாம்.

**இமயவளம்**

வானளாவ உயர்ந்தோங்கி நிற்கும் இப்பனிமலை வளம் நிறைந்தது. வற்றாத ஆறுகளை உற்பத்தி செய்யும் பெருமலை இது. இதனைச் சங்க இலக்கியத்தில்,

**"பொன்படு நெடுங்கோட்டு, இமயம்"[246]**

**"பேரிசை இமயம்"[247]**

**"இமயத்துக் கோடுயர்ந்தன்ன"[248]**

என வருவதனால் உயர்ச்சியும் வளமும் புலப்படும்.

மலையெனின் மழைவளம் பெருகும் தன்மையினைக் கொண்டிருத்தல் இயல்பு. இச்செய்தியினை

**"இமயத் தீண்டி இன்குரல் பயிற்றிக்**
**கொண்டன் மாமழை பொழிந்த"[249]**

என்று புறநானூறு புகல்கிறது.

**கவிரமலை**

கவிரமலை தென்னாட்டில் வாழ்ந்த ஆய் என்பானது பொதியில் மலையின் நடுவிடத்தது. இம்மலையில் சூரர மகளிர் வாழ்ந்து வந்தனர்.[250]

**குடகு மலை**

குடமலை என்பது மேற்குமலை. காவிரி ஆறு குடமலையில் பிறந்து பெருவளம் பெருக்கும் பான்மையினைக்,

**"குடமலைப் பிறந்த தண்பெருங் காவிரி"[251]**

என்று குறிப்பிடுகிறது மலைபடுகடாம். இதனால் குடமலை என்பது குடகு மலையே என்பது உறுதியாகிறது. மேலும் பொதுவாகக் குடமலை என்பது

மேற்கு மலையைக் குறிப்பிடுகிறது. காவிரி தோன்றும் குடகு மலையைக் குறிப்பிடவில்லை என்பதைச்,

**"சென்ற ஞாயிறு நண்பகற் கொண்டு**
**குடமுதற் குன்றம் சேர"[252]**

என்ற மதுரைக்காஞ்சி அடிகளால் அறியலாம். எனவே இடத்தை வைத்துக் குடமலைக்குப் பொருள் கொள்ளவேண்டும்.

### குதிரை மலை

குதிரை மலை மலையமான் திருமுடிக்காரி என்னும் வள்ளலின் மலை என்று பெருஞ்சித்திரனார் குறிப்பிடுவார்.[253] இம்மலையைப் பிட்டங் கொற்றனும் ஆண்டான் எனக் கருவூர்க் கந்தப்பிள்ளை கூறுவார்.[254]

முதிரமலை பேகன் மலைப்பகுதியாக இருந்து பின்னர், குமணன் ஆட்சிக்கு உட்பட்டது போன்று காரியின் குதிரை மலையும் பின்னாளில் பிட்டங்கொற்றனுக்கு உரிமையானது போலும்.

### குமரிமலை

குமரியாறும் குமரி மலையும் பனிமலையினும் கங்கையாற்றினும் மிகமிகத் தொன்மை வாய்ந்தனவாம் என்பார் சி. இலக்குவனார்.[255]

### கொல்லிமலை

சங்க காலத்தில் சிறந்து விளங்கிய மலைகளுள் ஒன்று கொல்லிமலை. இம்மலையைப் பரணர் பொறையனுக்கு உரியதென்றும்; கபிலர் வல்வில் ஓரிக்கு உரியதென்றும் பாடியுள்ளனர். தெய்வத்தால் எழுதப்பெற்ற கொல்லிப்பாவை பற்றிய செய்திகள் இவர்களால் சொல்லப்பட்டன.[256]

பதிற்றுப்பத்துள் எட்டாம் பத்தினைப் பாடிய அரிசில்கிழார், தகடூர் எறிந்த பெருஞ்சேரல் இரும்பொறையைக் குறிப்பிடும்போது,

**"கொல்லிப் பொருந கொடித்தேர்ப் பொறைய"[257]**

என்று பாடுவதால் கொல்லிமலை சேரர்க்குரிய மலை என்பது தெள்ளிதின் விளங்கும்.

வன்பரணரும் பெருஞ்சித்திரனாரும் வல்வில் ஓரியைப் பாடும்போது, கொல்லிமலை ஓரியினுடையதாகப் பாடியுள்ளனர் என்பதை,

**"ஓங்கிடும் கொல்லிப் பொருநன்"[258]**

**"கொல்லி யாண்ட வல்வில் ஓரி"[259]**

என்பதனால் அறியலாம்.

நற்றிணையில் சேரர்க்குரிய மலை என்று பாடும் பரணரே "ஓரிக்கொல்லி"[260] என்று குறிப்பிடுவதால், கொல்லி சேரரின் பேராண்மைக்கு உட்பட்டதாலும், சில காலம் ஓரியின் காவலைப் பெற்றிருந்தது என்று அறியமுடிகிறது. 'பெரும்பெயர்க் கொல்லி'[261] என்றும் 'பலவின் பயன்கெழு கொல்லி'[262] என்றும் போற்றப்படுகிறது.

**தோட்டிமலை**

கடையெழு வள்ளல்களுள் ஒருவரான கண்டீரக் கோப்பெரு நள்ளியின் மலை இத்தோட்டி மலை. "இது கரும்பு போன்ற இனிய நீரையும் கொண்டது" என்று வன்பரணர் குறிப்பிடுவார்.[263] இது ஒலிக்கின்ற அருவியையுடையது.[264] மதுரைக்குத் தெற்கிலுள்ள மலைநாட்டில் ஒருபகுதி நள்ளிக்கு உரியது.[265]

**நவிரமலை**

இரணிய முட்டத்துப் பெருங்குன்றூர்ப் பெருங்கௌசிகனார் என்னும் புலவர் தாம் பாடிய மலைபடுகடாம் என்ற பாடலில் நவிர மலையின் சிறப்பினைக் குறிப்பிடுகிறார்.

நவிரமலையில் கடல் சூழ்ந்த உலகம் நடுங்குமாறு அச்சத்தைத் தோற்றுவித்த கடிய வலிமையுடைய நஞ்சினையுண்டு அருளியவனும், பெரும்புகழ் கொண்டவனுமாகிய முழுமுதற்கடவுளின் இயல்பு கூறப்பட்டுள்ளது.[266] அந்த உயர்ந்த மலை மூங்கில் சிறந்து வளரும் நிறைந்த காடுகள் உடையது.[267]

நவிரமலை திருவண்ணாமலைக்கு வடமேற்கில் உள்ளது. இப்போது அது 'திரிசூலகிரி' என்றும் 'பருவதமலை' என்றும் அழைக்கப்பெறுகிறது. அம்மலையில் ஓடிவரும் கண்ணுக்கினிய சேயாறு இப்போது 'சண்முக நதி' என்றழைக்கப்படுகிறது.[268]

**நாஞ்சில் மலை**

சங்க காலத்தில் வள்ளுவன் என்றொரு கொடை வள்ளல் இருந்தான். அவனுக்குரிய மலை நாஞ்சில் மலையாகும். நாஞ்சில் மலை பொதியின் மலைத் தொடர்களுள் ஒன்று. இப்போது இது **'மருத்து மலை'** என வழங்குகிறது. முன்னாளில் இது 'நஞ்சிலா மலை' என வழங்கிற்றென்பர். இது நாஞ்சில் நாட்டில் நாகர்கோவிலுக்கும் தென்குமரிக்கும் இடையில் உள்ளது என்பார் ஔவை சு. துரைசாமிப்பிள்ளை.[269]

நாஞ்சில் மலையில் நீர் உள்ள பள்ளத்தில் இடப்பட்ட விதை, பின் நீர் இல்லாமல் போனாலும் அழியாது முளைத்துத் தழைத்துக் கரும்புபோல வளரும். மழையால் பெய்யப்பட்ட நீர், கோடைக்காலத்தில் வெயில்

காய்ந்தாலும், மகளிரின் கண்களைப் போன்ற குவளை முதலிய மலர்கள் மலரும். மணி போன்ற நீர் வேங்கையின் பொன் போன்ற மலர்களைச் சுமந்து கடலில் செல்லும். நாஞ்சில் மலை வெள்ளிய அருவிகளையும் உடைய வளமுடையது.[270] பாரியின் பறம்பு உழாமலே நன்கு வளத்தை நல்கியது போல நாஞ்சில் மலையும் உழாமல் பயன் விளைவிக்கும் பான்மையதாகும்.[271] ''பலாப்பழம் நிறைந்தது நாஞ்சில் மலை.''[272]

### நேரிமலை

நேரிமலை சேரற்குரியது. இது 'கல்லுயர் நேரி'[273] என்றும் அருவி வீழ்வதால் ஒலியுடையது[274] என்றும் சிறப்பித்துக் கூறப்படுகிறது.

### பறம்புமலை

வேள்பாரி, பாண்டி நாட்டுப் பறம்பு மலை சூழ்ந்த நாடுடையவன். இப்பறம்பு நாடு முந்நூறு ஊர்களைக் கொண்டது. பறம்புமலை இப்போது **'பிரான்மலை'** என்று வழங்கப்பெறுகிறது. இது புதுக்கோட்டையைச் சார்ந்துள்ளது. பாரியின் மலைவளமும் சுனைநீர் நலமும் புலவர்பாடும் புகழ்படைத்தவை.

அங்குள்ள நீர்ச்சுனைகள் வானத்தில் தோன்றும் மீன்களைப் போன்றவையாகும் என்று பறம்பின் பெருமை பேசப்படுகிறது.[275]

**''பறம்பிற் கோமான் பாரி''**[276]
**''பருமணி யானைப் பறம்பிற் கோமான்''**[277]
**''பாரி பறம்பின் பனிச்சுனை போல''**[278]
**''தேர்வண் பாரி தண்பறம்பு நாடே''**[279]

என்றெல்லாம் பாரியின் பறம்பு மலையைப் புலவர் பெருமக்கள் பெரிதும் சிறப்பித்துப் பாடியுள்ளனர். மூவேந்தர் ஒன்றுகூடிப் பொருதாலும் பாரியின்

பறம்பினை வெல்ல முடியாது என்று அதன் காவல் தன்மையைக் கபிலர் பாடுகிறார்.[280]

**பொதியமலை**

பொதியமலை பாண்டிய வேந்தருக்குரியது. ''மேற்கு மலைத் தொடரின் சிகரங்களில் ஒன்றான பொதியில் அதன் தெற்குப் பகுதிக்கு ஓர் உயர் அரண் போல நிமிர்ந்து நிற்கிறது. இம்மலையிலும் மலைசூழ்ந்த பகுதிகளிலும் வளரும் சந்தனம் காளிதாசர் உள்ளிட்ட கவிஞர்களாலும் பல்லாற்றானும் பாக்களில் எடுத்தாளப்பட்டுள்ளன. இம்மலை சில காலம் ஆய் மரபினோரின் ஆட்சிக்கு உட்பட்டிருந்ததாகத் தெரிகிறது. பொதியில் தோன்றிய சந்தனம், வேங்கை, காந்தள் போன்றவை பாட்டுடைத் தலைவியின் இனிமையைக் காட்ட ஒப்புமைப்படுத்திச் சொல்லப்படுகின்றன என்பார் தனிநாயகம்.[281] சேரமான் பெருஞ்சேரல் இரும்பொறையை வாழ்த்தும் முரஞ்சியூர் முடிநாகனார் **'பொற்கோட்டிமயமும் பொதியமும் போன்று'** வாழ்க என வாழ்த்துகிறார்.[282] பொதியமலை ஆய் என்பவனால் காவல் செய்யப்பட்டு வந்தது என்பதைக்,

**"கழறொடி யாஅய் மழைதவழ் பொதியில்"**[283]

என்ற அடியால் அறியலாம்.

இம்மலை சேரநாட்டிற்கும் பாண்டிய நாட்டிற்கும் எல்லையாக அமைந்து விளங்குவது. அதன் ஒருபுறம் பாண்டியருக்கும் மற்றொருபுறம் சேரருக்கும் உரியதாயினும் அதனுரிமை பாண்டியர்க்கு வழங்கப்பட்டதனால் சேரர்க்குக் கூறப்பெறுதல் இல்லை.[284]

**முதிரமலை**

முதிரமலை பழனிமலைத் தொடர்களுள் ஒன்றாகும். இதன் அடிவாரத்தில் குமண மங்கலம் என்ற ஒரு சிற்றூர் உண்டு. இம்முதிர மலை

நாடு உடுமலைப்பேட்டையைத் தன்னகத்தே கொண்டிருந்ததாகும். வள்ளல் பேகனின் ஆவியர் குடிக்கு உரியதாய் இருந்தநாடு பிற்காலத்தே குமணனுக்கு உரிமையாயிற்று என்பார் ஔவை சு. துரைசாமிப்பிள்ளை.[285]

குமண வள்ளலின் மலை முதிர மலை. அதில் மூங்கில் வானளாவ வளர்ந்திருக்கும். சுரபுன்னை, ஆசினி என்ற மரங்களும் அங்கு நிரம்பி வளர்ந்திருக்கும். பலாப்பழத்தைப் பறித்த ஆண்குரங்கு, அதனை உண்பதற்காக அளிக்கத் தன் பெண் குரங்கைக் கைக்குறி செய்து அழைக்கும். அம்மலை கடவுள் (முருகன்) காக்கும் சிறப்புடையது என்று பெருஞ்சித்திரனார் குறிப்பிடுவார்.[286] வள்ளல் குமணனின் முதிரமலையில் கனிகள் மிக்கிருந்தன.[287] அங்கு மதுவின் பெருக்கம் அதிகமாக இருந்தது.[288] குமணனது வள்ளன்மைக்குப் பயன்படுகிற வகையில் பல்பொருளும் எளிதில் தருகின்ற மலையாக முதிரமலை விளங்கியது எனலாம்.

### வேங்கடமலை

வேங்கட மலை தமிழகத்தின் இனமொழி அடிப்படையில் அமைந்த வடஎல்லையாகும். 'வடவேங்கடம்'[289] என்று தொல்காப்பியச் சிறப்புப்பாயிரம் வரையறுத்துச் சொல்கிறது. வேங்கடத்தைப் 'புல்லி' என்பவன் ஆண்டு வந்தான். இவன் தமிழ் இனத்தைச் சேர்ந்தவன்; கள்ளர் மரபினன்.[290] புல்லி என்பவன் ஆண்டு வந்தாலும் அப்பகுதி சோழர் ஆட்சிக்கு உட்பட்டிருந்தது என்பதை **'வெண்வேல் திரையன் வேங்கட நெடுவரை'**[291] என்ற அகப்பாடல் அடியால் அறியலாம்.

### வேங்கடத்தின் வளம்

அம்பர் கிழான் அருவந்தை என்பானைக் கல்லாடனார் வாழ்த்திப் பாடுகின்றபோது, புல்லி என்பவனுடைய வேங்கட மலையில் பொழிந்த

மழைத்துளியினும் பல ஆண்டுகள் வாழ்க[292] என வாழ்த்திய வாழ்த்தின்வழி மலையின் மீது பெய்கின்ற மழை பெருமழையாக இருந்தது என்றும், அம்மழை, நாட்டின் வளத்திற்குப் பெரிதும் பயன்பட்டது என்றும் அறியமுடிகிறது.

வேங்கட மலையிலிருந்து அருவி வழிந்தோடிய சிறப்பினைக் **“கல்லிழி யருவி வேங்கடம்”**[293] என்பதனால் அறியலாம்.

**பிற மலைகள்**

மேற்கூறப்பட்ட மலைகளேயன்றி, வேறு பல மலைகளும் சங்க இலக்கியத்தில் ஆங்காங்கே குறிக்கப்படுகின்றன. ஏரகம்[294] விச்சிமலை[295] மேருமலை[296] முதலிய மலைகள் சங்கப் பாடல்களில் காணப்பெறுகின்றன. மேலும் பல குன்றுகளும் மலைகளும் பெயரினால் சுட்டப்பெறாமல் நெடுங்குன்றம்,[297] பெருமலை[298] என வழங்கப்பெறுகின்றன.

இன்று சிறப்புற்றிருக்கும் கொடைக்கானல் மலை சங்க காலத்திலேயே பெருமை பெற்று விளங்கிற்று. அது **‘கோடைமலை’** என்று வழங்கியது என்பதனை **வெள்ளி வேலிக் கோடைப் பொருந,**[299] என்பார் பெருந்தலைச்சாத்தனார். இம் மலையைக் கடிய நெடுவேட்டுவன் ஆண்டான். இவனுக்கு முன் பண்ணி என்பானுக்கு உரியதாக இருந்தது என்பார் ஔவை சு. துரைசாமிப்பிள்ளை.[300]

## ஆறுகள்

உயிர் இயக்கத்திற்கு அடிப்படையாய் அமைவது உடலின்கண் பல்வேறு பகுதிகளிலும் பாய்ந்தோடும் இரத்த ஓட்டமேயாகும். அதுபோல் நிலவுலகின் வளம் காத்து, நலம் பேணும் பணி ஆறுகளின் ஓட்டத்தால் அமைகிறது. “வானளாவி வளர்ந்தோங்கி நிமிர்ந்து நிற்கும் நெடிய

மலைகளை நிலமகளின் மார்பகங்கள் எனவும் அம்மார்பகத்தில் நல்லணியாய் முத்தாரமாய் அமைந்து எழிலும் பொலிவும் ஊட்டுவன ஆறுகள்'' என்றும் சிறுபாணாற்றுப்படை கூறுகிறது.[301]

ஆறு, மலையில் தோன்றிக் காட்டில் விரைந்து வயலில் பாய்ந்து வளம் கொழிக்கச் செய்து, கடலில் கலக்கிறது. அந்த ஆற்றின் தன்மையினையும் பயனையும் சங்கப்புலவர் தம் கவிதைகளில் காட்டியுள்ளார்.

மருதநிலத்தின்கண் ஆற்றுவெள்ளம் கிழக்குக் கடலைநோக்கிச் செல்லும். அது குளங்கள் கொள்ளுமாறு நிறைக்கும். யானைகளையும் மறைக்கும்படி உயர்ந்து வளைந்த கதிர்களையுடைய கழனிகளிடத்தும், விளங்கும் மடுக்களிடத்தும் இலைக்குமேல் ஓங்கி நிற்கும் தாமரைப் பூவினையும், தேன் மணக்கும் நெய்தல் பூவினையும், பெரிய இதழுடைய நீலப் பூவினையும் வண்டுகள் தங்கும் மணமிக்க பிற பூக்களையும் உடைய பொய்கைகளிடத்தும் தன் தண்ணீரை நிறைத்துத் தவழ்ந்து செல்வதை மதுரைக்காஞ்சி கூறுகிறது.[302]

**அயிரி ஆறு**

அயிரை மலையில் அயிரைப் பேராறு தோன்றுகிறது. இது சேரருக்குரியது. இதற்கு வேறு பெயர் பொன்னானி.[303] இது மலையாள நாட்டில் பாலக்காட்டுக் கணவாய் வழியாக அரபிக் கடலில் கலக்கிறது.[304]

**கங்கை**

வேதங்கள் உறைகின்ற இடமான இமய மலையே கங்கைப் பேர்யாறு தோன்றும் இடமாகும். அக்கங்கை ஆறு பொன்னைக் கொழித்துக்கொண்டு குதித்தோடி வருகிறது. அதில் மிகுந்த வெள்ளம் வருவதால் அந்த ஆற்றை மக்கள் கடப்பது கடினம். அதனைத் தோணி மூலம் கடந்தனர் எனப் பெரும்பாணாற்றுப்படை பகர்கிறது.[305]

## கங்கை கடலில் கலத்தல்

மதுரையின் சிறப்பும் வளமும் புனைந்த மாங்குடி மருதனார் கங்கைப்பேரியாற்றை ஒப்புமைப் படுத்திக் கூறியுள்ளார். அதில் கங்கையாகிய அழகிய பேரியாறு ஆயிரமுகமாகக் கடலிலே சென்றாற் போல் அவ்வாற்றில் பல பண்டங்களும் நிரம்பி, தேவருலகம் போல மதுரை விளங்கியது''[306] என்பதனால் கங்கை பல்வேறு கிளைகளாகப் பிரிந்து கடலில் கலக்கும் பான்மையினை அறியலாம்.

## கங்கைவளம்

கங்கைப் பேரியாறு எக்காலத்தும் வற்றாது நிறைந்து வழியும் தன்மை உடையது. மழைக்காலத்தில் மழை நீராலும் கோடைக்காலத்தில் மலையுச்சியிலுள்ள பனி உருகி உண்டாகும் நீராலும் கங்கையில் பெருவெள்ளம் ஓடிக்கொண்டேயிருக்கும்.[307]

வடநாட்டு ஆரியரோடு இனிய தொடர்பின்மையான், பண்டைக்காலத் தமிழகம், கங்கைபாயும் வங்க நாட்டோடு கடல் வழியாகத் தொடர்பு கொண்டிருந்தது என்பார் ஔவை சு. துரைசாமிப்பிள்ளை.[308]

## காவிரி

தென்னிந்தியாவில் ஓடும் ஆறுகளில் காவிரி தலைசிறந்ததாகும். குடகு நாட்டில் மேற்குத் தொடர்ச்சி மலையில் உற்பத்தியாகி மைசூர், சேலம், கோயம்புத்தூர், திருச்சி, தஞ்சாவூர் மாவட்டங்களின் வழியாக ஏறக்குறைய 480கல் தொலைவு ஓடி, வங்காள விரிகுடாவில் கலக்கிறது.

## காவிரியின் தோற்றம்

காவிரியாறு குடநாட்டில் உற்பத்தியாகின்ற செய்தியினைக் **'குடமலைப் பிறந்த தண்பெருங் காவிரி''**[309] என்ற மலைபடுகடாம் அடி தெரிவிக்கிறது.

“காவிரி ஆறு குடநாட்டில் தோன்றி மைசூர் நாடு, கொங்கு நாடு, சோழநாடு ஆகிய நாடுகளில் பாய்ந்து வளம் பெருக்குகிறது. காவிரியாறு சோழநாட்டில் பல கிளையாறுகளை உண்டாக்கிக் கொண்டு அந்நாட்டினை வளம்மிக்க நாடாகச் செய்துள்ளது. எங்கு நோக்கினும் ஆறுகள், வாய்க்கால்கள், நீர்நிலைகள் என்று கூறுமளவில் சோழநாடு இருத்தல் காவிரியாற்றுப் பாய்ச்சலினால்தான் என்பார் மா. இராசமாணிக்கனார்.[310]

## காவிரியும் சோழநாடும்

காவிரி பல நாடுகளின் வழியாகப் பாய்ந்து வந்தாலும் சோழநாடே இதனால் முழுநன்மையைப் பெறுவதால் ‘காவிரி சோழ நாட்டுக்கே தனி உரிமை உடைது’ என்று காவிரியாற்றினைப் போற்றினர்.[311] “இக்காவிரி குடமலையில் பிறந்து சேரநாட்டு எல்லைப்பகுதியுள் பாய்ந்து வருதல் பற்றிச் சேரற்கு உரியதாயினும் அதன் மறுபாகத்தையுடைய சோழர்க்கே அஃது உரிமையாக வழங்கப்பட்டது”[312] என்ற கருத்தும் நினைவுகூரத்தக்கதாகும்.

“கோடை வெப்பத்தின் காரணமாகக் கஞ்சங்குல்லை தீய்ந்து போகவும், மரங்களின் கொம்புகள் தீயுண்ணவும் மலைகளில் அருவிகள் இல்லையாகவும், முகில்கள் கடல்நீரை முகக்க மறப்பினும் மழை வளமில்லாது பெரிய பஞ்சமே ஏற்படினும், காவிரிதன் வளம் சுரத்தலில் தவறாது, காவிரியின் வளத்தால் சோழநாட்டில் வயல்வளம் சிறந்துள்ளது; உழவர்கள் செம்மையாகத் தங்கள் கடமைகளை முடித்து நெல்லினை மலையெனக் குவிக்கிறார்கள்; அவர்தம் இல்லங்களில் நெற்குதிர்கள் நெல் நிரம்பி உள்ளன. இவ்வாறு சோழ நாட்டில் காவிரியின் அருளால் ஒரு வேலி நிலம் ஆயிரம் கலமாக விளைகிறது”[313] என்று காவிரியின் கொடையால் சோழநாடு பெற்ற வளத்தைப் பாராட்டுவார் முடத்தாமக் கண்ணியார்.

**காவிரி புரத்தல்**

சோழநாட்டில் அழகிய குளிர்ந்த காவிரி பல காலாயோடி[314] ஈன்றணிமை பொருந்தி அது தீர்ந்த குழவிக்குச் சுரக்கும் முலைபோல மிக்க நீர்நிறைந்த கரையினையுடையதாய்ப் பெருவெள்ளங்கொண்டு நாட்டினை வளமுறச் செய்கிறது.[315] காவிரியால் குளிர்நீர் ஓடிப் பாய்ந்து நிலத்தை வளமுறச் செய்து மலர்களை மலரச் செய்து அது பூக்களைச் சுமந்து மக்கள் வாழ்வை உயர்வடையச் செய்தது.[316]

**வாழ்த்தல்**

காவிரியின் மணலை வைத்து நீண்ட காலம் வாழ்க எனச் சோழன் மாவளத்தானைத் தாமற் பல்கண்ணனார் வாழ்த்துகிறார்.[317]

**காவிரியில் கல்லணை**

இயற்கையில் சென்ற காவிரியின் பெருவெள்ளத்தைத் தடுத்து நிறுத்தி நிலத்தை வளமுறச் செய்தான் கரிகாலன். அவன் காவிரியில் கல்லணை கட்டினான் என்பதற்கு **"நுரைத்தலைக் குறைப்புனல் வரைப்பகம் புகுதொறும் புனலாடு மகளிர் கதுமெனக் குடைய"**[318] என்ற பொருநாராற்றுப்படை அடிகளையே சான்றாகக் காட்டுவர். ஈண்டு 'வரைப்பகம்' என்பதற்கு அணை என்று பொருள் கொள்வர். மேலும் 'காவிரிக்குக் கரை இடுவித்தான் கரிகாலன்' என்று தெலுங்குச் சோழர் பட்டயம் ஒன்று கூறுகிறது. முதலாம் இரோசேந்திர சோழனின் ஆறாம் ஆட்சியாண்டில் (கி.பி.1027) வெளியான திருவாலங்காட்டுச் செப்பேடுகளும் இச்செயலைக் குறித்துள்ளன. காவிரிக்கு அணை இட்டதால் 'காவிரி புரக்கும் நாடு' என்று பாராட்டப்பெற்றது. ஒழுங்கான அணையில்லாவிட்டால் 'காவிரி அழிக்கும் நாடு' என்று கூறப்பட்டிருக்கும்."[319]

**காவிரியே பொன்னி**

காவிரி, தான் பாயும் பகுதிகளைப் பொன் விளையும் பூமியென வளங்கொழிக்கச் செய்வதால், அதனைப் **'பொன்னி'** என்றும் போற்றுவர்.[320]

**குமரி ஆறு**

குமரியாறும் குமரிமலையும் அமைந்திருந்த பெருநிலம் குமரிநாடு என்றழைக்கப்பெற்றது. குமரியாறும் குமரிமலையும் பனிமலையினும் கங்கையாற்றினும் மிகமிகத் தொன்மை வாய்ந்தனவாம்.[321]

வடவெல்லை இமயமும் தென்னெல்லை குமரியும்[322] என்று குறிக்கப் பெறுவதாலும், குமரிக்கோடு[323] என்று வருவதாலும் குமரி மலையையே குறித்தார் என்பார்க்குக்,

**"குமரியம் பெருந்துறை அயிரை மாந்தி**
**வடமலைப் பெயர்குவை யாயின்"**[324]

என்ற புறப்பாடலால் குமரி மலை மட்டுமன்று, குமரியாறும் இருந்தது என்றும் அக்குமரித் துறையில் அன்னப் பறவைகள் அயிரை மீன்களை உண்டு களித்தன என்றும் அறிகிறோம்.

**சேயாறு**

சேயாறு வட ஆர்க்காடு மாவட்டத்துச் சவ்வாது மலையில் பிறந்து செங்கை மாவட்டத்திலுள்ள திருமுக்கூடலில் பாலாற்றுடன் கலந்துவிடுகிறது. சேயாறு மலைபடுகடாம் என்ற சங்க இலக்கித்தில் பெரிதும் பாராட்டப்படுகிறது என்பார் சோமலெ.[325]

இச்சேயாற்றினைப் பற்றி மலைபடுகடாம் தெளிவாகக் குறிப்பிட்டுள்ளது. "குயவன் வனைகின்ற உருளை போன்று குமிழி தோன்றும், விரைந்த செலவினையுடைய வாய்த்தலையில் ஓடும். காண்போர்

பெரிதும் விரும்புகின்ற காட்சியின் மிக்க சேயாற்றினது புதிய வருவாயையுடைய ஒரு கரையை வழியாகக் கொண்டு செல்வீர்''[326] என்று கூத்தரை ஆற்றுப்படுத்தும்முகத்தான் சேயாற்றின் வழியைச் சுட்டிக் காட்டுகிறார். ஆகவே கூத்தர் நவிர மலை நன்னனைக் காணச் சேயாற்றின் கரையில் நடந்து வரவேண்டும் என்று அறிவுறுத்துகிறார்.

**பஃறுளி ஆறு**

பஃறுளியாறு என்பது குமரியாற்றுக்குத் தென்புறத்தில் பன்மலையடுக்கத்தில் ஓடியது. முதன்முதல் கடல்கோளுக்கு உட்பட்டது பஃறுளி ஆறுதான்.[327] குமரி நாட்டின் வடக்கே குமரியாறும் தெற்கே பஃறுளி ஆறும் ஓடிக் கொண்டிருந்தன.[328]

பஃறுளி யாற்றினைப் பற்றிக் குறிப்பிடும் அப்பாதுரையார் பஃறுளியாற்றின் கரையில் பாண்டியர்தம் முதல் தலைநகரமான தென்மதுரை இருந்தது என்று குறிப்பிடுகிறார்.[329] இவர்களின் கூற்றுக்குச் சங்க இலக்கியத்துள் சான்றாக நிற்பது,

**"முந்நீர் விழவி னெடியோன்**
**நன்னீர்ப் பஃறுளி மணலினும் பலவே''[330]**

என்ற நெட்டிமையார் பாடலாகும்.

**பெண்ணை ஆறு**

பெண்ணையாறு, வடபெண்ணை, தென்பெண்ணை என இரண்டாக உள்ளது. வடபெண்ணை மைசூரில் கோலார் மாவட்டத்தில் 'நந்தி துர்க்கம்' என்ற இடத்தில் தோன்றி, நெல்லூர் வங்காள விரிகுடாவில் கலக்கிறது. இந்நதிக்கு 'உத்திரபினாகினி' என்ற பெயரும் உண்டு.[331]

தென்பெண்ணை மைசூரில் கோலார் மாவட்டத்தில் பிறந்து கடலூருக்கு அருகே தேவகோட்டையில் வங்கக் கடலில் கலக்கிறது. இது 'தட்சிணபினாகினி' என்றழைக்கப்படுகிறது.[332] பிறக்குமிடம் ஒன்றாக இருப்பினும் கலக்குமிடம் வேறாக இருப்பதால் இவை இப்பெயர் பெற்றன எனலாம். தென்பெண்ணைக்குப் 'பொன்னையார்' என்ற பெயரும் உண்டு.

பொருந்தாத பகைவரைத் தடுக்கும் தன்மையது பெண்ணை யாறாகும்.[333] என்று மலையமான் திருமுடிக்காரியின் பெண்ணையாறு குறிக்கப்பெறுகிறது. மலையமானின் ஆறு தென்பெண்ணையே என்பர்.

**பேரியாறு**

பேரியாறு சேரநாட்டின் சிறந்த ஆறாகும். மேற்குத் தொடர் மலையில் தோன்றி அரபிக் கடலில் கலக்கும் குறிப்பிடத்தக்க ஆறுகளுள் பேரியாறும் ஒன்றாகும். "இப் பேரியாற்றின் நீளம் 140 கல் தொலைவு."[334] இந்த ஆறு இன்று 'பெரியாறு' என்று வழங்கப்பெறுகிறது.

மழை பெய்யாது பொய்த்தலால் காட்டிடத்தே மிக்க மூங்கில்கள் வாடி யுலரவும், குன்றங்கள் பசும்புல்லும் இன்றிக் கெடவும், ஞாயிற்றினது வெயில் வெப்பம் மிக்குத் தோன்றவும், அருவிகள் நீரற்று ஒழிந்த பெரிய வற்கடக் காலத்தும், கடத்தற்கரிய செலவினையுடைய பேரியாற்றிலே நீர்ப் பெருக்கானது பெரிய கரை உடைத்துக்கொண்டு செல்லும்[335] என்ற செய்தியினைப் பதிற்றுப்பத்துக் குறிப்பிடுகிறது.

**பொருநை ஆறு**

இது திருநெல்வேலியின் முக்கியமான ஆறு. பொருநையின் மற்றொரு பெயர் 'தாமிரபரணி' என்றும் அது பாண்டிய நாட்டில் ஓடிய ஓர் ஆறு என்றும் பல்வேறு அறிஞர்கள் ஏற்கின்றனர்.

கோ.வே. பெருமாள் தமது கட்டுரையில் “பொதியமலையில் இரண்டு ஆறுகள் தோன்றுகின்றன. ஒன்று பொதிகையின் மேற்கே சிறிய ஆறாகப் பாய்கிறது. மற்றொன்று கிழக்கே பேராறாய்த் திகழ்கின்றது. முன்னது கேரளத்தில் ஓடி அரபிக்கடலில் கலக்கிறது. பின்னது திருநெல்வேலி வழியே மன்னார்குடாவில் கலக்கிறது. மேலையாறு ஆன்பொருநை, கீழையாறு தண்பொருநை, இது தாமிரபரணி என அழைக்கப்படுகிறது என்பார்.[336]

பொருநை ஆற்றங்கரையில் வஞ்சி மாநகர் காட்டப்பட்டுள்ளது.[337] வேறொரு பாடலிலும் பொருநை ஆற்றங்கரையில் வஞ்சியே காட்டப்பெறுகிறது.[338] சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவனின் கருவூர் முற்றுகையைப் பற்றிப் பாடும்போது, ஆலந்தூர் கிழார், ‘சோழருடைய படை வீரர்கள் சேரனின் காவல்மரங்களைக் குளிர்ந்த ஆன்பொருநையின் வெண்மணல் சிதறுமாறு கோடரி கொண்டு வெட்டினார்கள்’ என்று குறிப்பிடுகிறார்.[339] ஈண்டும் சேரர் தலைநகரே பொருநையாற்றங்கரையில் அமைந்திருந்ததை அறியலாம்.

மயிலை சீனி வேங்கடசாமி, ‘சேரரின் தலைநகரம் வஞ்சி எனக்கொண்டு, அவ்வஞ்சி பொருநை ஆற்றங்கரையில் அமைந்திருந்தது எனவும், அது தற்போது திருச்சி மாவட்டத்திலுள்ள சேரர்க்குரிய கரூர் அன்று என்றும் கூறிச் சேரர் கரூர், மேற்குக் கடற்கரையில் பொருநையாற்றங்கரையில் உள்ளதே என முடிவு கூறுகிறார்.”[340] இக்கருத்து சங்க இலக்கியத்துடன் ஒத்துக் காணப்படுகிறது.

**வையை ஆறு**

பாண்டிய நாட்டுக்குப் பயன்தருவது வையை ஆறாகும். காவிரிக்கு அடுத்துப் புலவர் பெருமக்களால் பெரிதும் போற்றப்படும் யாறு வையை, வையை பாய்ந்தோடும் தொலைவு 165 கல் அளவேயாகும்.[341] இந்த ஆறு ‘வைகை’ என்றும் வழங்கப்பெறுகிறது.

இவ்வையை, பெரிய குளம் வட்டத்தில் ஆண்டிப்பட்டி மலையில் தோன்றி, மதுரை மாவட்டம் வழியாக இராமநாதபுரம் மாவட்டத்திற்குள் சிவகங்கை, பரமக்குடி, இராமநாதபுரம் வட்டங்களில் பாய்ந்து, உச்சிப்புளி அருகே உள்ள ஆற்றங்கரை என்னும் ஊர் ஓரமாகக் கடலில் கலக்கிறது.[342]

முகில் உலாவும் மலை போன்றுயர்ந்த மாளிகைகளின் வாயில்கள் எப்போதும் மக்களும் மாவும் உலாவிக் கொண்டே இருக்கின்ற இடமாயின. ஆதலின், "வையை யன்ன வழக்குடை வாயில்"[343] என விளங்கிற்று என்பார் மாங்குடிமருதனார்.

**"வையை யென்ற பொய்யாக் குலக்கொடி"[344]**

என்று வையையை இளங்கோவடிகள் வாழ்த்துவார்.) வையையாற்றின் துறைதோறும் துறைதோறும் பூந்தாதுக்களும் பூந்தோட்டங்களும் சூழ்ந்திருத்தலையும், அப்பூந்தோட்டங்களின் சூழலில் பெரும்பாணர் குடியிருப்பு அமைந்திருத்தலையும் மாங்குடி மருதனார் குறிப்பிடுவதன் வாயிலாக[345] மக்கள் வாழ்வதற்கான இனிய சூழலுடன் வையையாறு விளங்கிற்று என அறியலாம்.

**வையைக் கரையில் மதுரை மட்டுமன்று...**

வையையாறு மிக்க புகழையுடைய பல ஊர்களைச் சூழ்ந்திருந்து, அவற்றினை வளம் கொழிக்கச் செய்தது. அவ்வூர்களை மாவன் முதலியோர் தலைமை தாங்கிக் காத்து வந்தனர் என்ற செய்தியினை ஒல்லையூர் தந்த பூதப்பாண்டியன் தெரிவிக்கிறான்.[346] இக்கூற்றால் வையைக் கரையில் மதுரை மட்டுமன்று இன்னும் பல வளமான ஊர்களும் விளங்கின என்ற உண்மையை அறிகிறோம்.

**வையைக்குப் பாராட்டு**

உலகைப் பாதுகாத்ததற்குப் பல பொருள்களையும் விளைத்து நுகர்வித்தலான் மிக்க பெரிய ஒழுக்கதினையும் உடையவள்; புலவர் நாவில் புகழ் பொருந்தியவள், சேர்ந்தார்க்கு வரைவின்றி இன்பமளித்தலின் திருமகளை யொப்பாள்; வையையென்று பெயர் கூறப்படுவாள், பருவம் பொய்யாமையானும் வேற்று வேந்து அணுகாமையானும் தென்னவர் குலக் கொடியாயுள்ளாள்' என்று அரும்பதவுரைகாரர் பாராட்டி மகிழ்வார்.[347]

**ஆறுகளின் பயன்**

தமிழகத்தின் பல்வேறு பகுதிகளிலும் பேராறுகளும் சிற்றாறுகளும் பாய்ந்து வளம் பெருக்கின. வளமான நிலப்பகுதிகளில் வாழும் மக்கள் உணவுப் பஞ்சத்தைக் காண நேர்வதில்லை. வளமான உணவினால் மனிதனின் அறிவு கூர்மைபெறும் என்பர். வளத்தின் விளைவாகச் செல்வம் கிட்டுவதால் ஓய்வு கிடைக்கிறது. ஓய்வு மிகுதியின் காரணமாக மனிதன் நிறையச் சிந்திக்கிறான். புதுப்புது வாழ்வியல் முறைகளையும் வழிவகைகளையும் நாடுகிறான். கல்வியிலும் கலையிலும் தேர்ச்சி பெறுகிறான். எங்கும் எதிலும் புதுமை காண முயல்கிறான். வளமான மனை அமைத்து இன்ப வாழ்வு நடத்த முற்படுகிறான். ஆகவே ஆற்றங்கரை யோரங்கள் மனித நாகரிகத்தைத் தோற்றுவித்ததோடு அமையாமல் பொலிவும் வலிவும் பெற்றுத் திகழ வழிகோலின எனலாம்.

## தொகுப்புரை

உலகம் நிலம், நீர், தீ, வளி, விசும்பு ஆகிய ஐந்தும் ஒன்றோடு ஒன்று கலந்து இணைந்ததாகும். ஞாயிற்றிலிருந்து விழுந்த துண்டமே புவிக்கோளாக மாறியது என்பதை அறிய முடிகிறது.

மனித வாழ்வு முதலில் தோற்றம் பெற்றது மலையிலேதான் என்பதைத் தெளியமுடிகிறது.

தமிழ்நாட்டில் கடல்கோள் ஏற்பட்டது. அதன் விளைவாகப் பஃறுளி ஆறு, குமரி மலை, குமரி ஆறு ஆகியன அழிவுற்றன என்பதை அறிய முடிகிறது.

தமிழ்நாட்டின் வட எல்லையாக இமயமும் வேங்கடமும் விளங்கின. இமயம் ஆட்சி எல்லையாகவும் வேங்கடம் மொழி, பண்பாட்டு எல்லையாகவும் சிறப்புற்றிருந்ததைத் தெளிய முடிகிறது.

பெரும்பான்மையும் திணை என்ற சொல் நிலத்தைக் குறிக்கிறது என்ற கருத்துக் கருதத்தக்கதாகும்.

**ஆற்றுப்படை இடவருணனையில் அறியலாகும் செய்திகள்**

வழியை வகுத்துக் கூறும்போது வளம் பெற்ற பாணன் முதலியோர் வழிநெடுகிலும் உள்ள இயற்கைக் காட்சிகளைக் கூறுதல் இயல்பு என்பதை அறியமுடிகிறது.

கலைஞரின் வறுமை நிலை அறிந்து, அவர்தம் இன்னல் மறக்கும் பொருட்டுச் செழுமையான இட வருணனையைக் கூறி ஆற்றுப்படுத்துதல் நடைபெறுகிறது.

வழி நெடுகிலும் உள்ள மக்களைப் பற்றியும் அவரின் சமுதாய வாழ்க்கை பற்றியும் அறியமுடிகிறது.

இயற்கையில் ஒன்றிப்புச் சங்கப் புலவர்கட்கு இயல்பான ஒன்று என்பதை இட வருணனை வெளிப்படுத்துகிறது.

பாலை நில மக்களும் கலைஞர்களுக்கு விருந்தளித்துப் போற்றினர்.

ஐவகை நில மக்கள் விருந்தோம்புவதோடு மட்டுமல்லாமல் அந்நிலத்தில் உள்ள ஓரறிவு உயிராகிய தாவரங்களும் கலைஞர்களை ஓம்பின.

கொடிய தன்மை கொண்ட கானவரும் எயினரும் வள்ளலின் பெயரைக் கூறினால் கலைஞர்களைத் துன்புறுத்தாமல் விடுத்தனர்.

பூக்களில் தெய்வங்கள் உறைவதாக நம்பினர். எனவே அத்தகைய தெய்வம் உறையும் தாமரை மலரைப் பறித்துச் சூடாமல் சென்றனர்.

திணை மயக்கத்தின்வழி ஒரு நிலத்தில் இருந்த மக்கள் மற்ற நில மக்களுடன் நெருங்கிப் பழகும் சமூக ஒற்றுமை வெளிப்படுகிறது.

திணை மயக்கத்தின்வழி அஃறிணை உயிர்களும் அன்போடு ஒன்றுபட்டு வாழ்ந்தன என்பதை அறிய முடிகிறது.

ஐவகை நிலத்திலும் கலைஞர்களுக்கு ஊன் உணவும் கள்ளும் அளிக்கப்பெற்றன.

வள்ளல்கள் மேற்கூறிய உணவுப் பொருட்களுடன் ஆடைகளையும் பரிசுப் பொருள்களையும் அளித்தனர்.

ஆற்றுப்படை இலக்கியத்துள் எந்தப் பரிசுப்பொருள்களும் அணிகலன்களும் நிலவாழ் மக்களால் வழங்கப்படவில்லை.

வள்ளலைப் பெருமைப்படுத்தும் நோக்கில் நிலமக்கள் வழங்கிய உணவுப் பொருள்களுடன் வள்ளல்கள் புத்தாடைகளையும் பரிசுப் பொருள்களையும் அளித்தனர் என்பதை அறியமுடிகிறது.

முல்லை நிலத்தில் ஆநிரை சிறப்புடையதாகக் கருதப்படுதலும், மருதநிலத்தில் எருதுகள் சிறப்புடையதாகப் போற்றப்படுவதும் தொழில் அடிப்படை நிலைமையால் என்பது புலப்படுகின்றன.

தாமரை மலரை மனிதர் அணிவதில்லை. மாறாகப் பொன்னாலாகிய தாமரை மலரைப் பாணன் அணிந்துள்ளான் என்பதை அறிய முடிகிறது.

**மலைகளால் அறியலாகும் செய்திகள்**

மலைகள் வரிசைப்படி அமைக்கப்பெற்று அவற்றின் சிறப்பியல்புகளை அறிய முடிகின்றன. அயிரை மலையில் கொற்றவைக்குக் கோயில் இருந்தது என்பதையும் கொல்லி மலையில் கண்டவரைக் கொல்லும் கொல்லிப் பாவை இருந்தது என்பதையும் அறிய முடிகின்றன.

மலைகள் நாட்டின் எல்லைகளாகவும் அமைந்து சிறந்தன. அவற்றின் அடர்ந்த காடுகள் வளம் தந்து அரணாகவும் விளங்கின. உயரிய வேங்கடமலையும் அதன் காடுகளும் பழந்தமிழகத்திற்குப் பெரும்பாதுகாப்பாக அமைந்திருந்தன. அதனால்தான் வேங்கடத்தைக் கடந்து வேறெந்த மன்னனும் தெற்கு நோக்கிப் படையெடுத்து வர இயலவில்லை.

பொதியமலை சேரநாட்டையும் பாண்டிய நாட்டையும் பகுத்து எல்லை மலையாக நின்றிருந்தது. வளமிக்க குன்றுகள் குறுநில மன்னர்களுக்கும் வள்ளல் பெருமக்களுக்கும் ஆட்சியிடங்களாக அமைந்து சிறப்புப்பெற்றன.

பறம்பு மலையில் முந்நூறு ஊர்கள் இருந்தன போல ஒவ்வொரு குன்றும் வாழ்தற்குரிய பற்பல சிற்றூர்களைப் பெற்று வளத்தோடு திகழ்ந்தது.

இத்தகைய சிறப்பு மிக்க மலைகளைச் சங்கச் சான்றோர்கள் பெரிதும் விரிவாகப் பாடியுள்ளனர். அவை அவர்தம் இயற்கை வாழ்வையும் சிந்தனை ஆற்றலையும் நன்கு உணர்த்துவனவாகும்.

**ஆறுகள் பற்றி அறியலாகும் செய்திகள்**

பழந்தமிழகத்தின் தெற்கில் குமரி ஆறும் ஓடியது என்பதை அறிய முடிகிறது. சேர நாட்டில் பேரியாறும், சோழ நாட்டில் காவிரியாறும் பாண்டிய நாட்டில் வையையாறும் ஓடி வளம் சேர்த்தன என்பதைத் தெளியமுடிகிறது.

கங்கை ஆறு வற்றாது நிறைந்து வழியும் தன்மையது என்பதை அறிய முடிகிறது.

கடல்கோளால் அழிவுற்ற பஃறுளி ஆற்றின் கரையில் பாண்டியர் தம் முதல் தலைநகராமான தென்மதுரை இருந்தது என்பது புலப்படுகிறது.

தமிழகத்தின் பல்வேறு பகுதிகளிலும், பேராறுகளும் சிற்றாறுகளும் பாய்ந்து வளம் பெருக்கியுள்ளன.

ஆறுகளின் எண்ணிக்கையை விட மலைகளின் எண்ணிக்கை அதிகமுள்ள நிலை வெளிப்படுகிறது.

குறிப்புகள்

# இட வருணனை

1. தொல்.மரபியல். 90.
2. மதுரை. 453 - 454.
3. புறம். 2.
4. The Evolvation of Earth and its inhabitants, P.6.
5. J.C.Ponds, The Earth and You, P.38.
6. J.C.Ponds, The Earth and You, P.38.
7. Dr. C. Lane. Ferdinad, The Story of Mountains, P.148.
8. The Evolvation of Earth and its inhabitants, P. 48.
9. புறப்பொருள் வெண்பாமாலை, கரந்தை - 29.
10. தமிழ்நாட்டு வரலாறு, தொல்பழங்காலம், ப. 4.
11. திரு.வி. கலியாண சுந்தரனார், இமயமலை அல்லது தியானம், ப. 10.
12. அ.மு. பரமசிவானந்தம், தமிழக வரலாறு, ப. 48.
13. சிலம்பு. 19:19–20.
14. புறம். 9:8 - 11.
15. சி. பாலசுப்பிரமணியன், சங்க இலக்கியம், ப. 11.
16. தொல். பாயிரம், 1–3.
17. மறைமலையடிகள், மாணிக்கவாசகர் வரலாறும் காலமும், ப. 734.
18. ந.சி. கந்தையாபிள்ளை, தமிழகம், ப. 51.
19. சிலம்பு. உ.வே.சா. பதிப்பு, ப. 686.
20. சோமசுந்தர பாரதியார், பழந்தமிழ் நாடு, ப. 13.
21. சோமசுந்தர பாரதியார், பழந்தமிழ் நாடு, ப. 14.
22. புறம். 17:1–2, மதுரை. 70–71.

23. ச. சோமசுந்தர பாரதியார், பழந்தமிழ் நாடு, ப. 17.

24. சோமசுந்தர பாரதியார், ச. பழந்தமிழ் நாடு, பக். 17–21.

25. ந.சி. கந்தையா பிள்ளை, திராவிட இந்தியா, ப. 36.

26. டாக்டர் மொ.அ. துரை அரங்கசாமி, (கட்டுரை), பண்டைத் தமிழர் பண்பாடு, கட்டுரைத் திரட்டு, ப. 87.

27. தி.சு.பாலசுந்தரனார் (இளவழகனார்), சங்க நூற் கட்டுரைகள் அல்லது பழந்தமிழ் நாகரிகம், ப. 27.

28. சோமசுந்தரபாரதியார், பழந்தமிழ் நாடு, ப. 5.

29. திருமலை முத்துசாமி, தமிழ்நாடும் மொழியும், ப.8.

30. புறம். 6:1–4.

31. பதிற்று.2:1–5; மதுரை. 70–71.

32. பதிற்று. 2:1–5; 43:6–9, 11:23–25, பெரும்பாண். 429.

33. புறம். 391:7.

34. புறம். 385:10–12, 389:11, அகம் 61:12–13.

35. மு. தங்கராசு, சங்க இலக்கியத்தில் நிலவியல், ப. 46.

36. ப. அருணாசலம், தொல்காப்பியர், ப. 26.

37. தமிழ்நாட்டு வரலாறு – தொல்பழங்காலம், பக்.33–34.

38. புறம். 6:3–4.

39. புறம் 17:1–2; மதுரை. 70–71.

40. பதிற்று. 51:15.

41. பொருந. 221.

42. மதுரை. 326.

43. S. Thaninayagam, Landscape and Poetry, P.39.

44. P.T. Srinivasa Iyengar, History of Tamils, P.63.

45. தொல். புறத்திணையியல் (இளம் பூரணர் உரை), நூ. 88.

46. தொல். சொல். எச்சவியல், நூ. 66.

47. நா. செயராமன், சங்க இலக்கியத்தில் பாடாண்திணை, பக்.203– 204.

48. சிறுபாண்.128, புறம். 143:12.

49. மலைபடு. 270.

50. மலைபடு. 271–275.

51. மலைபடு. 373, சிறுபாண்.7–8.

52. மலைபடு. 129–131.

53. மலைபடு. 219–224.

54. மலைபடு. 234–241.

55. மேற்படி, 375.

56. மேற்படி, 379.

57. மேற்படி, 432.

58. மேற்படி, 280–281.

59. மேற்படி, 289–290.

60. மேற்படி, 17–20.

61. முருகு. 295–317.

62. மலைபடு. 278, சீவக. 2112.

63. மேற்படி, 151–156.

64. மேற்படி, 102–117.

65. மேற்படி, 193–195.

66. மேற்படி, 203–210.

67. மேற்படி, 170.

68. பெரும்பாண். 140–141.

69. சிறுபாண். 265.

70. மேற்படி, 106–111.

71. மேற்படி, 111–117.

72. மலைபடு. 315–317.

73. மேற்படி, 320–322.

74. மேற்படி, 342.

75. பெரும்பாண். 493–494.

76. மலைபடு. 294–344.

77. பெரும்பாண். 134–135.

78. மலைபடு. 498–529.

79. சிலம்பு. காதை. 25:37–55.

80. மலைபடு. 152–156.

81. மேற்படி, 170–185.

82. குறள். 83.

83. மலைபடு. 282–283

84. மேற்படி, 440.

85. பதிற்று. 30:24–25.

86. தொல். பொருள். 5.

87. P.T. Srinivasa Iyengar, History of the Tamils, P.53.

88. ஜ. அண்ணாமலை, சங்க இலக்கியத்தில் முல்லைத்திணை (பிஎச்.டி. ஆய்வேடு), ப. 13.

89. தேவநேயப்பாவாணார் – தமிழர் வரலாறு, ப. 31.

90. மலைபடு. 404–420.

91. சிறுபாண். 164–169.

92. புறம். 335:1–3.

93. மலைபடு. 271.

94. மலைபடு. 262–263.

95. பெரும்பாண். 147–154.

96. மேற்படி, 184–191.

97. மேற்படி, 198–205.

98. மேற்படி, 169–175.

99. புறம். 390:1.

100. பெரும்பாண். 166.

101. புறம். 54:10–11.

102. பதிற்று. 21:20.

103. பெரும்பாண். 176.

104. மலைபடு. 330–335.

105. புறம். 390:1–2.

106. பதிற்று. 30:27–28.

107. பெரும்பாண். 155–162.

108. பெரும்பாண். 163–168.

109. அ.கி. நாயுடு, தொல்காப்பியர் கண்ட தமிழர் சமுதாயம், ப. 222.

110. அ.ச. ஞானசம்பந்தன், அகமும் புறமும், பக். 240–241.

111. மு. வரதராசன், முல்லைத்திணை, ப.5.

112. மலைபடு. 409–410, 417.

113. சிறுபாண். 175–177.

114. பெரும்பாண். 166–168.

115. பெரும்பாண். 192–196.

116. மலைபடு. 418–419.

117. க.அப்பாதுரை, சங்க இலக்கிய மாண்பு, ப. 16, 17.

118. சிறுபாண். 186.

119. மா.இராசமாணிக்கனார், பத்துப்பாட்டு ஆராய்ச்சி, ப. 95.

120. பதிற்று. 87:2–5.

121. அகம். 86:7–9.

122. பொருந. 233 – 248.

123. மேற்படி, 180–190.

124. மேற்படி, 210–213.

125. சிறுபாண். 68–78.

126. புறம். 68:8–10.

127. புறம். 70:6–8.

128. மதுரை. 238–253.

129. மதுரை. 255–270.

130. சிறுபாண். 178–188.

131. பெரும்பாண். 206–212.

132. சிலம்பு. 10:120.

133. புறம். 109:1–8.

134. பெரும்பாண். 232–241.

135. மேற்படி, 232–233 (அ. மாணிக்கனார் உரை, ப.505)

136. மேற்படி, 257–262, (நச்சர் உரை)

137. பட்டின. 9–12.

138. மா.இராசமாணிக்கனார், பத்துப்பாட்டு ஆராய்ச்சி, ப. 115.

139. பெரும்பாண். 283–296.

140. மேற்படி, 351–355.

141. மேற்படி, 363 – 365.

142. மேற்படி, 364–365 (அ. மாணிக்கனார் உரை, ப. 545)

143. மேற்படி, 243–247.

144. பெரும்பாண். 243, அ. மாணிக்கனார் உரை.

145. பெரும்பாண். 201, பொ.வே. சோமசுந்தரனார் உரை,

146. பட்டின. 201.

147. மலைபடு. 449–453.

148. மேற்படி, 471–477.

149. பெரும்பாண். 214–223.

150. மேற்படி, 224–231.

151. மேற்படி, 248–252.

152. புறம். 188:1–2.

153. மேற்படி, 61: 8–11 (அ. மாணிக்கனார் உரை)

154. சிறுபாண். 192–195.

155. பெரும்பாண். 253– 256.

156. மேற்படி, 261–262.

157. மேற்படி, 356–362.

158. மேற்படி, 233.

159. புறப்பொருள் வெண்பாமாலை, ப. 186.

160. மலைபடு, 454–464.

161. புறம். 209:3–4.

162. மா. இராசமாணிக்கனார், பத்துப்பாட்டு ஆராய்ச்சி, ப. 99.

163. தி. முத்துக்கண்ணப்பன், சங்க இலக்கியத்தில் நெய்தல்நிலம், ப.23.

164. சிறுபாண். 151.

165. மதுரை. 325.

166. சு. வித்தியானந்தன், தமிழர் சால்பு, ப. 213.

167. பதிற்று. 67:1–4.

168. புறம். 48:3–4.

169. பொருந. 208–210.

170. மதுரை. 315–325.

171. சிறுபாண். 146–153.

172. பெரும்பாண். 271–274.

173. மேற்படி, 311–319.

174. மேற்படி, 319– 327.

175. சிறுபாண். 159–163.

176. பெரும்பாண். 275–282.

177. மேற்படி, 344–345.

178. மலைபடு. 168–169.

179. மா. நவநீத கிருட்டினன், தமிழ் இலக்கியத்தில் ஆற்றுப்படை, ப.284.

180. பொருந. 189–192.

181. மேற்படி, 208–213.

182. மேற்படி, 193–207.

183. மேற்படி, 222–225.

184. மேற்படி, 218–221.

185. மேற்படி, 214–217.

186. மேற்படி, 177–225. (பொ.வே. சோமசுந்தரனார் உரை, ப.61)

187. Gazetter of India, Tamil Nadu State, P.64.

188. S. Selvanayagam, Proceedings of the Second International Conference Seminar of Tamil Studies, Vol - II, Essay, P.220

189. Ibid, P.224.

190. S.Thaninayagam, Landscape and Poetry, A Study of Nature in Classical Tamil Poetry.

191. N.Sanjeevi, Geography -A Prime Factor in Ancient Tamil Poetry (Annols of Oriental Research of University of Madras) P2.

192. மு.வரதராசன், இலக்கிய மரபு, ப. 11–12.

193. புலவர் குழந்தை, தொல்காப்பியர் காலத் தமிழ், ப. 55.

194. குறுந்தொகை, உ.வே.சா., பதிப்பு, ப. 52.

195. டாக்டர் சி. இலக்குவனார், தொல்காப்பிய ஆராய்ச்சி, ப. 133.

196. மு. தங்கராசு, சங்க இலக்கியத்தில் நிலவியல், ப. 20.

197. மு. தங்கராசு, சங்க இலக்கியத்தில் நிலவியல், ப. 24.

198. சாமி. சிதம்பரனார், தொல்காப்பியத் தமிழர், பக்.19–20.

199. S.Thaninayagam, Landscape and Poetry, A Study of Nature in Classical Tamil Poetry, P. 116.

200. மு. தங்கராசு, சங்க இலக்கியத்தில் நிலவியல், ப. 25.

201. சிறுபாண். 6–12.

202. பெரும்பாண். 87–88.

203. மேற்படி, 89–90

204. மேற்படி, 92–100.

205. மேற்படி, 106–117.

206. மேற்படி, 97–105.

207. மேற்படி, 130–133.

208. மேற்படி, 424–426.

209. பொருந. 79–81.

210. பெரும்பாண். 468.

211. பதிற்று.12:19–20.

212. பொருந. 82–83.

213. பெரும்பாண். 470.

214. சிறுபாண். 236.

215. மலைபடு. 561–562.

216. பதிற்று. 12:21.

217. பொருந. 84–89.

218. சிறுபாண். 237.

219. பொருந. 102–107.

220. பெரும்பாண். 472–475, மலைபடு. 563–566.

221. குறள். 193.

222. சிறுபாண். 238–245.

223. புறம். 160:8–9.

224. மேற்படி, 127:7–8.

225. பொருந. 107–111.

226. பொருந.119–129, பெரும்பாண்.487–490, சிறுபாண்.258–260, மலைபடு.569–575.

227. சிறுபாண். 260.

228. பொருந. 159–162, பெரும்பாண். 480–486, மலைபடு–569–575, புறம். 361:7–13, 141:1–2.

229. நா. செயராமன், சங்க இலக்கியத்தில் பாடாண் திணை, ப. 202.

230. S.Thaninayagam, Nature Poetry in Tamil, P. 30.

231. P.T. Srinivasa Iyangar, History of Tamils, P.27.

232. T.P. Meenakshi Sundaram, 'Nakkiarar the Earliest Tamil Mystic', Tamil Culture, Vol - VI., P.310.

233. மா. நவநீதகிருட்டினன், தமிழ் இலக்கியத்தில் ஆற்றுப்படை, ப. 286.

234. ந.சி. கந்தையா பிள்ளை, திராவிட இந்தியா, ப. 39.

235. தமிழ்நாட்டு வரலாறு, தொல்பழங்காலம், ப. 126.

236. ரா.பி. சேதுப்பிள்ளை, தமிழகம் ஊரும்பேரும், ப. 3.

237. பதிற்றுப்பத்துச் சொற்பொழிவுகள், ப. 78.

238. பதிற்று. 21:28–29.

239. மேற்படி, 70:26–27.

240. மேற்படி, 88:10–13.

241. மேற்படி, 43:7–8.

242. பொ.வே. சோமசுந்தரனார் (பதிப்பு), பத்துப்பாட்டு, ப. 43.

243. சிறுபாண். 48–49.

244. சிலம்பு. 17:30.

245. மேற்படி, 17:1.

246. புறம். 39:14–15.

247. பதிற்று. 11:23.

248. புறம். 214:11.

249. மேற்படி, 39:21–22.

250. வேங்கடராகவலு ரெட்டியார், கபிலர், ப. 60.

251. மலைபடு. 527.

252. மதுரை. 546–547.

253. புறம். 158:7–8.

254. மேற்படி, 168:14.

255. டாக்டர் சி. இலக்குவனார், தொல்காப்பிய ஆராய்ச்சி, ப. 9.

256. குறுந். உ.வே.சா., உரை, ப. 76.

257. பதிற்று. 73:11.

258. புறம். 152:31.

259. மேற்படி, 158:5.

260. நற்றி. 265:9.

261. பதிற்று. 81:24.

262. அகம். 208:22, 209:15.

263. புறம். 150:25–28.

264. மேற்படி, 148:1.

265. மேற்படி, ஔவை சு. துரைசாமி உரை (பகுதி–1), ப. 816.

266. மலைபடு. 81–83.

267. மேற்படி, 579.

268. பத்துப்பாட்டு, உ.வே.சா. பதிப்பு, ப. 614.

269. புறம். ஔவை சு. துரைசாமி உரை (பகுதி–2), ப.389.

270. புறம். 137:5–13.

271. மேற்படி, 139:8.

272. மேற்படி, 140:1–2.

273. பதிற்று.67:22.

274. மேற்படி, 40:20.

275. புறம்; 109:1–10.

276. புறம். 158:4; சிறுபாண்.91.

277. புறம். 201:4

278. மேற்படி, 337:6

279. மேற்படி, 118:5

280. மேற்படி, 110:1–4.

281. S. Thaninayagam, Nature in Ancient Tamil Poetry, P.55.

282. புறம். 2:24.

283. புறம். 128:5, குறுந். 84:3

284. ரா. இராகவையங்கார், வஞ்சிமாநகர், ப. 103.

285. புறம். 158, ஔவை.சு. துரைசாமிப்பிள்ளை, உரை. ப.332.

286. மேற்படி, 258: 21–25.

287. மேற்படி, 163:8.

288. மேற்படி, 160:13.

289. தொல். பாயிரம், 1.

290. நற்றிணை, ஔவை சு. துரைசாமிப்பிள்ளை உரை, ப. 69.

291. அகம். 85:9.

292. புறம். 385:10–12.

293. புறம். 389:11.

294. முருகு. 188–189, சிலம்பு. 24:8.

295. புறம். 151.

296. பரிபாடல், 19:19.

297. புறம். 109:8

298. பதிற்று. 5:2.

299. புறம். 205:6.

300. புறம். ஔவை சு. துரைசாமிப்பிள்ளை உரை (பகுதி–1), ப. 317.

301. சிறுபாண். 1–3.

302. மதுரை. 244–253.

303. கலைக்களஞ்சியம், தொகுதி. 5, ப.210.

304. அ.கு. பாலசுந்தரனார், திராவிடநாடு (முதல்பாகம்), ப. 38.

305. பெரும்பாண். 429–435.

306. மதுரை, 496–499.

307. புறம். 161:5–8.

308. நற்.189, ஔவை சு. துரைசாமிப்பிள்ளை உரை, ப. 756.

309. மலைபடு, 527.

310. மா. இராசமாணிக்கம், ஆற்றங்கரை நாகரிகம், ப. 39.

311. மா. இராசமாணிக்கம், ஆற்றங்கரை நாகரிகம், ப. 39.

312. ரா. இராகவையங்கார், வஞ்சி மாநகர், ப. 103.

313. பொருந. 232–248.

314. புறம். 38:8

315. புறம். 68:8–10.

316. புறம். 58:1, பதிற்று. 73:8, புறம். 178:8, 166:28, பதிற்று. 90–47.

317. புறம். 43:21–23.

318. பொருந. 240–241.

319. மா. இராசமாணிக்கம், பத்துப்பாட்டு ஆராய்ச்சி, ப. 250.

320. வி. இராமகிருஷ்ண சாஸ்திரி, இந்திய ஆறுகள், ப. 82.

321. சி. இலக்குவனார், தொல்காப்பிய ஆராயச்சி, ப. 9.

322. தொல். சிறப்புப்பாயிரம்.

323. சிலம்பு. 11:20.

324. புறம். 67:6–7.

325. சோமலெ. செங்கற்பட்டு மாவட்டம், ப.17.

326. மலைபடு. 475–477.

327. கே.கே. பிள்ளை, தமிழக வரலாறு, மக்களும் பண்பாடும், ப. 21.

328. ந.சி. கந்தையாபிள்ளை, தமிழகம், ப. 5.

329. கா. அப்பாதுரை, தென்னாடு, ப. 50.

330. புறம். 9:10–11.

331. அ.கு. பாலசுந்தரனார், திராவிட நாடு (முதல்பாகம்), ப. 34.

332. மேற்படி, ப. 35.

333. புறம். 126:22–23.

334. வி. இராமகிருஷ்ண சாஸ்திரியார், இந்திய ஆறுகள், ப.100.

335. பதிற்று. 143:12–15.

336. கோ.வே. பெருமாள், 'தமிழ் கண்ட பொருநை' செந்தமிழ்ச் செல்வி, சிலம்பு–5, பரல்–3, ப. 165.

337. புறம். 11:5–6.

338. புறம். 387:33–34.

339. புறம். 36:5–7.

340. மயிலை சீனி. வேங்கடசாமி, கொங்குநாட்டு வரலாறு, ப.17.

341. சுந்தர சண்முகனார், கெடிலக்கரை நாகரிகம், ப.16.

342. சோமலெ, இராமநாதபுரம் மாவட்டம், ப.19.

343. மதுரை. 356.

344. சிலம்பு. 13:170.

345. மதுரை. 338:342.

346. புறம். 71:10–11.

347. சிலம்பு. 13:168–170, அரும்பதவுரையாசிரியார் உரை, ப.350.

**இயல் - மூன்று**

# பயிரினமும் உயிரினமும்

## பயிரினம்

தன்னைச் சூழ்ந்துள்ள இயற்கைப் பொருள்களைக் காண இயல்பாக ஈர்ப்புடையவன் மனிதன். பழந்தமிழன் இயற்கைப் பொருள்கள் அனைத்திலும் பெரிதும் ஈடுபாடு கொண்டவனாக வாழ்ந்தான்.

பண்டைக் காலப் புலவர்கள் இயற்கைப் பொருள்களையும் சூழலையும் நுணுகி அறிந்திருந்தனர். தாம் அறிந்தவற்றிற்குத் தம் பாடலில் அழகிய வடிவம் தந்தனர். புறத்தோற்றங்களைக் காணுதலால் அகநிறைவு பெற்று அவர்கள் மகிழ்ந்ததனைச் சங்க நூல்கள் உணர்த்துகின்றன.

பழந்தமிழ்ப் புலவர்கள் பயிரினம் பற்றிக் கூறியுள்ள செய்திகள் தொகுத்தும் வகுத்தும் தரப்பெற்றுள்ளன. அவை இன்றைய பயிரியல் வல்லார் கூறும் கருத்துகளோடு பொருந்துவனவாகும்.

### அகத்தி

இது செடி வகையைச் சார்ந்தது. இது கீரையாகப் பயன்படும். 'புகழா வாகை' என்று கூறப்படுகிறது. அகத்திப்பூ வெண்மையானது; சற்று வளைந்தது. அதன் பூவினைப் பன்றியின் வளைந்த கொம்பிற்கு உவமை கூறுவர்.[1]

### அகில்

பண்டைத்தமிழ்ப் புலவர்கள் பாடல்களில் இடம் பெற்றுள்ள சிறந்த மரங்களில் அகில் ஒன்றாகும். அகில் நீராடும் மகளிர்க்குத் தெப்பமாக விளங்கியது.[2] இது குறிஞ்சி நிலத்தில் வளர்வது.

**அடும்பு**

இது, கடற்கரை மணற் பரப்பில் பரந்து கிடக்கும் கொடியாகும். அடம்பென்றும் அடம்பங் கொடியென்றும் வழங்கப்பெறும். இக்கொடி, நீர் வறண்ட மணலில் படரும்.[3] கானல் சோலையில் உயர் மணல் பரப்பில் இக்கொடி தாழ்ந்திருக்க அதன் மீது கடல் அலை வந்து மோதும்.[4] இவ்வடும்பினைப் பற்றி, உ.வே. சாமிநாதையர், நெய்தல் நிலத்திற் கடற்கரையில் படரும் கொடிகளுள் மலரையுடையது இது. இதன் இலை இரு பிரிவாக இருத்தலின் மானின் அடியை உவமை கூறுவர். இதன் மலர் குதிரையின் கழுத்திலிடும் சலங்கை போல் இருக்கும். மகளிர் அதனை நெய்தலுடன் கட்டிக் கூந்தலில் சூடுவர். இக்கொடி மணல் மேட்டிற் படரும் என்பர்.[5] குளிர்ந்த கடற்பரப்பினை அடுத்த கரையில் மலர்ந்த பூக்களை உடையது அடப்பங்கொடி.[6]

**அத்தி**

இது மர வகைகளில் ஒன்று. இது பூவாதே காய்க்கும் மரம் என்பர்.[7]

**அவரை**

அவரை, கொடி வகையைச் சார்ந்ததாகும். உதிர்ந்த அவரைப் பூக்கள் தயிர்க் கண்டம் சிதறிக் கிடப்பதுபோல் தோற்றமளித்தன.[8] அதன் கொடியில் வெண்மையான காய்களும் காய்க்கும்.[9] நன்றாக முற்றிய அவரைக்காய் வளைந்த அரிவாளைப் போன்றிருந்ததாகப் பெருங்கௌசிகனார் குறிப்பிட்டுள்ளார்.[10] இது குறிஞ்சி நிலத்துக்குரியதாகும்.

**ஆம்பல்**

ஆம்பல் நீர்த் தாவரமாகும். ஆம்பலின் இலை மென்மையானதும்[11] அகன்றதும்[12] ஆகும். ஆம்பல் மலர், மாலை நேரத்தில் மலரக் கூடியது. வெண்ணிறமுடையது; வண்டு சென்று ஊதும் சிறப்புடையது.[13] ஆம்பல் மலர்

குவிந்து விரியும் தன்மையுடையது.[14] ஆம்பல் தண்டு துளைகளை யுடையது; அகன்ற ஆம்பலின் இலை நிழலில் பகற்போதில் ஆண் நத்தையும் பெண் சங்கும் மணம் கொள்ளும் சிறப்புடையது.[15] ஆம்பல் தண்டினால் ஆன வளையலைச் சிறுமியர் அணிந்தனர்.[16] தலைமகள் ஆம்பல் தழையால் ஆகிய தழையுடையை அணிந்தாள்.[17] ஆம்பலில் புல்லரிசி உண்டாகும்.[18]

## ஆரம் (சாந்தம்)

ஆர், (ஆத்தி) என்ற சொல் அம்முப்பெற்று ஆரம் என வந்தது என்பர் ஔவை சு. துரைசாமிப்பிள்ளை.[19] ஆரம் என்பது சந்தன மரமாகும். காஞ்சி மரத்தின் குளிர்ந்த தளிருடன் ஆத்தி மலரைக் கலந்து தொடுக்கப்பட்ட மாலையை இளமகளிர் அணிந்தனர்.[20] நீராடும் மகளிர்க்கு அகிலும் ஆரமும் தெப்பமாக விளங்கின.[21] குறிஞ்சி நிலத்திற்கு உரிய இச் சந்தனமரம் வயிரம் பாய்ந்தது.[22] இம்மரம் பிளவுபட்ட அடுக்குகளையுடைய மலைப்பக்கத்தில் தழைத்து வளரும்.[23]

## ஆல்

பூவாதே காய்க்கும் மரங்கள் ஆல், அத்தி, பலா என்பர். ஆலமரம் விழுதுகளையுடையது. முதிர்ந்த மரத்தை அதனைச் சூழ்ந்துள்ள அம்மரத்தின் விழுதுகள் தாங்கும்.[24] ஆலமரத்தில் தெய்வம் உறைவதாக நம்பிக்கை உண்டு.[25]

## இஞ்சி

இஞ்சியைச் 'செய்யாப் பாவை' என்பர். ஒருவராலும் அது செய்யப்படாததால் செய்யாப்பாவை எனப்படும். இஞ்சிக் கிழங்கைப் பாவை என்றல் மரபு. இஞ்சி உறைப்புச் சுவையையுடையது.[26]

**இருப்பை**

"இருப்பை மரத்தின் கிளைகள் கரிய நிறம் கொண்டவை. குறும்பூழ் பறவை எலியைத் துரத்த அருகிலிருந்த குறுமுயல் அஞ்சி ஆரவாரம் செய்து ஓட, அதனால் இருப்பை மரத்தின் பூக்கள் உதிரும்" என்று புறத்திணை நன்னாகனார் கூறுவார்.[27]

**இரவம்**

இது இனிய பழங்களைத் தரும் மரமாகும். இதன் தழையையும் வேம்பின் இலையையும் வீட்டில் செருகினர்.[28]

**இருவாட்சி**

இதனை, 'இருள்வாசி' என்றும் கூறுவர். இரவில் மணம் பரப்புவதால் இதனை 'நள்ளிருள் நாறி' என்பர். இது மலையில் வளரும்.[29] ஆயர் மகளிர் இருவாட்சிப் பூவுடன் பச்சிலையும் சேர்த்துத் தொகுத்து அணிந்தனர்.[30]

**இலவம்**

இலவ மரம் நீண்ட அடிப்பகுதியையும் அசையும் கிளைகளையும், பசுமையான காய்களையும் உடையது. அக்காய் முற்றி வெண்மையான பஞ்சு தோன்றும்.[31]

**ஈச்சமரம்**

களர் நிலத்தில் வளரக்கூடியது ஈச்ச மரம்.[32] அதன் இலை வேல் போன்று கூர்மையானது.[33]

**உயவை**

இது கொடி வகையைச் சார்ந்தது. இதனை உண்பவர் வாயில் நீர் ஊறும்.[34]

**உழிஞை**

உழிஞைக் கொடி நுட்பமானது; நீண்டு படரக்கூடியது; தண்மை கொண்டது; சிறிய இலையுடையது.[35] பூவும் தளிரும் பொன் நிறமுடையன.[36]

(உழிஞைத் திணையின் பொருட்டுப்) போருக்குச் செல்லும் வீரர்கள் உழிஞைப் பூமாலையை அணிந்து செல்வர்.[37]

**உன்னம்**

உன்ன மரத்தின் இலை சிறியது; அடி மரம் அழகற்றது; பொன்னிறமான மலரை உடையது. இம்மரம் போர் வீரர் நிமித்தம் அறிய உதவும்; இம் மரத்தைக் காண்பவர் வெற்றி அடைவதானால தழைத்து விளங்கும். தோல்வி அடைவதானால் கரிந்து நிற்கும். இம்மரம் கரிந்து நிற்கும் போதும் இதனைக் கண்ட பாரி வெற்றி பெற்றதாகக் கபிலர் கூறுவார். அதனால் பாரியை 'உன்னத்துப் பகைவன்' எனச் சுட்டிச் செல்கிறார்.[38]

**ஊகம்**

வைக்கோலைப் போன்றது ஊகம் புல். இது காட்டில் விளையக் கூடியது.[39] வேட்டுவச் சிறுவர் எலி வேட்டையாட வில்லின் கோலாக ஊகம்புல்லைப் பயன்படுத்துவர்.[40] பல வழிகளும் சந்திக்கின்ற இடத்தில் புதியவர் சரியான பாதையில் செல்ல ஊகம்புல்லை அடையாளமாக முடிந்து வைப்பர்.[41]

**எருவை**

எருவை, நீர் சூழ்ந்த இடத்தின் அருகில் வளரும். இது பெருவரை முகட்டில் படியும். பனிமுகிலாலும் மழையாலும் விளையும் ஒரு வகைப்புல்.[42] இதனைப் 'பஞ்சாய்க் கோரை' 'கொறுக்கைச்சி' எனவும் வழங்குவர். தாள் (தண்டு) மென்மையானது. மலைவழிச் செல்வோர் இதனை ஊன்று கோலாகக் கொண்டனர்.[43]

**எள்**

இது செடி வகையாகும். எள்ளின் காயைக் கவ்வை என்பர். இது முற்றிக் கருநிறமடையும்.[44]

**ஐயவி**

வெண்சிறு கடுகினை ஐயவி எனக் கூறுவர். மலைச்சாரிவின்கண் உழாமல் விதைக்கப்பட்ட இடத்தில் இது மிக நெருக்கமாக வளரும்.[45] இதன் தாள் நெடிதாக இருக்கும்.[46] புண்பட்டவரைப் பேய்கள் அணுகாதபடி வெண்சிறு கடுகை அப்பவும் புகைக்கவும் செய்வர்.[47]

**ஐவனம்**

குறிஞ்சி நிலத்தில் வளரும் நெல் வகைகளில் ஐவனமும் ஒன்று. அருவி நீரால் இதனைப் பயிர் செய்வர். ஐவனம் பால் கட்டி, நன்றாக முற்றி விளைந்த செய்தியினை மலைபடுகடாத்தால் அறியலாம்.[48] ஐவனநெல் வேறு, வெண்ணெல் வேறு என்பதனை நச்சினார்க்கினியர் உரையால் அறியலாம்.[49]

**கஞ்சகம்**

கருவேம்பு, கறிவேப்பிலை என்பதாகும். மாவடுவுடன் கறிவேப்பிலை கலந்து ஊறுகாய் செய்வர்.[50]

**கடம்பு**

இது இலக்கியத்தில் **'மராம்'** என்றழைக்கப்பெறும். கடம்ப மரத்தில் இருவகையுண்டு. அவை, வெண்கடம்பு, செங்கடம்பு என்பனவாகும். கடம்பமரம் பொய்கைக் கரையின் பக்கத்தில் உயர்ந்து வளரும்.[51] இதன் மலர் கார்காலத்தில் மலரும்.[52] மலர் உருண்டு திகழும்.[53] அம்மலர் இந்திரக்கோபப் பூச்சி போன்ற செந்நிறத் தாதினை உதிர்க்கும்.[54] அதன் மலர் தீயைப் போன்ற செந்நிறமுடையது.[55] நெடுஞ்சேரலாதனின் கடற்பகைவருடைய காவல் மரமாகக் கடம்ப மரம் விளங்கியது.[56] இம்மரத்தின் மலர் மாலை முருகனுக்கு உரியது என்று திருமுருகாற்றுப்படை குறிப்பிடுகிறது.[57] வெண்கடம்ப மரம் சிவந்த அடிப்பகுதியையும், வெண்மையான பூங்கொத்துக்களையும் உடையது.[58] உயர்ந்த கடம்ப மரங்கள் பாலைக்

கொடுமைக்கு இரையாயின. ஆகவே அம்மரங்களில் இலைகள் இல்லாமல் போயின.[59] இலைகள் இன்மையால் நிழல் குறைந்தது. அம்மரங்கள் தரையில் பரப்பும் நிழல் தொடர்ச்சியற்றிருப்பதால் வரிவரியாக வலைபரப்பியது போன்று விளங்கின.[60]

**கடு**

இது கடுக்காய் மரமாகும். இம்மரம் இடமகன்ற பக்கமலையில் உயர்ந்து வளரும்.[61]

**கண்பு**

இது 'சம்பங்கோரை' என்றும் இக்காலத்தில் 'சம்பு' என்றும் வழங்கப்பெறும். இது மருத நிலத்தில் வளரும் புல்லாகும்.[62] இது களிற்றையும் மறைக்கும் உயரமுடையதாக வளரும்.[63]

**கணைய மரம்**

இது கழுக்கோ என்றும், இலக்கியத்தில் **'எழு'** என்றும் வழங்கப்பெறும்.[64] மதிலின் கதவுகள் கணைய மரத்தால் ஆனவையாகும்.[65]

**கமுகு**

கமுகு மரம் பசுமையான பாளைகளையுடையது. அப்பாளையில் கருக்கள் செறிவாக அடுக்காகத் தோன்றும். அவற்றில் சிறிய துளைகள் இருக்கும்.[66]

**கரந்தை**

கரந்தைச் கொடி வயலில் படரும்.[67] கரந்தை மலர் மணமுடையது. நாகினது முலை போன்றது.[68] இதன் கொடி கரிய நிறமுடையது.[69] ஆநிரையை மீட்கச் செல்லும் வீரர்கள் தலையில் கரந்தைப்பூ அணிந்து செல்வர்.

**கரும்பு**

மலைச்சரிவில் குறிஞ்சி நில மக்கள் கரும்பினைப் பயிரிட்டனர். இக்கரும்பினைக் கடலுக்கு அப்பாலிருந்து அதியமான் முன்னோர் கொண்டு வந்தனர்.[70]

**கவிர்**

இது முள்முருக்க மரமாகும். இது மலையில் நெருங்கி வளரக்கூடியது.[71]

**கள்ளி**

கள்ளிச்செடி களர்நிலத்திலும் சுடுகாட்டிலும் வளரும்.[72] இது பொரிந்த அடிப்பகுதியை உடையது.[73]

**காஞ்சி**

இது மருத நிலத்தில் வளரும் மரமாகும். இம்மரம் குறுகிய காலினையும் பொலிவற்ற அடிப்பகுதியையும் கொண்டது.[74] அதன் கிளைகளில் மலர்மாலை கட்டியது போன்ற நறுமண மலர்கள் மலரும். அதன் மலர் சிவப்பு நிறமுடையது.[75]

**காந்தள்**

தமிழிலக்கியத்தில் போற்றப்படும் அழகிய பூ காந்தள் பூவாகும். செடி நூற்படி இது ஒரு கொடி என்று கூறுகிறார் பி.எல்.சாமி.[76] இதனைக் "கார்த்திகைப்பூ என்றும் கலப்பைக் கிழங்கு என்றும் காக்கை மூக்குச் செடி" என்றும் தற்காலத்தில் வழங்குகின்றனர்.[77] இது கார்த்திகை மாதத்தில் பூப்பதால் கார்த்திகைப்பூ என்று வழங்குகின்றனர். இது கார்காலத்தில் மலரும்.

“காந்தளில் தோன்றி, கோடல் என இரு பிரிவு உண்டு. தோன்றிக்குச் செங்காந்தள் என்றும் கோடலுக்கு வெண்காந்தள் என்றும் பொருள் கூறுவர்.”[78] வெண்காந்தள் மலர் உடைந்த வளையல் போல் பூத்தது.[79] இவ்வெண்காந்தள் மலர் கோடல் (கோடு+அல்) எனப்படும். முகைப் பருவத்தில் மகளிரின் நகம் போன்று விளங்கும்.[80]

“காந்தள் பல வண்ணங்களைக் கொண்டது. பசுமை, செம்மை, வெண்மை, மஞ்சள் முதலிய நிறங்களைப் பெற்றுப் பொலிவுடையதாகத் திகழ்வது காந்தள் மலர்”[81] என்று குறிப்பிடுவார் இராம. குருநாதன். செங்காந்தள் மலர் நெருப்பு போன்ற நிறமுடையது.[82] மலைப் பகுதியில் விளங்கும் இக்காந்தள் நீண்ட பூங்கொத்துக்களைக் கொண்டது.[83] செங்காந்தள் மலர் மகளிரின் கை விரல்களைப் போல் பூப்பதாகச் சிறுபாணாற்றுப்படை கூறுகிறது.[84] காந்தள் மலரின் மடல் துடுப்புப் போன்றிருக்கும் என்று மலைபடுகடாம் கூறுகிறது.[85] “உழவர்கள் நீர் இறைத்த சால்களில் வேரோடு காய்ந்த, செங்காந்தள் மலர்கள் நிறைந்திருந்தன” என்று பதிற்றுப்பத்துக் கூறுகிறது.[86] காந்தள் மலரைச் செல்வக் குடியினர் சூடினர்.[87] காந்தள் கொழுவிய கிழங்கையுடையது.[88] காந்தள் மலை முழுவதும் மணம் கமழ்வதைப் புலவர் பலரும் குறிப்பிடுகின்றனர் என்பதைக்,

**“காந்தள் கடிகமழும் கண்வாங் கிருஞ்சிலம்பு”[89]**
**“காந்தள் கமழ்குலை யவிழ்ந்த நயவரும் சாரல்”[90]**
**“மன்றல் மலர மலர்க்காந்தள் வாய்நாற”[91]**
**“காந்தள் சிலம்புடன் கமழும் சாரல்”[92]**

என வரும் தொடர்களால் அறியலாம். ஆனால், காந்தள் மலர் உண்மையில் மணம் உடையதாகத் தெரியவில்லை என்று பி.எல். சாமி கருதுகிறார்.[93]

**காயா**

இது மர வகையாகும். மணியின் நிறத்தைப் போன்றது. காயா மலர் தேன் நிரம்பியது.[94]

**குல்லை**

கஞ்சங்குல்லை என்ற செடியை இக்காலத்தார் 'கஞ்சா' என்பர். திவாகரமும் இதனைக் கஞ்சா என்றே கூறுகிறது.[95] இது இலையைத் தலைப்பகுதியில் கொண்டது.[96] இது கொடிய வெயிலையும் தாங்கும்.[97] வடுகர்கள் தம் தலையில் இப்பூவினைச் சூடுவர் என்பர்.

**குவளை**

மலைச்சுனையில் குவளை மலரும்.[98] செங்குவளை, கருங்குவளை எனக் குவளையில் இருவகையுண்டு. செங்குவளை மலரின் இதழ்கள் சாதிலிங்கம் போல் சிவந்த நிறமுடையன.[99] இதன் தண்டு பசிய நிறமுடையது.[100] செங்குவளை மலரைப் பெண்கள் தலையில் அணிந்தனர்.[101] புலவர்கள் கருங்குவளை மலரைப், பெண்களின் கண்களுக்கு உவமை கூறுவர்.[102] குவளை மலரில் தெய்வம் உறையும் என நம்பினர்.[103]

**குளவி**

இது காட்டு மல்லிகையாகும். வேட்டுவர் குடிலுக்குப் பக்கத்தில் காட்டு மல்லிகை மலர்ந்து மணம் பரப்பியது.[104] இது வளமான இதழ்களையுடையது.[105] காட்டு மல்லிகையின் மீது எருமைகள் துயில் கொண்டன எனச் சிறுபாணாற்றுப்படை சுட்டுகிறது.[106]

**குறிஞ்சி**

மலை நிலத்திற்கு உரிய சிறந்த மலர் குறிஞ்சி. சங்க நூல்களில் இதனைப் பற்றிய குறிப்பு வேங்கை, காந்தள் ஆகிய மலர்களைப் பற்றிய

குறிப்புகளைக் காட்டிலும் அருகியே காணப்படுகிறது என்கிறார் இராம குருநாதன்.[107] குறிஞ்சி மரவகையைச் சார்ந்தது என்று கூறுவார் ஔவை சு. துரைசாமிப்பிள்ளை.[108] குறிஞ்சி, செடி வகையைச் சார்ந்தது எனக் கொள்வதே பொருந்தும் என்று பயிர்நூல் வல்லார் கருதுவர்.[109]

மலையில் குறிஞ்சி மிகுந்திருத்தலைக் கண்டு 'குறிஞ்சி சான்ற வெற்பு'[110] எனவும் 'கருங்கோற் குறிஞ்சியடுக்கம்'[111] எனவும் புலவர்கள் குறிப்பிட்டுள்ளனர். குறிஞ்சி, கார் காலத்தில் மலரும்.[112] குறிஞ்சி மலர் வெண்ணிறமன்றி வெண்மை கலந்த நீல நிறமாகவும் மலரும்.[113]

குறிஞ்சி மெல்ல வளரும் இயல்புடையது; ஆண்டுக்கணக்கில் வளர்ந்து வளர்ச்சி பெறும். ஓராண்டுக்கு ஒரு முறை மலர்கின்ற குறிஞ்சியுமுண்டு. பன்னிரண்டு ஆண்டுகளுக்கு ஒரு முறை மலர்கின்ற குறிஞ்சியுமுண்டு எனப் பயிர்நூல் வல்லார் கூறுவர்.[114] குறிஞ்சியின் சிலவகை இனங்கள் ஒரே தடவை சில ஆண்டுகள் வளர்ந்து பின்னர், பட்டுப்போய்விடும்.[115]

மழை பெய்யத் தொடங்கியவுடன் குறிஞ்சி மலரும், பின்னர் வாடும்; மீண்டும் மழை பொழியும்போது தளிர்த்து மலர்ந்து மணம் வீசும்.[116] குறிஞ்சி பாடுவதில் வல்லவரெனப் போற்றப்பெறும் கபிலர், குறிஞ்சிப்பாட்டில் பல்வேறு மலர்களோடு சேர்த்துக் குறிப்பிடுவது தவிர, வேறு இடங்களில் குறிஞ்சி மலரைக் குறிப்பிடவில்லை என்பர் இராம. குருநாதன்.[117]

**கூதளம்**

இது மரவகையைச் சார்ந்தது.[118] கூதாளி ஒருவகைச் செடி என்று கூறுகிறார் புலியூர்க்கேசிகன். இதனைத் 'தூதுளை' எனவும் கூறுவார்.[119] இதன் அருகில் காட்டு மல்லிகையும் இருந்தது என்று புறநானூறு கூறுகிறது.[120]

**கொள்**

பணியாதவரின் மருதநிலம் பாழ்பட்டு வன்னிலமாகிக் கொள்ளு விளையும் நிலமாகி இழிவுபடும்.[121]

**கொன்றை**

கொன்றை மலர் பொன் நிறமுடையது,[122] ஒளியுடையது.[123]

**கோங்கு**

கோங்கு எல்லாக் காலங்களிலும் மலரும். பரிமேலழகர் இதனைக் காலங்குறியாது பூக்கும் பூ எனக் குறிப்பிட்டுள்ளார்.[124] கோங்கின் முகையினை மகளிரின் நகிலுக்கு உவமை கூறுவர் புலவர்.[125] கோங்குமலர் மகரந்தத் துகள்களையுடையது.[126]

**சுரை**

பகைநாட்டுப் பாழான வீடுகளில் வேளைக் கொடியுடன் பசுமையான சுரைக்கொடியும் வளர்ந்தன.[127] சுரைக்காய் பந்தலில் தொங்கியது.[128]

**செங்குரலி**

இது கொடிவகையைச் சார்ந்தது. இது குளிர்ந்த கயத்தில் வளரும். ஒளி பொருந்தியது.[129]

**செருந்தி**

இது வாட்கோரை என்றும் நெட்டிக் கோரை என்றும் வழங்கப்பெறும். பகைநாட்டு நீர்நிலையில் வளரும் இக்கோரை யானையை மறைக்கும் அளவுக்கு உயர்ந்து வளரும்.[130]

**ஞாழல்**

நெய்தலுக்குரிய சிறந்த மரங்களில் ஒன்று ஞாழல். இம்மரம் கடலினை அடுத்து வளர்வதாகும். இம்மரம் கொத்துக் கொத்தாய்ப் பூப்பூக்கும்.[131] ஞாழல் மரங்களில் நாரை வதியும்.[132]

**தக்கோலம்**

இது மர வகையைச் சார்ந்தது. இதன் காய் புட்டில் (கூடை) போல் விளங்கும்.[133]

**தகரம்**

மணம் வீசும் மரவகையாகும். பெண்கள் இதன் சாந்தினைத் தலையில் பூசிக்கொள்வர்.[134]

**தருப்பை**

இது புல் வகைகளுள் ஒன்று. இது 'நாணல்புல்' என்றும் வழங்கப்பெறும். இது நீர்நிலைகளில் வளரக்கூடியது. பசுமையான நிறமுடையது.[135] இப்புல்லால் குடிலின் கூரையை வேய்ந்தனர்.[136]

**தளவம்**

இது புதர்ச் செடியாகும். புதரில் பூத்த தளவப்பூவை உழவர் தம் தலையில் சூடிக்கொள்வர்.[137]

**தாமரை**

மருத நில நீர்நிலைகளில் தாமரை வளரும். தாமரையில் செந்தாமரை, வெண்டாமரை என இரண்டு வகையுண்டு. தாமரையின் தாளில் முட்கள் உண்டு.[138] தாமரை மலர் பகலில் மலரும்; ஒளியுடையது.[139] செந்தாமரை மலர் தீயின் நிறத்தைப் போன்றது.[140] கொடிவகையைச் சார்ந்த இத்தாமரை பசுமையான இலையைக் கொண்டது.[141] இத்தாமரை மலரை நீராடும் மகளிரின் கண்களுக்கு உவமையாக்கியுள்ளனர்.[142]

**தாழை**

நெய்தல் நிலத்தில் மணம் கமழத் தாழை மலரும்.[143] இத்தாழை கண்டல், கைதை என்னும் பெயர்களாலும் வழங்கப்படுகிறது.[144] தென்னை மரம் 'வீழில் தாழை' என்றழைக்கப்படுகிறது. தாழையின் பூ அன்னப் பறவை போன்று பூக்கும்.[145] இதன் பழம் குடமுழாப் போன்றிருந்ததாக மதுரைக் காஞ்சி கூறுகிறது.[146] தாழையின் நறுமணமிக்க பூ கடற்கரையின் புலால் நாற்றத்தை நீக்கியது.[147]

**தாளி**

இதனைச் செடி என்றும் கொடி என்றும் கூறுவர். செறிந்த இலைகளையுடைய தாளியைத் துறவிகள் பறிப்பர்.[148]

**திலகம்**

திலகம் என்பது மஞ்சாடி மரமாகும்.[149]

**தினை**

மலை நிலத்தில் தினையினைப் பயிரிடுவோர் மிகுதி. குறிஞ்சி மக்களின் உணவில் தினை மிகுதியும் இடம்பெறும் என்பர்.[150] இரண்டு யானைகள் பொருகின்ற போது பின்னிப் பிணைந்து விளங்கும். அவற்றின் கைகளைப்போல் தினைப்பயிர் செழிப்புடன் திகழ்வதாகப் பெருங்கௌசிகனார் கூறியுள்ளார்.[151]

**துலா மரம்**

இது 'பூணா ஐயவி' என்றழைக்கப்படுகிறது. மதில்களில் துலா மரங்கள் தொங்கவிடப்பட்டிருந்தன.[152]

**துளசி**

இச்செடி 'துழாய்' என்றழைக்கப்பெறுகிறது. மற்றச் செடிகளின் பூக்கள்தான் மணம் கமழும். ஆனால், துழாயின் இலையே மணம் வீசும். இப்படிக் கூறிய சிறப்பால் 'கமழ்குரல் துழாஅய்' என்ற பாடல் தலைப்புப் பதிற்றுப்பத்தில் இடம்பெற்றுள்ளது.[153] திருமாலின் மாலையாக இது விளங்குகிறது.

**தென்னை**

இது 'வீழில் தாழை' என்றழைக்கப்படுகிறது. அதன் இளநீர் தீஞ்சுவையினையுடையது.[154] தேங்காய் பழுத்தால் அடி மூன்றாகப் புடைத்தல் அதற்கு இயல்பு என நச்சினார்க்கினியர் கூறுவார்.[155]

**நரந்தம்**

இது மலையில் வளரும் புல்லாகும். கவரிமான் இதனை மேயும்.[156] நரந்தமலர் நறுமணமுடையது.[157] நரந்தம் பூ மாலையைச் சீறியாழுக்குச் சூட்டினர்[158] நரந்தை நறும்புல் இமயமலையில் உண்டு.[159]

**நறைக்கொடி**

மழையால் செழித்து, மணமுடைய அரும்புகளையுடைது நறைக்கொடி.[160] இக்கொடியிலிருந்து நாரெடுத்து வேங்கைப்பூ மாலையைத் தொடுப்பர்.[161]

**நாகம்**

இது சுரபுன்னை மரம் என்றழைக்கப்பெறுகிறது. இதன் மலர் நறுமணமுடையது.[162]

**நாவல்**

நாவல் மரம் அகன்ற பாறைகளிலும்[163] காட்டாற்றுக் கரையிலும்[164] வளரும். இதன் கனிகள் கருநிறமுடையன.[165]

**நெல்**

மருத நில வயல்களில் நெல் பயிரிடப்படுகிறது. நெற்பயிர் யானைகளை மறைக்கும்படி ஓங்கி உயர்ந்து விளங்கியது.[166] நெற்கதிர்கள் வளைவாக இருக்கும்.[167] நெல்லில் வெண்ணெல்[168] செந்நெல் என இரண்டு வகையுண்டு.

**நெல்லி**

நெல்லி மரம் வன்புலத்தில் இருக்கும். புல்லிய வித்துடையது.[169] இது சிறிய இலைகளையும் இனிமையான கனிகளையும் உடையது.[170]

**நெய்தல்**

கடல் சார்ந்த இடத்தில் நெய்தல் செடி காணப்படும். நெய்தல் நீரில் வளரும் செடியாகும். "நெய்தல் செடியைச் செடி நூலார் 'Nymphae Stellata' என்றழைப்பர். நெய்தல் வெண்மை, சிவப்பு, நீலம், கருநீலம் ஆகிய பூக்களை உடையது எனச் செடிநூல் கூறும். அதில் கருநீல நிறமுடையதையே நெய்தல் என்று சங்க நூல்கள் கூறுவதாகத் தெரிகிறது"[171] என்பர் பி.எல். சாமி. நெய்தல் சிறு கொத்தான மலர்களையுடையது.[172] இதன் கருநீல மலர் கண்போன்ற நிறமுடையது.[173] நீர்த்துறை முழுவதும் நெய்தல் மலர்ந்துள்ளதால் அத்துறை நீல மணியாலான கலம் போன்று விளங்கியது.[174] அம்மலர்கள் மணக்கும் மலராக விளங்கின.[175] கரும்பின் பாத்திகளிலும் நெய்தல் மலர்கள் மலர்ந்தன.[176]

**நொச்சி**

இது செடி வகையைச் சார்ந்தது. நீர் வற்றாத நிலத்தில் வளர்வது. இதன் மலர் கருநிறமுடையது.[177] மணிகள் கொத்துக் கொத்தாய் அமைந்தது போன்று 'நொச்சி மலர்கள் இருக்கும் [178] இளமகளிர் நொச்சித் தழையைத் தங்கள் இடையில் அணிவர். மதிலைக் கைக்கொள்ளக் கருதும் வீரர்கள் தங்கள் தலையில் நொச்சி மலரைச் சூடுவர்.[179]

**பகன்றை**

பகன்றை நீர் நிலையில் இருப்பது;[180] படர்கின்ற கொடி வகையைச் சார்ந்தது.[181] தேனுடைய மலருடையது.[182] பகன்றை கழனிகளிலும் வளரும்.[183] இதன் மலர் வெண்மையானது.[184]

**பலா**

குறிஞ்சி நிலத்தில் மிகுதியாகக் காணப்படுவது பலா மரமாகும். பலா மரம் பசுமையான இலைகளையுடையது.[185] பலா மரம் அதன் அடிப்பகுதியிலும் வேரிலும் கனிகளைக் கொண்டது.[186] பலா கார் காலத்தில் பழுக்கக் கூடியது.[187] இது சிறிய சுளைகளைக் கொண்ட பெரிய பழமாகும்.[188] பலாப் பழத்தின் மேற்புறத்தைக் கண்டு 'முட்புற முதுகனிகள்' எனப் பெருஞ்சித்திரனார் குறிப்பிடுகிறார்.[189] பலாச்சுளைகள் இனிமையானவை;[190] மணம் கமழ்பவை.[191] பலாப் பழங்கள் புண்களாக வெடிக்கப்பெற்று விதைகள் சிதறிக் கிடக்கும்.[192] பலா மரம் மன்றத்திலும் வளர்ந்திருக்கும்.[193] மன்றப் பலாமரத்தில் அன்னச்சேவல் வாழ்ந்தது[194] பலாக்கனிகளை அருவிநீர் அடித்து வரும்.[195] முக்கனிகளுள் ஒன்றாகக் குறிக்கப்பெறும் சிறப்புடையது. பலா, பூவாதே காய்க்கும் என்று சொல்வர். பலாப் பூக்கள் பூப்பது வெளியே தெரிவதில்லை என்பர் ச.வே. சுப்பிரமணியன்.[196]

**புன்னை**

நெய்தல் நிலத்தின் சிறப்புமிக்க மரம் புன்னை என்பர் தி. முத்துக்கண்ணப்பன்.[197] கடற்கரையோரத்தில் ஒருசில மரங்களே வளரக்கூடியவை. கடற்கரைக்குச் சிறிது தள்ளிக் காணப்படும் கானலில் வளரும் மரங்களில் மிகவும் எளிதாகவும், பொதுவாகவும் காணப்படுவது புன்னை மரமென்று செடிநூலார் கருதுகின்றனர்.[198] புன்னை மரத்தின் அடிப்பகுதி வளைந்திருக்கும்.[199] இம்மரத்தில் தழை செறிந்திருக்கும்.[200] புன்னை மலரின் நிறம் வெண்மையாகும்.[201]

**பெண்ணை**

இது பனை என்றும் வழங்கப்பெறுவது. இலக்கியத்தில் இது போந்தை[202] என்று குறிக்கப்படுகிறது. நெய்தல் நிலத்தில் பல்கிப் பெருகிக் காணப்படுவது. பனை மரம் கரிய நிறமுடையது.[203] அம்மரத்தின் அடிப்பகுதி பருத்திருக்கும்.[204] முழவு போன்ற பருமையுடையது.[205] பனங்குருத்து வெண்மையான நிறமுடையது.[206] அப்பனங்குருத்து ஊசி போன்றதாகும்.[207] பனந்தோடு பசுமையான நிறமுடையது.[208] பனைமாலை கரிய நிறமுடையதாக விளங்குகிறது.[209] இதன் மலரில் வண்டு மொய்க்காது.[210] இதன் மாலை (பனம்பூ) சேரர்களுக்கு உரியதாகும். பனையை நாம் தண்ணீர் விட்டு வளர்ப்பதில்லை.[211]

**மஞ்சள்**

இது மருத நிலத்தில் வளரும் தாவரமாகும். மணம் வீசும் மஞ்சளை வீட்டின் முற்றத்திலும் வளர்ப்பர்.[212] மஞ்சளில் சிறு பசு மஞ்சள் என்ற வகையும் உண்டு.[213] மஞ்சள் இலை மென்மையானது.[214]

**மரல்**

மூங்கிலும் மரலும் பொதுவாகப் பெருங்கோடையின் வெப்பத்தையும் தாங்கித் தழைக்கவல்லன[215] என்பர் மு.வ. மரல் கற்றாழை இனத்தைச் சார்ந்தது. காட்டில் இருக்கும் இம்மரலின் பழங்கள் வரிகளையுடையன.[216] மரலிலிருந்து எடுக்கப்படும் நாரால் பூத்தொடுத்தனர்.[217]

**மருதம்**

'பூ மருது' என்று வழங்கப்படும் மரமே சங்க கால மருதமாகும் என்பார் பி.எல்.சாமி.[218] இம்மரங்கள் நீர்த்துறைகளில் வளரக் கூடியவையாகும்.[219] மருத மலர் சிவந்த நிறமுடையது. மருத மலர்க் கொத்துகள் இளஞ்செந்நிறம் ஊட்டப்பெற்ற சந்தனக்குழம்பு போன்றிருந்தது

என்று திருமுருகாற்றுப்படை கூறுகிறது.[220] மருத மர அரும்பின் புற இதழ் நீல நிறமுடையது.[221] மருத மரம் செடி நூலில் ‘Lagerstroemia Flos - Regina’ என்றழைக்கப்படும் என்பர் பி.எல்.சாமி.[222] மருதமரப் பொந்துகளில் பாம்புகள் தங்கும்.[223]

**மா**

மாமரம் சங்க இலக்கியத்தில் ‘கொக்கு’ எனவும் நெடிய மரமாக வளர்வது எனவும் அறியமுடிகிறது.[224] கீழ்நோக்கிய மலர்க்கொத்து உடையது மாமரம்.[225] இதன் கனிகள் இனிமையானவை.[226] முக்கனிகளுள் ஒன்றாகச் சிறப்பிக்கப்பெறுவது. வண்டு துளைத்த மாங்கொட்டை கறுப்பாக இருக்கும். வண்டாடிய மாம்பழம் மிக்க சுவையுடையதாக இருக்கும்.[227]

**மிளகு**

சேர நாட்டின் செல்வங்களில் தலைசிறந்தது மிளகாகும். மிளகுக் கொடி மலையில் வளர்வது;[228] அது பலா மரத்தில் படரும்.[229] மிளகு கரிய கொடியையும் பசுமையான காய்களையும் உடையது.[230] மிளகு கொத்தாகக் காய்க்கும்.[231] மிளகு வெளிநாடுகளுக்கு நம் நாட்டிலிருந்து கப்பல்களில் ஏற்றுமதி செய்யப்பெற்றது.

**முஞ்ஞை**

இது முன்னைக் கொடி என்று வழங்கப்பெறுகிறது. இந்த முன்னைக் கீரை பசு முன்னை, எருமை முன்னை என இருவகைப்படும் என்பர் அ. மாணிக்கனார்.[232] இதன் கீரை குறுகிய மணத்தைக் கொண்டது. இதன் இலைகளை ஆடுகள் மேயும்.[233] முயல்கள் கறிக்கும்.[234]

**முருக்க மரம்**

இது மருத நிலத்தைச் சார்ந்தது. முருக்கமரம் தீயைப் போன்ற சிவந்த பூக்களை உடையது.[235]

**முல்லை**

முல்லை தொற்றி ஏறும் ஒரு செடியாகும். இஃது இயற்கையில் குறுங்காடுகளிலும் காடு சார்ந்த வெளிகளிலும் வளர்கிறது என்பர் பி.எல்.சாமி.[236] மேலும், அவர் முல்லை ஒரு கொடி என்று சங்க நூல்களில் கூறப்பட்டிருக்க செடி நூலில் தவழும் செடியாகவே (Climbing Shrub) கூறப்படுகிறது என்கிறார்.[237] முல்லை நீல நிறக் கொடியுடையது.[238] முல்லை கார்காலத்தில் மலரும். அதன் மலர் வெண்மையானது.[239] முல்லை மலரைக் கற்புக்கு அறிகுறியாகத் தமிழர் கொண்டனர்.[240] இது 'நறுவீமுல்லை' எனப்படுகிறது.[241] செடி நூலில் முல்லைச் செடியை 'Jasminum Auriculatum' என்று வழங்குவர்.[242]

**மூங்கில்**

அமை, கழை, பணை, உந்தூழ், வெதிர், வேய், வேரல் என்னும் சொற்கள் சங்க நூல்களில் மூங்கிலைக் குறிப்பிடுகின்றன என்பர் இராம. குருநாதன்.[243] மூங்கில் மலைப்பகுதியில் வளரும்[244] மேகக் கூட்டங்கள் தவழுமாறு மூங்கில்கள் வளர்ந்தன.[245] மூங்கில் நெல் தோரை எனப்படும்.[246] பெருமூங்கிலின் நெல் குலையாய்த் திகழும்[247] மழை பெய்யாவிடில் மூங்கில் பசையற்று உலர்ந்துவிடும்[248] சிறிய கதிர்களையுடையது மூங்கில் நெல்.[249]

**வயலை**

இதனை இக்காலத்தில் 'வசலைக்கொடி' என்றும் 'பசலைக் கொடி' என்றும் வழங்குகின்றனர். வயலைக் கொடியைப் பெண்ணின் இடைக்கு உவமை கூறுவர்.[250]

**வரகு**

இது முல்லை நிலத்தில் வளரக்கூடிய தானிய வகையாகும். வரகு தழைத்து வளரும். அதன் தோகைகளில் எலிகள் மறைந்து கொள்வதாக

மருத்துவன் தாமோதரனார் கூறுவார்.[251] வரகின்தாளும் அதன் கதிரும் கரியநிறமுடையன.[252] இது கவைத்த கதிர்களையுடையது.[253] இது 'குறுந்தாள் வரகு' என்று சுட்டப்பெறுகிறது.[254] பணியாத பகையரசரின் மருதநிலம் வரகு விளையும் வன்னிலமாக ஆகிவிடும்[255] என்று பதிற்றுப்பத்துக் கூறுகிறது. தருக்கம் செய்வோரின் கைவிரல் போல் நீட்டிய கதிர்களையுடையது வரகு.[256]

**வழை**

வழை, 'சரபுன்னை' எனவும் 'புன்னாகம்' எனவும் வழங்கப் படுவதுண்டு என்பர் இராம. குருநாதன்.[257] இம்மரங்கள் காட்டில்[258] மலைச் சாரலில் வளரக் கூடியவை.[259]

**வள்ளை**

இது மருத நிலத்தில் நீரின் மேல் படரும் கொடியாகும்.[260] இது கீரையாகப் பயன்படும்.[261] மகளிர் நெல் வயலிலுள்ள வள்ளை மலரைப் பறிப்பர்.[262]

**வன்னி**

இம் மரம் சுடுகாட்டில் இருக்கும். அங்குச் சுடுகாட்டு நோன்பிகள் வழிபாடு செய்வர்.[263]

**வாழை**

வாழையானது மலையில் அடர்ந்து செழிக்கக் கூடியதாகும். வாழையின் கரிய கொழுமுகை துறுகல்லைத் தொட்டுக் கொண்டிருக்கும் தோற்றம், யானை முகத்தை வேல் தாக்குவது போல் இருப்பதாகப் பெருங்கௌசிகனார் கூறுகிறார்.[264] முக்கனிகளுள் ஒன்றாக இதன் கனிகள் சிறப்பிக்கப்பெறும்.

**விடத்தேரை**

பகைவர் நாடு கெடும்போது வளரக்கூடியது விடத்தேரை மரமாகும். இது முருக்கியது போன்ற காயையுடையது.[265]

**வெட்சி**

இது காட்டில் வளரக்கூடிய செடியாகும்.[266] வெட்சி மலர் சிறிய இதழ்களையும் சிவந்த காம்பையும் உடையது.[267] ஆநிரை கவரச் செல்லும் மறவர் இப்பூவினை அணிந்துசெல்வர்.

**வேங்கை**

குறிஞ்சி நில மரமாகிய வேங்கை வெப்பமுடைய மேட்டுநிலத்தில் வளரும்.[268] வேங்கை மரமும் கிளைகளும் கரியநிறமுடையன.[269] வேங்கை நறுமணமுடைய கொத்துக் கொத்தான மலர்களையுடையது.[270] இந்த மலரின் புற இதழ் கரிய நிறமுடையது.[271] வேங்கை மலர் பொன்னிறம் கொண்டது என்று பெருங்கௌசிகனாரும்[272] மஞ்சள் நிறமுடையது என்று கபிலரும்[273] கூறுவர். வேங்கை மலர் கருங்கல்லின் மீது பரவிக் கிடக்கும் தோற்றம் புலியின் உடல் போன்று காணப்பட்டது.[274] 'புலி புலி' என்று மகளிர் செய்யும் ஆரவாரத்தால் வேங்கைச் சினை தாழ்ந்து கொடுக்கும் என்னும் பண்டைத் தமிழர்களின் நம்பிக்கை மட்டுமன்று.[275] அஃது அறிவியலின்பாற்பட்ட உண்மையாகும் என்பர். ஒலியலைகள் உயிரணுக்களில் உள்ள உயிர்த்தாதுவை உறுத்தும். இதனால் உயிர்த்தாது உந்தப்பெற்றுத் தம்மியல்பு மாறித் தண்டு வளைதலும் வளர்ச்சி பெருகுதலும் கூடும் என்று கு. சீனிவாசன் குறிப்பிடுவார்.[276] கருங்கல்லின் மீது காணப்படும் வேங்கைமலர் புலிபோன்று இருக்க, அதனைக் கண்டு யானை அஞ்ச, அஞ்சச் செய்த காரணத்தால் வெகுண்ட யானை, அம்மரத்தின் சினையை முறித்து, வெற்றிக்கு அறிகுறியாகத் தன் தலைமீது சூடிக் கொண்டதாகச் **'சுடர் வீ வேங்கை'** என்ற பதிற்றுப்பத்துத் தலைப்பால் அறியமுடிகிறது.[277]

**வேலமரம்**

புன்செய் நிலத்தில் உள்ளதாகும். இது பொரிந்த அடிப்பகுதியையும் சிறிய இலைகளையும் கொண்டது.[278] இது வெண்மையான முட்களையுடையது.[279] வேல மரத்தில் சிலந்தி பின்னிய வலையைக் கண்ட புறாக்கள் தனக்கு விரிக்கப்பட்ட வலை என்று அஞ்சி ஓடின.[280] பகைவர் வேல முள்ளால் காட்டு வாயிலை அடைந்தனர்.[281]

**வேழக்கோல்**

மருத நிலத்தின்கண் வளரும் ஒருவகைப் புல்லாகும்.[282] இதனைக் கொறுக்கச்சி, பேய்க் கருப்பந்தட்டை, மூங்கில்கோல் என்பர்.[283]

**வேளை**

வேளை பாழான பகைவர் வீட்டின் கூரையில் படரும்.[284] வேளைக் கொடி வெண்மையான மலரையுடையது.[285] வறுமையில் உழல்வோரும் கைமை நோன்பு நோற்போரும் வேளைக்கீரையை உணவாகக் கொண்டனர்.[286]

**பிற பயிரினங்கள்**

**உவலைக்** கண்ணி என்பது தழை கலந்து கட்டப்பட்ட கண்ணியாகும்.[287] **ஒடு** என்னும் மரத்தின் வலிய கழிகளால் வீட்டிற்குப் படல் அமைக்கப்பெற்றது.[288] பக்க மலையில் **மலை எருக்குகள்** செறிந்திருந்தன.[289] **கழல் கொடி** கழற்சிக்காய் வடிவாகவும் கிண்ணி வடிவாகவுமுடையதாகவும் அரும்புகளைக் கொண்டது. கழல் மலரை உரிமை மகளிர் அணிந்தனர்.[290] **தெறுழ்,** களிறு முகத்தில் உள்ள புள்ளிகளைப்போல மலரும்.[291] தெறுழ்கொடி காட்டில் வளர்வது; கார்காலத்தில் மலர்வது. இதனைப் **'புளிமா'** எனவும் உரைப்பர் என்பர் அ. மாணிக்கனார்.[292] காட்டில் **தேறு என்ற தேற்றாமரம்** வளரும்.[293] **தொர்பழம்** களாப்பழம் போல்

புளிப்புடையது.[294] **தொய்யற்கொடியின்** மலர் நெய்தல் மலர்போல் நீலநிறமுடையது.[295]

மருதநில நீரில் நீலப்பூ மலரும்.[296] திறைப் பொருளாக நுகம் போன்ற **நூறைக் கிழங்கு** அளிக்கப்பெற்றதை அறிய முடிகிறது.[297] முல்லை நிலத்தில் உள்ள **நொய்யமரம்** வயிரம் வாய்க்காத எளிதில் தீப்பற்றும் இயல்புடையது.[298]

**பச்சைப்பாக்கு** இலக்கியத்தில் குரும்பைக்காய் என்று வழங்கபெறுகிறது.[299] **பசும்பிடி** (பச்சிலைப்பூ) மனோரஞ்சிதப்பூ என்று வழங்கப்பெறுகிறது.[300] **தட்டான்கோரை** என்று வழங்கப்பெறும் பஞ்சாய்க்கோரை நாரினால் சிறுவர் முள்ளி மலரைக் கட்டித் தலையில் சூடிக்கொள்வர்.[301] மரத்திலிருந்து பளிங்கு (கற்பூரம்) உதிர்ந்தது.[302] சிறுகொடியில் **பாகற்காய்** காய்க்கும்.[303] பருத்தி வேலியாக இருந்துள்ளது.[304] **பாதிரி மரம்** பருத்த அடியையும் பசுமையான இலைகளையும் கொண்டது. இம்மரம் வேனிற்காலத்தில் இலைகளை உதிர்க்கும். பாதிரி மலரின் உட்பகுதி செந்நிறமாக உள்ளது.[305]

**பித்திகை** மாரிக்காலத்தில் மலரும் என்று இம்மலரால் பெயர்பெற்ற மாரிப்பித்தியார் கூறுவார்.[306] பனையோலை வேயப்பட்ட பாழான கூரை வீடுகளின் மீது **பீர்க்கங்கொடி** படர்ந்தது.[307] **பூளை**, நீண்ட கொத்தான மலர்கலளயுடையது.[308]

**நெருஞ்சி**[309], **மாதுளம்**[310], **முசுண்டை**[311], **முள்ளி**[312], **யாமரம்**[313], **வாகை**[314], **விளாம்பழம்**[315], **வெண் கூதாளம்**[316], **(வெண்டாளி) வெற்றிலை**[317], பாண்டியர் அடையாளப்பூவினை வேப்பம்பூ **வேம்பு**[318] முதலிய பயிரினங்களைப் புலவர்கள் தம் பாடல்களில் குறிப்பிட்டுள்ளனர்.

உலகத்தில் பல இனத்தாரும் பல சமயத்தாரும் தாவரத்திடம் ஓரளவு அன்பும் மரியாதையும் வைத்திருக்கிறார்கள் என்பது உண்மைதான்.

ஆனாலும் இந்திய மக்களைப் போல் அதிலும் குறிப்பாகத் தமிழ் மக்களைப் போலத் தாவரத்திடம் பக்தியும் பேரன்பும் வைத்தவர்கள் யாரும் இல்லை என்பர் ல. சண்முகசுந்தரம்.[319]

## உயிரினம்

நீரில் வாழும் மீன்கள் நண்டு முதலியனவும், ஊர்வனவும், பறப்பனவும் விலங்குகளும் ஆகிய இவற்றின் தொகுதிகள் உயிரினம் என்ற சொல்லால் வழங்கப்பெறுகிறது. ஐந்திணைகளில் குறிஞ்சியிலும் முல்லையிலும் வாழும் உயிர்களே மிகப்பெரிதும் வருணிக்கப்பெற்றுள்ளன. இந்நிலங்களில் வாழும் விலங்கினங்கள் பற்றிய ஓவியங்களில்தான் புலமை நெஞ்சத்திற்கும் விருந்தாகிய சுவையினையும் விரிவான நுணுக்கங்களையும் காண முடிகிறது என அறிஞர் கூறுவர்.[320]

சங்கப் புறப்பாடல்களை நோக்குவோர்க்கு வருடையின் பாய்ச்சல், யானையின் போர், குரங்கின் குறும்பு, கேழலின் தறுகண்மை முதலிய காட்சிகள் வியப்புத் தருவனவாகும். பண்டைத் தமிழர் மலைமீதேறி யானைப் போரினைக் காண்பது வழக்கம்.[321] ஆனேறும் மரையானும் பொருதுகின்ற காட்சியினைப் பெருங்கௌசிகனார் குறிப்பிட்டுள்ளார்.[322] உயிரினத்தில் சிறிய வடிவினதான எறும்பு முதல் உருவில் மிகப்பெரிய வடிவினதான யானை, திமிங்கிலம் வரை சங்கப் புறப்பாடல்களில் விரிவாக உரைக்கப்படுகின்றன.

## நீர்வாழ்வன

உயிரினங்களில் முதலில் நீர் வாழ்வன பற்றிக் கூறப்படுகின்றது. மீனினம் நீரில் வாழும்.[323] நீரின் உள்ளே மீன்கள் உலவும்.[324]

**அயிரை**

இப்பெயர் மீனையும் மலையையும் குறிக்கிறது. பரதவர் அயிரை மீனை **'அசரை'** என்பர். இம்மீன் பெரும்பாலும் நீர்மட்டத்திற்குச் சிறிது கீழே திரியும். இந்நிலையினின்று சிறிது மாறுபட்டால் கொக்குப் பார்வைக்குப் பட்டு, அதனால் கவரப்படும். அயிரை மீன் நீரை எதிர்த்துச் செல்லும்.[325]

**ஆமை**

இது இலக்கியத்தில் **'யாமை'** என்று வழங்கப்பெறுகிறது. ஆமை கடலிலும் கழியிலும் நன்னீர் நிலைகளிலும் வாழ்வது. கடல்யாமையும், நன்னீர் யாமையும் வெவ்வேறானவை என்பர் தி. முத்துக்கண்ணப்பன்.[326] பன்றி தோண்டிய கரிய சேற்றில் ஆமை புலால் நாற்றமுடைய முட்டைகளை இடும்.[327] ஆமை மல்லாந்திருப்பது தடாரிப் பறையின் முகம்போல் விளங்குகிறது.[328]

**ஆரல்மீன்**

**'ஆரா'** என்று வழங்கப்பெறுகிறது. ஆரல் மீன் கூர்மையான மூக்கினையுடையது. சேற்றில் ஒளிந்து வாழக்கூடியது.[329] இம்மீன் வயல்களில் நீரில் உலவும்.[330] ஆமை இறைச்சி வெறுத்துப் போகும்படி ஆரல் மீனின் இறைச்சியை உண்டனர்.[331]

**கயல்**

புலால் நாற்றமுடைய கயல்மீன் வேல் போன்று விளங்கியது.[332]

**கெடிறு**

கழிகளில் 'கெடிறு' என்ற ஒரு வகை மீன்கள் கூட்டங்கூட்டமாக வாழும். இப்பொழுது மக்கள் அவற்றைக் **'கெளுத்தி'** என்று வழங்குகின்றனர் என்பர் தி. முத்துக் கண்ணப்பன்.[333] விழா நாள்கள்

அல்லவேனும் உழவரின் உண்கலத்தில் கெடிற்று மீன்கறி நிறைந்திருக்கும்.[334]

**சங்கு**

இவை கடலிலும், கழி, ஏரி, ஆறு, குளங்களிலும் வாழும் உயிரினம். சங்கு திருகலான ஓட்டுக் கூடுள்ள உயிர் என்பார் தி. முத்துக் கண்ணப்பன்.[335] இது 'வளை' என்றும் வழங்கப்பெறுகிறது. 'சங்குகளில் இடம்புரி, வலம்புரி, சலஞ்சலம், பாஞ்ச சன்னியம்' எனப் பலவகையுண்டு. இவற்றில் வலம்புரிச் சங்கே விசேடமானது என்கிறது அபிதான சிந்தாமணி.[336] வலம்புரிச் சங்கு குறித்துப் புறநானூறு சுட்டுகிறது.[337]

சங்கு கடல் பரப்பில் உலவும்[338] சங்கு வெண்மையானது; ஒலிக்கக் கூடியது.[339] சங்கைக் கீறி அறுத்து வளையல் செய்வர்.[340] சங்கினைச் சுட்டுச் சுண்ணாம்பு உண்டாக்குவர்.[341]

**சுறா**

நெய்தல் நில விலங்கு சுறா என்று வீரசோழியம் கூறுகிறது.[342] இது கடலில் வாழும் மீனினங்களில் சிறப்பானது. சிற்சில சமயங்களில் ஆறுகளிலும் கழிகளிலும் காணப்படுவதுண்டு. சிங்கம் காட்டில் புலி, ஓநாய் முதலிய விலங்குகளை வேட்டையாடிக் கொன்று தின்று திரிவது போலச் சுறாமீன் கடலில் வாழும் உயிரினங்களைப் பிடித்துத் தின்னும்.[343] சங்கப் பாடல்கள் பலவற்றுள் 'வாள்சுறா' குறிப்பிடப்படுகிறது. கோட்டு மீன், கோட்சுறா, வாள்வாய்ச் சுறா, எறி சுறா எனக் குறிப்பிடப்படுவது இச்சுறாவையேயாம் என்பார் தி. முத்துக் கண்ணப்பன்.[344] நெய்தல் நில மக்கள் சுறா மீனின் இறைச்சியை உண்டனர்.[345] பி.எல்.சாமி திமிங்கிலத்தைப் 'பெருமீன்' என்பார்.[346] ஆனால் தி. முத்துக் கண்ணப்பன் பெருமீன் என்பது சுறாமீனே என நிறுவியுள்ளார்.[347] சுறாமீன் மிகவும் வன்மை வாய்ந்துள்ளதால் இதனை 'வயமீன்' என்றனர்.[348]

பனைமீன் என்ற ஒருவகைப் பெருமீனும் உண்டு. இது 'யானைமீன்' என்று வழங்கப்படுகிறது. இது திமிங்கலத்தினும் சற்று உருவில் சிறியது. இப்பனை மீன் பற்றி மதுரைக் காஞ்சி குறிப்பிடுகிறது.[349] இதனை மீனவர் 'பனை வாயன்' என்பர்.

## நண்டு

இலக்கியங்களில் நண்டு என்பது **'அலவன்'** என்றும் **'ஞெண்டு'** என்றும் வழங்கப்பெறுகிறது. நண்டு என்ற சொல் தொல்காப்பியத்தில் கையாளப்பட்டுள்ளது. தொல்காப்பியர் **'நண்டும் தும்பியும் நான்கறிவினவே'** என்று குறிப்பிடுகிறார்.[350] கடலோர மணற்புறத்தே வாழும் 'அலவன்' கடல் நண்டென்றும், மருதநிலச் சேற்றுப்புறத்தில் வாழ்பவை 'கள்வன்' என்றும் கழி நண்டென்றும் வழங்க இடமுண்டு என்பார் ச. பரிமளா.[351] நண்டுக்குப் பக்கவாட்டில் பக்கத்துக்கு ஐந்தாகப் பத்து வளைந்த கால்கள் உண்டு. ஆகவே 'கவைத்தாள் அலவன்' என்கிறது சிறுபாணாற்றுப்படை.[352] நண்டின் கண்கள் சிறியவை. அவை யாழ்ப் பத்தரை இணைத்தற்குத் திறந்த துளையை மறைக்க முடுக்கும் ஆணிகளைப் போன்றிருந்தன[353] என்று உவமை கூறிய புலவரின் நுண்ணறிவு சிறப்புடையது. நண்டுகள் கடற்பரப்பினில் விளையாடி மணலில் சுவடுகள் ஏற்படுத்தும்.[354]

## முத்து

தமிழக முத்து சங்க காலம்தொட்டுச் சிறந்து விளங்குகிறது. கடலில் உள்ள முத்துச் சிப்பியிலிருந்து முத்து கிடைக்கிறது. "கடலிலுள்ள முத்துச் சிப்பியினுள் ஒரு மணலோ, வேறு உறுத்தும் பொருளோ புகுந்தால் அப்போது அது தன் புறத்தோல் அடுக்காகிய எப்பிதிலியம் என்னும் படலத்தால் அதனைப் பொதிக்கிறது. அந்தப் பையினுள் பிராணி சுரக்கும் நீர் மெல்லிய அடுக்காக வந்து சேர்ந்த பொருளைப் பொதிகிறது. முற்றிலும் நன்கு பொதியப்பெற்ற பொருள்தான் முத்து" என்கிறது கலைக் களஞ்சியம்.[355]

மதுரைக்காஞ்சி **'முழங்குகடல் தந்த விளங்கு கதிர்முத்தம்'** என்று குறிப்பிடுகிறது.[356] சுடர்விடும் முத்தங்களையும் பவளக் கொடிகளையும் நெய்தல்நில மக்கள் வாரிக் குவித்தனர்.[357] கொடுமணம், பந்தர் என்ற ஊர்களில் தென்கடல் தந்த முத்தங்கள் திரண்டு கிடந்தன.[358] உமட்டியர் தம் புதல்வருக்குக் கிளிஞ்சல்களில் நன்முத்தங்களைப் பெய்து கிலுகிலுப்பையாக அளித்தனர்.[359] முத்து வெண்மையானது.[360]

**முதலை**

கராம், இடங்கர் எனச் சங்க நூல்களில் முதலை கூறப்பெற்றுள்ளது.[361] முதலை வளைந்த கால்களையுடையது. இரையைத் தேடித் திரியக் கூடியது.[362] முதலைகள் அகழியில் வளர்க்கப்பட்டன.[363] வலிய களிற்றையும் நீரில் இழுத்துச் செல்லும் ஆற்றல் மிக்கது முதலை.[364]

**வரால் மீன்**

நன்னீரில் வாழும் தன்மை கொண்ட இவை பெரிய ஆறுகளிலும், ஏரிகளிலும், குளங்களிலும், ஓடைகளிலும் பெருமளவில் காணப்படுகின்றன. வரால் மீன்கள் கருப்பு, பழுப்பு, சாம்பல் ஆகிய வண்ணம் கொண்டிருக்கின்றன.[365]

இக்குடும்ப மீன்கள் தற்போது விரால், பூவிரால், முரல், சேற்றுவிரால், குறவை முதலிய பல பெயர்களிலும் அழைக்கப்படுகின்றன. கருப்பு வரால் பற்றிப் புறநானூறு கூறுகிறது.[366] சினை முதிர்ந்த வரால் மீன் பனங்குருத்துப் போன்று விளங்கியது.[367] வரால் மீன் செந்நிறக் கண்களையுடையது. அது யானையின் துதிக்கை போன்று தோற்றமளிக்கும்.[368]

**வாளை**

வாளை மீன்கள் பெரும்பாலும் கூட்டம் கூட்டமாக வாழும் இயல்பின. இவை நீரின் ஆழத்தில் காணப்பட்டாலும் அடிக்கடி பெருங்கூட்டமாகக் கடலோரத்திற்கு வருகின்றன. வாளை மீன்கள் கழனி, பொய்கை நீரிலும் வாழக்கூடியவை.[369] வாளை மீனின் பிடரியும் கழுத்தும் பெரியவை.[370] வாளை மீனின் வாய் ஏனைய மீனின் வாயினும் பெரியதாகவும் பிளவு பட்டதாகவும் உள்ளது.[371] இதனை நெடுவாளை எனப் புறநானூறு சுட்டுகிறது.[372] நீரில் தாழ்ந்து காணப்படும் காஞ்சியின் பூக்களை வாளை மீன்கள் உண்டன.[373]

## ஊர்வன

பாம்பு, உடும்பு, எலி, ஈயல், சிதல், இந்திரக்கோபப் பூச்சி முதலியவற்றை ஊர்வன என்பார் செ. வேங்கடராமச் செட்டியார்.[374]

**அணில்**

முதுகில் வரிகளையுடையது அணில்.[375]

**இந்திரக்கோபப் பூச்சி**

இது செந்நிறமுடையது.[376] முல்லை நிலத்தில் வழி நெடுகிலும் ஊர்ந்து பரவக்கூடியது.[377]

**உடும்பு**

உடும்பு, வளைந்த குறுகிய கால்களையுடையது.[378] இது சுக்கான் கற்களில் தவழ்ந்து செல்லும்.[379] வேட்டுவச் சிறுவர் நெடுந்தூரம் செல்லாமல் மடுக்கரையில் உடும்பினைப் பிடித்து வந்துள்ளனர். உடும்பின் இறைச்சியைப் பாணர்க்கு விருந்தளித்தனர்.[380]

**எலி**

எலியில் வெள்ளெலி, சுண்டெலி முதலிய வகைகள் உண்டு. வரகுக்கொல்லை நிலத்தின் வரப்பில் வளையுண்டாக்கி அதில் சுண்டெலி வாழும். ஆதலால் அது 'கோட்டெலி' எனப்படுகிறது. அது, கோடைக் காலத்தில் மலர்கின்ற கோங்கின் மலரில் உள்ள கொட்டை போன்ற வளைவான அழகான செவியுடையது.[381] கருப்பு நிறமுடைய எலி, 'கருப்பை' எனப்படும். அவ்வெலி அறுத்தெடுத்த வரகின் வயல்வெளிகளில் இருக்கும்.[382] அவ்வெலியைப் பிடிப்பதற்குக் குறும்பூழ் பறவை அதனைத் துரத்தும்.[383] வேட்டுவச் சிறுவர் ஊகம்புல்லை நாணாகவும், வேல முள்ளை அம்பாகவும் கொண்டு காட்டெலியைக் குறிபார்ப்பர்.[384]

**கீரி**

சிறிய கண்களையுடையது. பாம்பின் வலியைக் கெடுக்கக் கூடியது.[385]

**சிதல்**

இது 'கறையான்' என்று வழங்கப்பெறும். சிறிய பல கறையான் உழைத்துப் புற்றினை உண்டாக்கும். அதில் ஈயல் வாழும்.[386]

**சிலந்தி**

இது கருவேலமரக் கிளைகளில் வலை பின்னியது. அவ்விழை முத்துகளைக் கோர்க்கும் நார்போல் விளங்கியது.[387]

**பல்லி**

வண்டிச் சக்கரத்தின் ஆரத்தில் சிறு வெண்பல்லி இருந்ததாகப் புறநானூறு கூறுகிறது.[388]

**பாம்பு**

அரவு, பாந்தள், மாசுணம்[389] என்னும் சொற்கள் பாம்பினைக் குறிப்பன. பாம்பு இரவில் இரை தேடித் திரியும்; புற்றுகளில் வாழும்; மருத

மரப்பொந்துகளிலும் வாழும்.[390] பாம்பு நஞ்சுடைய பையுடன் துளையுள்ள பற்களைக் கொண்டது; நெட்டுயிர்ப்புடன் கண்டார்க்கு அச்சத்தைத் தோற்றுவிப்பது.[391] பாம்புகள் மாணிக்க மணிகளை உமிழும்.[392]

**முயல்**

முயல், சிறு புதருக்குள் துள்ளி விளையாடும். எலியும் பிறவும் தோண்டிய வளைகளில் சிறு முயல்கள் வாழும். முயல் பெரிய தலையும் அதில் நீண்ட செவியும் கரிய பிடரியும் கொண்டது. அதன் கண் நீர்க் குமிழி போன்றும் கொட்டை போன்றும் விளங்கும்.[393] அச்சிறுமுயலின் கண் பெரியது.[394] நீர்நிலையிலுள்ள சம்பங்கோரையின் கதிரினைப் போன்ற தூய மயிர் செறிந்த சிறிய கால்களைக் கொண்டது.[395] தாளி மரத்தடியில் நீளப் படர்ந்திருக்கும்; முன்னைக் கொடியை முயல்கள் மேயும்.[396]

## பறப்பன

மயில், குயில், கின்னரம், அன்னம், கிளி, புறா, குறும்பூழ் கோழிச் சேவல், காக்கை, நாரை, யானையங் குருகு, தேனீ, ஈயல் முதலியவற்றைப் பறவைகள் என்பார் செ. வேங்கடராமச் செட்டியார்.[397] அன்றில், மகன்றில் ஆகியவை நெய்தல் நிலப் பறவைகளாகும். இவ்விரண்டு பறவைகளும் தலைவன் தலைவியரின் இணைபிரியாத அகவொழுக்கத்தைக் கூற, அகப்பாடல்களில் கையாளப்பெறுகின்றன. ஆகவே, இவ்விரண்டு பறவைகளும் சங்கப் புறப்பாடல்களில் பயின்று வரவில்லை என்பது குறிப்பிடத்தக்கதாகும்.

**அன்னம்**

அன்னம் வனப்பும் கம்பீரமும் வாய்ந்த பெரிய நீர்ப்பறவை; ஆணும் பெண்ணும் ஒரே மாதிரி இருக்கும் என்று கலைக்களஞ்சியம் கூறுகிறது.[398] இது நெய்தலில் காணப்படும் பறவை; வெண்ணிறமானது; வானில் மிக உயரத்தில் பறக்கக் கூடியது என்பார் தி. முத்துக் கண்ணப்பன்.[399]

அன்னப்பறவையின் கால் செந்நிறமாக இருக்கும்; ஞாயிற்று மண்டிலத்தைத் தொட்டுவிடுவதைப் போன்று அத்துணை உயரத்தில் பறக்கும்.[400] அன்னச் சேவல் அயிரை மீனை உண்ணும்.[401] இப்பறவை இனம் இப்போது காணப்பெறுவது இல்லை.

**ஊர்க்குருவி**

இது வீட்டின் இறவாணத்தில் வாழும். ஆண் குருவி கரிய கழுத்தையுடையது. இது பாணரின் யாழ் நரம்புகளாலும் சிங்கத்தின் மயிராலும் கூடுகட்டும்.[402]

**எருவை**

இது பிணந்தின்னும் கழுகாகும். இக்கழுகு சிவந்த செவிகளையும் பெரிய சிறகுகளையும் உடையது.[403] ஆண் கழுகுக்குக் கொண்டை உண்டு. பெண் கழுகு புள்ளி பொருந்திய கழுத்தையும் புல்லிய நிறத்தையும் உடையது. எருவை தன் பெடையுடன் கூடி ஊன் உண்ணும்.[404] இப்பறவைகள் பிணம் தின்னப் போர்க்களத்திற்குக் கூட்டமாகச் செல்லும்.[405]

**எழால்**

இது புல்லூறு என்னும் பறவையாகும். இக்காலத்தார் இதனை 'இராசாளி' என்று அழைப்பர். இது ஒருவகைக் கழுகாகும். இதில் ஆண் பறவைக்குக் கொண்டையுண்டு.[406]

**கருடன்**

இது பல வரிகளைக் கொண்ட வளைந்த சிறகுகளையுடையது. இது திருமாலின் கொடியில் விளங்கக் கூடியது.[407]

**கம்புட்கோழி**

இது மருத நில நீர்ப் பறவையாகும். இது நீர்த்துறைப் புதர்களில் முட்டையிடும். இது 'சப்பங்கோழி' என்றழைக்கப்பெறும்.[408]

**காக்கை**

காக்கையில் சாம்பல் நிறக் கழுத்துக் கொண்ட 'வீட்டுக் காக்கை', கறுப்பான 'அண்டங்காக்கை' என இருவகை உண்டு. நீண்ட ஆயுளுள்ள காகங்களுக்கு அனுபவ புத்தியும் ஒருவிதப் பகுத்தறிவும் தந்திரமும் இருப்பது கவனிக்கத்தக்கது. இவை நல்லவிதமாய்க் கூவி, அழைப்பு, எச்சரிப்பு முதலிய கருத்துகளைத் தமக்குள் ஒருவாறு குறிப்பிட்டுக் கொள்ளும் என்று கலைக்களஞ்சியம் கூறுகிறது.[409] காக்கை ஒலி எழுப்பிக் கொண்டிருக்கும் என்பதை 'வாய்வல் காக்கை'[410] என்பதனாலும் கானகத்தில் வாழும் என்பதைக் 'கானக்காக்கை'[411] என்பதனாலும் அறியமுடிகிறது. பசித்தால் உண்பதற்கு ஆமைப் பார்ப்பைப் பாதுகாத்து வைத்திருக்கும்.[412] காக்கைகளுக்குக் குருதி கலந்த பலிச்சோறு அளித்தனர்.[413]

**கானாங்கோழி**

இது 'காட்டுக்கோழி' எனப்பெறுகிறது. இது ஒரு நீர்ப் பறவையாகும். இதன் சிறகுகள் புள்ளிகளைப் பெற்றிருக்கும் என்று கலைக்களஞ்சியம் கூறுகிறது.[414] இது பல புள்ளிகளைப் பெற்றிருக்கும்.[415] மனைக் கோழியின் குரலுக்குக் காட்டுக்கோழி பதில் குரல் எழுப்பும்.[416]

**கிளி**

கிளி வளைந்த வாயையுடையது.[417] கிளி வேதத்தின் ஓசையையும் விளம்பும்.[418] மகளிர் கிளிகளை ஓட்டினர்.[419]

**கின்னரம்**

இனிய தாளத்திற்கு ஏற்பக் கின்னரப்புள் பாடும். இது இசையின் சிறப்பு இழிவுகளை அறியவல்ல பறவையாகும்.[420]

## குயில்

வசந்த காலம் வருகையில் குயில்கள் பரபரப்புடன் கூவும். பளப்பளப்பாக முழுக்கறுப்பாய் இருக்கும். பெண்குயில் கபிலக் கறுப்பு நிறத்தில் வெண்புள்ளிகளைப் பெற்றிருக்கும். குயில் கூடு கட்டி முட்டைகளையிட்டு, அடைகாத்துக் குஞ்சு பொரித்து, வளர்க்கும் பொறுப்பை ஏற்றுக் கொள்வதில்லை. குயில் குஞ்சைப் பொரித்து வளர்க்கும் கடமை காகங்களையே சாரும்[421] என்று கலைக்களஞ்சியம் கூறுகிறது. குயிலின் வாய் அதிரல் முகைபோல விளங்கும்.[422] சோலைகளிலும் மாமரத்திலும் குயில்கள் கூவி வாழும்.[423]

## குறும்பூழ்

இது காடை, கவுதாரி என்று வழங்கப்பெறுகிறது. இது குறுகிய காலையும் கரிய கழுத்தையும் உடையது.[424] பண்டைக் காலத்தில் குறும்பூழ்ப் பறவைகளை வளர்த்து, அவற்றிற்குப் போர்ப் பயிற்சியை அளிப்பர். பின்னர் அவற்றைப் போரிட விடுத்துப், பார்த்து மகிழ்ந்தனர்.[425]

### கூகை

இது குடிஞை, பேராந்தை என்ற பெயர்களையுடையது. கோட்டான் என்று சுட்டப்பெறும் குரால், கூகை இனத்தைச் சார்ந்ததாயினும் கூகையும் கோட்டானும் வெவ்வேறானவையாகும்.[426] கூகை வெளியே பிதுங்கும் கண்ணையும்[427] பிளவுபட்ட வாயையும்[428] உடையது. ஆண் கூகை தலை உச்சியில் கொண்டையைக் கொண்டது.[429] கூகை வேறுபாடான குரலையும் கொடிய வாயையும் உடையது.[430]

மரப்பொந்தில் வாழும் கூகை 'சுட்டுக்குவி' என்று செத்தாரை அழைப்பது போலக் குழறியது.[431] அது துடி ஓசைபோன்று ஒலிக்கும்.[432] சிறுபறை ஒலி போல் ஆண் பெண் ஆந்தைகள் மாறி மாறி அழைத்துக்

கொண்டன.[433] ஆண் கூகை பசிய இறைச்சித் துண்டங்களை வைத்த இடத்தை மறந்துவிட, பெண் கூகை கவலை கொள்ளும்.[434]

**கொக்கு**

கொக்கு வெண்மையான நிறத்தையும் பசுமையான நிறங்கொண்ட கால்களையும் அகன்ற வாயினையுமுடையது; நீரில் உள்ள மீன்களை உண்ணும். ஐயவி கடுகினைப் போன்ற ஆரல் மீன் முட்டைகளையும் இறால் மீன் குஞ்சுகளையும் கொக்குத் தன் பார்ப்புக்குத் தரும்.[435]

> **"..... மடைத் தலையில்**
> **ஓடுமீன் ஓட உறுமீன் வருமளவும்**
> **வாடி இருக்குமாம் கொக்கு"[436]**

என்ற மூதுரைப் பாடலால் பெரிய மீன் வரும் வரையும் காத்திருந்து அதனைப் பிடித்துண்ணும் இயல்புடையது கொக்கு என்று அறியமுடிகிறது.

**கோழிச்சேவல்**

இது 'வாரணம்' என்றும் அழைக்கப்பெறும். புள்ளிகள் கொண்ட மயிரினை உடையது கோழிச்சேவல்.[437] முருக்கம் பூ போன்ற கொண்டையைக் கொண்டது.[438] இது விடியற் காலத்தில் கூவும்.[439] அவ்வொலியைக் கேட்டு மக்கள் துயிலெழுவர்.[440]

**சிரல்**

இது 'சிச்சிலிப் பறவை' என்று வழங்கப்படும். உ.வே.சா. அவர்கள் இதனை 'மீன் கொத்தி' என்பர்.[441] இது மருதநிலப் பறவையாகும். இது பொன்னிற வாயையும் நீல மணி போன்ற நிறத்தையும் கொண்டது என்பதைப் 'பொன்வாய் மணிச்சிரல்' என்ற தொடர் உணர்த்தும்.[442] அதன் கால்களில் வலிமையான நகங்கள் உண்டு.[443] மீன்கொத்திப் பறவை காஞ்சி மரக்கிளையில் அமர்ந்து குளத்தினைக் கூர்ந்து நோக்கி, உறுமீன்

வரும்வரை காத்திருந்து கயல் மீனைப் பிடித்துண்ணும்.[444] அது நீராடும் மகளிரின் மகரக் குழைகளை இரையெனக் கருதி எடுத்துச் செல்லும்.[445]

**சிள்வண்டு**

இது இலக்கியத்தில் ‘சிதடி’ என்றழைக்கப்பெறுகிறது. இச் சிள் வண்டுகள் வற்றிய உன்ன மரங்களிலிருந்தும் காடுகளிலிருந்தும் ஒலிக்கும்.[446]

**நாரை**

இது கொக்கினத்தில் பெரியது. இவ்வினத்தில் பல வேறுபாடுகள் உண்டு. இதற்குக் கழுத்தும், மூக்கும், காலும் மிக நீளம். உடல் சற்றுப் பருத்தது. காலும் மூக்கும் மஞ்சள் கலந்த செந்நிறம். உடம்பு வெண்மை முதலிய பல நிறம் என்று குறிப்பிடுகிறது அபிதானசிந்தாமணி.[447]

இது வெண்மையான நிறத்தையும்[448] நீண்ட கால்களையும்[449] செவ்வரிகளையும்[450] உடையது. நீர்நிலைகளிலும் கழனிகளிலும் உள்ள மீன்களை உண்ட நாரைகள் ஞாழல் மரங்களில் சென்று அமர்ந்தன.[451] நெற்போரில் சென்று உறங்கின.[452]

**புறா**

பொறித்தது போல் விளங்கும் புள்ளிகளையுடைய கழுத்தையும், அகன்ற முதுகையும்[453] சிவந்த கால்களையும்[454] உடையது புறா.

**மயில்**

இலக்கியங்களில் மயில், மஞ்ஞை[455], தோகை[456], பிணிமுகம்[457] என்ற பெயர்களில் குறிப்பிடப்பெறுகிறது. மயில் இடம்பெறாத சங்க இலக்கியம் எதுவுமே இல்லை என்பார் பாக்யவதி சங்கரலிங்கம்.[458] இது குறிஞ்சிநிலப் பறவையாகும். முருகக் கடவுளின் ஊர்தியாகவும் கொடியாகவும்

விளங்குகிறது. மயில், மலை[459], காடு[460], பழனம்[461] ஆகிய இடங்களில் வாழும். எனினும் இது குறிஞ்சி முல்லை நிலங்களில் உறைவது. மஞ்ஞை, நீல நிறத்தையும், உச்சிக் கொண்டையையும், நீண்ட தோகையையும் அரிய புள்ளிகளையும் கொண்டு திகழும்.[462] மயிலிறகுத் தண்டின் அடிப்பகுதி வெண்மையாய் இருக்கும்.[463] சோலைகளில் மயில்கள் ஆரவாரம் செய்யும்.[464] மயில் மடப்பமுடைய நடையையுடையது.[465] மயில் செந்நெற்களை உணவாகக் கொள்ளும்.[466] அது முழு நிலவைக் கண்டு மகிழ்ந்து ஆடும் என்பதை,

**“உச்சி நின்ற உவவுமதி கண்டு**
**கட்சி மஞ்ஞையின் சுரமுதல் சேர்ந்த”**[467]

என்ற புறநானூற்றுப் பாடலால் அறியலாம். அக இலக்கியங்களில் மயில் விறலியாக உவமிக்கப்பட, புற இலக்கியங்களில் விறலி மயிலாகக் கூறுப்படுகிறாள் என்பார் பாக்யவதி சங்கரலிங்கம்.[468]

**பிற பறவையினம்**

மீன்களை உண்டு வாழும் குருகு என்ற பறவை பற்றியும்[469] வளைந்த சிறகினையுடைய பருந்து பற்றியும்[470] பெரிய கழிகளில் மீன்களைப் பிடித்து உண்ணும் செறிந்த இறகுகளையுடைய நீர்ப்பறவையான புதா[471] (நாரை இனத்தைச் சேர்ந்தது) பற்றியும்[472] பொருவல் என்ற பறவை பற்றியும் சக்கரவாளப் பறவை என்றழைக்கப்பெறும் ‘பானையங்குருகு’[473] என்ற பறவை பற்றியும் அறிய முடிகிறது.

வண்டுகள் உருவில் சிறியனவெனினும், புலவர்கள் பார்வையில் விரிந்த காட்சி தருவதாக உள்ளன. வண்டு, சுரும்பு, தும்பி, மிஞிறு முதலியவை வண்டின் இனங்களாகும்.[474] தாமரையில் தேன் உண்ணும் வண்டு நீல நிறமுடனும் சிவந்த கண்களுடனும் விளங்கும்.[475] முல்லை மலரை நீலநிற வண்டு மொய்க்கும்.[476] வண்டின் ஒலி யாழிசை போன்றிருந்தது.[477]

மழைத்துளியை உணவாகக் கொள்ளும் 'வானம்பாடி' என்ற பறவை பற்றியும் புறநானூறு குறிப்பிட்டுள்ளது.[478] இதனைச் 'சாதகப்புள்' என்பர்.

## விலங்குகள்

### ஆடு

ஆடு வலிமையான தலையை உடையது.[479] செம்மறியாட்டின் முகம் வளைவாகவும் வெள்ளாட்டின் முகம் அவ்வாறின்றியும் இருக்கும்.[480] இடுமுள் வேலியில் உள்ள முன்னைக் கொடிக் கீரையை ஆடுகள் மேயும்.[481] தாய் ஆட்டின் சிறிய தலையுடைய குட்டியும் பால்உண்ணும்பொருட்டாகச் சுற்றித் திரியும்.[482]

### ஆனினம்

பசு சென்றதால் உண்டான வழியில் பாணன் சென்றான்[483] இளம்பெண்கள் துணங்கைக் கூத்தாட அவர்களின் தழையாடையிலிருந்து ஆம்பல் மலர்கள் உதிர, அவற்றை வளைந்த தலையுடைய முதிய பசுக்கள் உண்ணும்.[484]

ஆனேறு[485], மரையானேறு[486], கடமா[487], ஆமான்[488] ஆகியவை ஆண் இனத்தைச் சார்ந்தவையாகும். ஏறு ஆன் இனத்தில் எருதினைக் குறிக்கும். எருதின் முதுகில் கொண்டை (திமில்) இருக்கும்.[489] எருது குதிரையைவிட வேகமாகச் செல்லும்.[490] ஆனேற்றின் கழுத்தில் மணிகளைக் கட்டினர்.[491] வரகின் மீது கடா விட்டனர்.[492]

வளைந்ததும் சிவந்ததுமான கொம்புகளையுடையது காட்டுப்பசு என்றழைக்கப்படும் ஆமா.[493] இது நெல்லிக்கனிகளைத் தின்று விதைகளைத் துப்பிவிடும். துப்பிய விதைகள் வேட்டுவர் குடிலுக்கு வேலியாக வளரும்.[494]

இது அவரைத் தளிரைத் தின்னும்.[495] தாயில்லா மான் குட்டிக்கு ஆமா பாலூட்டி வளர்த்தது.[496]

**எருமை**

பெரிய சிவந்த கண்களையுடையது எருமை. இது கரும்புப் பாத்திகளில் உள்ள நெய்தல் பூக்களை விரும்பி உண்ணும்.[497] பெரிய வாயையுடைய எருமை கழுநீர் மலரை உண்டு, காட்டு மல்லிகைப் படுக்கையில் உறங்கும். அதன் முதுகை மஞ்சளின் மெல்லிலை தடவும்.[498]

**கரடி**

கரடி, எண்கு[499] எனவும் உளியம்[50] எனவும் கூறப்பெறும். இது பனையின் செறும்பு போன்ற கரிய மயிர் பொருந்திய உடலையும் வளைந்த அடியையும் உடையது.[501] இதன் குட்டியும் வளைந்த அடியை உடையது.[502] கரடி பிற விலங்குகளைப் போல் முழங்கி ஒலி எழுப்பாது. அதனால் 'ஊமை எண்கு'[503] எனப்படுகிறது.

**கழுதை**

வலிய முதுகையும் நிமிர்ந்து நிற்கும் காதுகளையும் வெண்மையான வாயையும் உடையது.[504] பகைவரை வென்று போர்க்களந்தோறும் கழுதை இனத்தைப் பூட்டி வெள்ளை வரகும் கொள்ளும் விதைத்தனர்.[505]

**காட்டுப்பூனை**

காட்டுப் பூனை இரவில் ஊரின் பழைய வேலியில் வந்து தங்கும். அது மெத்தென்ற நடையைக் கொண்டது. அதனைக் கண்ட வீட்டு இளங்கோழி பருத்தி நூற்கும் பெண்டிரின் விளக்கொளியில் தன் துணைச் சேவலைக் கண்டு அச்சம் நீங்கும்[506] என்ற ஓர் அழகான நிகழ்ச்சி கூறப்பட்டுள்ளது. 'வீட்டுப் பூனை பற்றிய வருணனை காண இயலவில்லை.

காட்டுப் பூனை பற்றிக் காண்கிறோம்' என்ற மு.வரதராசனார் கருத்து வலிவு பெறுகிறது.[507]

## குதிரை

குதிரைகள் நம் நாட்டில் பிறந்து வளர்வது உண்டாயினும் சிறந்த இலக்கணமுடைய குதிரைகள் பெரும்பாலும் வெளிநாட்டிலிருந்து வருவிக்கப்பட்டதாகத் தோன்றுகிறது என்பர்.[508] கடுமான்[509], வயமான்[510], புரவி[511], கலிமா[512] என்று பலவாறாகக் குதிரை வழங்கப்பெறுகிறது. சங்கு போன்ற வெண்மையான பிடரி மயிரும்[513] சிவந்த பிடரி மயிரும்[514] பெற்று வெண்ணிற[515] செந்நிறக் குதிரைகளாக விளங்கின. குதிரைகள் தாளத்திற்குத்தக ஆடியபடி வேகமாகச் செல்லக் கூடியனவாகும்.[516] குதிரைகள் பகைவருடன் போரிடப் பயன்பட்டன.[517] போரிடலால் பகைவரின் பிணங்களைக் காலால் குதிரைகள் இடற, அவற்றின் குளம்புகள் சிவந்த நிறமுடன் விளங்கின.[518] குதிரைகள் காற்றுபோல வேகமாகச் சென்றன.[519]

## குரங்கு

கடுவன்[520], கலை[522], ஊகம்[522], மந்தி[523] ஆகிய சொற்களால் சங்க நூல்கள் குரங்கினைக் குறிக்கின்றன. சங்க இலக்கியங்கள் குரங்குகளை அழகாகப் படம்பிடித்துக் காட்டியுள்ளன. ஆண் குரங்கு கரிய விரல்களையும்[524] பசுமையான கண்களையும்[525] உடையது. மந்தி சிவந்த முகத்தையுடையது.[526] முசுக்கலை தோண்டிய பெரிய பலாப்பழம் புண்மிக்குத் தேன் ஊறியதால் மலை முழுவதும் அத்தேன் மணம் கமழும்.[527] பலாப்பழத்தை உண்ட கடுவனும் மந்தியும் உயர்ந்த மலைப்பக்கத்தில் உள்ள மூங்கிலின் உச்சியில் உறங்கும்.[528] மந்திகள் மரக்கிளைகளில் ஊசலாடும்.[529] மந்தி பிறர் சோர்வுற்றபோது அவர் பொருளைக் கவரக்கூடிய இயல்புடையது.[530] முழையில் வீழ்ந்த குட்டியைத் தன் சுற்றத்தின் துணையோடு மேலே எடுத்த ஒரு மந்தியின் திறமிகு செயலைப்

பெருங்கௌசிகனார் கூறியுள்ளார்.[531] ஊகம் தன் வெண்முகமான குட்டியுடன் மூங்கில்களில் தாவும்.[532]

**சிங்கம்**

சிங்கம் 'காட்டு அரசன்' என்று போற்றப்படும். மேலும் 'அரிமா' எனவும் வழங்கப்பெறுகிறது.[533] சிங்கம் அரிமான்[534], வயமான்[535] என்று அழைக்கப்பெறுகிறது. வயமான் என்ற சொல்லுக்கு வலிய விலங்கு எனப் பொருள் கொண்டு அச்சொல் வரும் இட அமைவால் சிங்கம் என்ற பொருளை உணர்த்துகிறது. புள்ளிகள் பொருந்திய முகமுடைய யானையை 'வயமான்' தாக்கும் என்றும் அது பின்னரும் புலியைத் தாக்கும் என்றும் பெரும்பாணாற்றுப்படை கூறுகிறது.[536] ஆகவே 'வயமான்' என்ற இட அமைவுச்சொல் இங்குச் சிங்கம் என்ற பொருளுணர்த்துகிறது.

சிங்க ஏறு பிடரி மயிரையும் நீண்ட கழுத்தையும் கூரிய நகங்களையும் உடையது.[537] சிங்கத்தின் மயிர் மயிலிறகைப் போன்று மென்மையானது. அம்மயிரால் குருவி கூடுகட்டும்.[538] "ஆளி என்ற சொல் பிற்கால இலக்கிய ஆட்சிக்கு முரண்பட்ட வகையில் சிங்கத்தைக் குறிக்கிறது"[539] என்பார் மு. வரதராசனார்.

**நரி**

குறுநரி பிணங்களைத் தின்னக்கூடியது. எனவே அது தசை சிக்கிய பற்களை உடையதாய் விளங்கியது.[540]

**நாய்**

இது ஞமலி என்னும் சொல்லாலும் சங்க நூல்களில் குறிக்கப்படுகிறது.[541] நாயின் வாய் திறந்திருக்கும். எனவே 'பகுவாய் ஞமலி'என்றார்.[542] நாய் நன்றியுடைய விலங்காகும். இது தலைவனைப் பின் தொடர்ந்து செல்லும்.[543] நாயின் நாக்கு விறலியின் பாதத்திற்கு உவமை

கூறப் பெற்றுள்ளது.[544] நாய்க்குட்டி திறக்காத கண்களையும் சாய்ந்த காதுகளையும் உடையது.[545]

பெண் நாய் வேட்டைக்குப் பயன்பட்டது. அது ஓடிச்சென்று உடும்பினைப் பிடித்துவந்து தன் தலைவனிடம் தந்தது.[546] சிறிய பெரிய புழைகளில் இருந்த மான் கூட்டத்தைச் சின நாய் கலைக்கும்.[547]

**நீர்நாய்**

நீர்நாய் நீரில் உள்ள வாளை மீன்களைப் பிடித்துத் தன் இரையாகக் கொள்ளும்.[548]

**பன்றி**

எய்[549], ஏனம்[550], கேழல்[551] என்னும் சொற்கள் பன்றியைக் குறிப்பனவாகும். பன்றி கரிய நிறத்தையும் பிடரி மயிரையும்[552] சிறிய கண்ணையும்[553] கோட்டினையும்[554] கொண்டது. பன்றி மிகுந்த தறுகண்மையுடையது.[555] அது நிலத்தை அகழ்ந்து அதில் உள்ள காந்தள் கொழுங்கிழங்குகளைத் தின்னும்.[556] அது கிழங்குக்காக நிலத்தைத் தோண்டியதால் குறவர் உழாமலேயே தினை விதைப்பர்.[557] பன்றிகள் உழுத கொல்லை நன்செய் நிலமாக மாறிவிட்டது.[558] நிலத்தைத் தோண்டுவதால் அதன் கொம்பு குறைவுபட்டது.[559] பெண் பன்றி சேற்றில் தன் குட்டிகளுடன் திளைத்தது.[560]

வேட்டுவர் நீர்த்துறையில் இருந்தவாறு முள்ளம் பன்றியை வேட்டையாடி[561], அதனைக் கொல்வர்.[562] சிலசமயம் வேட்டுவரின் குறி தவற, அந்த முள்ளம் பன்றி வேட்டுவரைத் தாக்கியதால், புண் ஏற்பட, துன்ப மிகுதியால் வேட்டுவர் அழுவர்.[563]

**புலி**

இது உழுவை[564] என்றும் வயப்புலி[565] என்றும் இலக்கியத்தில் வழங்கப்பெறுகிறது. புலி வளைந்த[566] வரிகளையும் புகர் நிறமும்[567] உடையது. அது நெடுவரையையும்[568] மலைக் குகையையும்[569] தன் இருப்பிடமாகக் கொண்டது. மலைக் குகையில் இருந்தவாறே மானின் குரல் ஒலியைப் புலி தன் காதுகளைத் தாழ்த்திக் கேட்கும்.[570] அது பன்றி, யானை ஆகிய விலங்குகளைக் கொல்லும். புலி, தான் தாக்கிக் கொன்ற பன்றி இடப்பக்கம் வீழ்ந்தால் அதனை உண்ணாமல் களிற்றை வலப்பக்கம் விழச் செய்து அதனை உணவாகக் கொண்டதாகச் சோழன் நல்லுருத்திரன் என்ற அரசன் குறித்துச் சென்றுள்ளான்.[571] புலியுடன் மறவன் போரிட, மறவனுக்கு மார்பில் ஏற்பட்ட புண், விழுப்புண்ணாகக் கருதப்பட்டது.[572]

**மான்**

மான் முல்லை நில விலங்காயினும் குறிஞ்சி நிலக் காடுகளிலும் திரியும். கலைமான் செவ்விய புள்ளிகளையும் கிளைகளுள்ள மரக் கொம்பினைப் போல் தோன்றும் கவடுபட்ட கொம்புகளையுமுடையது.[573] அக்கொம்பில் துளை உண்டு.[574] நவ்வி என்ற ஆண் மான் சிறிய தலையுடன் பெரிய அழகுடையது. மடப்பம் பொருந்திய கண்ணையுடையது பெண்மான்.[575] அது சினநாய்க்கும்[576] வில்லோசைக்கும்[577] அஞ்சும். மான் புல் மேயும்.[578] முருக்க மரங்கள் செறிந்த மலையில் இரவில் உறங்கும் கவரிமான், பகலில் தான் மேய்ந்த நரந்தம் புல்லையும் அவை வளர்ந்துள்ள பரந்து விளங்கும் அருவிகளையும் கனவிலே கண்டு மகிழும்.[579] கவரிமான் தன் பெண் மானுடன் தகரம் என்னும் மரநிழலில் வதியும்.[580]

**யானை**

காட்டு விலங்குகளில் மிகப்பெரியது யானையாகும்; எனவே இருங்களிறு[581] இரும்பிடி[582] என வழங்கப்பெறுகிறது. விலங்குகளில்

துதிக்கையையுடையது யானை என்பதனால் 'கைமான்'[583] என்றும் அழைக்கப்பெறுகிறது. அதற்குப் பெரிய கரிய கை உண்டு.[584] களிற்றியானை சிவந்த நெற்றியையும்[585] புள்ளி பொருந்திய முகத்தையும் தந்தத்தையும்[586] உடையது. யானையின் கோடு வெள்ளைநிறமுடனும் மழமழப்புடனும் விளங்கும்.[587] அக்கோடு மேல்நோக்கி உயர்ந்திருக்கும்.[588] யானையின் கண் சிறியதாக இருக்கும்.[589] களிற்றியானை மதம் பொழியும்.[590] அம்மதம் மணமகள் கூந்தலைப் போன்று மணம் கமழும்.[591] பனை மரங்கள் போன்ற பெரிய கால்களும் வளையச் சுருக்கங்களுடைய கையும் உண்டு.[592] அதன் கால் உரல் போன்றும் இருக்கும்.[593] யானை தந்தத்தில் முத்துப் பிறக்கும்.[594]

களிறு மதம் தணியப் பிடியைப் புணரும்.[595] யானையின் கொம்பு இளநகில் என்று உவமிக்கப் பெற்றுள்ளது.[596] கருக்கொண்ட யானைக்கு உணவு தேடித் தந்து களிறு பாதுகாத்து அழைத்துச் சென்றது. அக்களிற்றினை மறைந்திருந்து நோக்கும் புலியைக் கண்ட பிடி, தன் சுற்றத்தை அழைக்க ஆரவாரம் செய்தது.[597] இவ்வகைப் பாசப் பிணைப்புக் கொண்டது யானை. யானைகள் தம் இனத்தை விட்டுப் பிரியாமல் கூட்டாக வாழும்.[598] காட்டாற்று வெள்ளத்தின் பெரிய சுழியில் அகப்பட்ட களிற்றை, மீட்டு, அதனைச் சினம் தணியச் செய்து தன் ஏவலுக்குக் கட்டுப்பட பாகர் பயிற்சி அளித்தனர்.[599] வேங்கை மரத்தைப் புலியெனக் கருதிய களிறு, மலர்களுடைய அதன் கிளைகளை ஒடித்துத் தன் தலைமீது சூடிக்கொண்டது.[600] வேங்கை மரத்தை அழித்த களிறு, கணைய மரத்தால் ஆன மதிற் கதவுகளைப் பிளந்து அரண்மனையைச் சிதைத்தது.[601] மலைபோன்ற யானை[602] மேக முழக்கத்தையும் போர் முழக்கமாக எண்ணிக் கட்டுத் தறியினின்று விடுவித்துக் கொண்டு போருக்குச் சென்றது.[603] போரில் பகைவருடன் போரிடலால் அதன் கோடு தேய்ந்து குறைந்தது.[604] முனிவரின் வேள்விக்கு யானைகள் காட்டிலிருந்து விறகுகளை எடுத்துச் சென்றன.[605]

**வருடை**

இதனைக் 'காட்டு ஆடு' என்பர் மு.வ.[606] நிலத்தைக் கவர்ந்து கொண்டாற் போன்ற ஒட்டமுடையது. வளைந்த கால்களையுடையது. மலையில் வாழக்கூடியது.[607] வருடையின் நுகர்திறனும் பார்வையும் செவிப்புலனும் கூர்மை வாய்ந்தவை. ஆயின், பார்வை மேற்புறம் அதிகம் செல்வதில்லை. இதனைக் கொல்ல விரும்பும் விலங்குகள் இவ்வியல்பினை அறிந்து மேலே இருந்து தாக்கும்.[608]

**தொகுப்புரை**

சங்கப் புலவர்கள் தாவரங்கள் பற்றிய அறிவினைச் சிறப்பாகப் பெற்றிருந்தனர்.

பூவாதே காய்க்கும் மரங்களாக ஆல், அத்தி, பலா ஆகிய மரங்கள் விளங்கின என்பதை அறிய முடிகிறது. ஆலமரத்தில் தெய்வம் உறைவதாக நம்பினர்.

மகளிர், சிறுமியராக இருக்கும்போதும் பின்னர்க் கைம்பெண்டிர் ஆனபோதும் ஆம்பல் வாழ்க்கையின் அங்கமாக விளங்கியதை உணர முடிகிறது. சகுனத்தை உணர்த்துவதாகக் கருதிய உன்ன மரம் தற்போது இருப்பதாகத் தெரியவில்லை.

குறிஞ்சி செடி வகையைச் சார்ந்தது என்பார் பயிர்நூல் வல்லார். ஓர் ஆண்டுக்கு ஒரு முறை மலரும் குறிஞ்சியும் பன்னிரண்டு ஆண்டுக்கு ஒரு முறை மலரும் குறிஞ்சியும் உண்டு என்பதை அறிய முடிகிறது. கஞ்சங்குல்லை என்ற செடியை இக்காலத்தார் 'கஞ்சா' என்பர். மஞ்சளை வீட்டின் முன்புறமும் வாழையை வீட்டின் பின்புறமும் வளர்ப்பர் எனத் தெரிகிறது.

வேலமரத்தின் இலை மிகச் சிறிது என்பதை அறிய முடிகிறது. பாழான கூரை வீடுகளின் மீது பீர்க்கங்கொடி படரும் எனத் தெளிய முடிகிறது. உயிரினம் என்ற பகுதியில் நீர் வாழ்வன, ஊர்வன, பறப்பன, விலங்குகள் ஆகியன சுட்டப்பெறுகின்றன.

'பனைமீன்' என்ற ஒருவகைப் பெருமீனும் உண்டு. இது 'யானைமீன்' என்று வழங்கப்பெறுகிறது. இது திமிங்கலத்தினும் உருவில் சற்றுச் சிறியது. இப்பனை மீனினைப் பற்றி மதுரைக் காஞ்சி குறிப்பிடுகிறது.

இந்திரக்கோபப்பூச்சி செந்நிறம் கொண்டது. முல்லை நிலத்தில் வழி நெடுகிலும் ஊர்ந்து பறக்கக் கூடியது என்று அறிய முடிகிறது. எலியும் பிறவும் தோண்டிய வளைகளில் சிறு முயல்கள் வாழும் என்று தெரிகிறது.

நெய்தல் நிலப் பனை மரத்தில் வாழும் அன்றில் என்ற பறவையும் நீரில் வாழும் மகன்றில் என்ற பறவையும் தலைவன் தலைவியின் பிரியாத தன்மையைக் கூற எடுத்துக் கூறப்பெறும் பறவைகளாகும். இப்பறவைகள் சங்கப் புறப்பாடல்களில் சுட்டப் பெறவில்லை என அறியலாகிறது.

பழங்காலத்தில் 'அன்னப்பறவை' என்ற பறவை இருந்திருக்கிறது. ஆனால் அது தற்போது காணப்பெறவில்லை.

இசையின் சிறப்பு இழிவுகளை அறியவல்ல கின்னரம் என்ற பறவையும் மழைத்துளியை உண்டு வாழும் 'சாதகப்புள்' என்ற பறவையும் தற்போது தென்படவில்லை. கோழிச்சேவல் விடியற்காலத்தில் கூவும். அவ்வொலியைக் கேட்டு மக்கள் துயிலெழுவர் என அறிய முடிகிறது.

மயில், முருகக் கடவுளின் வாகனமாக மட்டுமன்றிக் கொடியாகவும் விளங்குவதை அறிய முடிகிறது. முருகக் கடவுளுக்குக் கோழிச் சேவலும் கொடியாகும். மயில் நிலவைக் கண்டு ஆடும் என்ற செய்தி சுட்டப்பெறுகிறது.

தாயில்லா மான் கன்றுக்கு ஆமான் பாலூட்டி வளர்த்த அன்பின் நெகிழ்ச்சி புலப்படுகிறது.

காட்டுப் பூனையைப் பற்றிக் காண முடிகிறது. ஆனால் வீட்டுப் பூனையைப் பற்றிச் சங்க இலக்கியம் சுட்டவில்லை. வேட்டைக்குப் பெண் நாய் பயன்படுத்தப்பெற்றன என அறியலாகிறது. புலி தன் இரையை வலப்பக்கமாக விழச் செய்தே உண்ணும் எனத் தெரிகிறது.

காட்டுப்பசு, காட்டு ஆடு ஆகியவை தற்காலத்தில் காணப்பெறவில்லை. சங்கப் புலவர்கள் பறவைகள் விலங்குகள் வாயிலாக அன்பின் ஊற்றினையும் வீரத்தையும் எடுத்துக்காட்டுகின்றனர்.

### குறிப்புகள்

## பயிரினமும் உயிரினமும்

1. பெரும்பாண். 109–110.
2. சிறுபாண். 116–118; பொருந. 238–241.
3. பொருந. 195.
4. பதிற்று. 30:5–6.
5. குறுந்தொகை மூலமும் டாக்டர் உ.வே.சா. உரையும், ப.32.
6. பதிற்று. 51:6–7.
7. பெரும்பாண். 407–108 (மாணிக்கனார் உரை).
8. மலைபடு. 109–110.
9. புறம். 120:9–10.
10. மலைபடு. 110.
11. மதுரை. 252.
12. புறம். 209:3–4.
13. மேற்படி, 70:11–15.
14. மேற்படி, 383:7–8.
15. மேற்படி, 266:3–5.
16. மேற்படி, 352:5–7.
17. மேற்படி, 248:1–2.
18. மேற்படி, 248:5.
19. மேற்படி, 244:8, ஔவை. சு.துரைசாமிப்பிள்ளை உரை.
20. மேற்படி, 344:8.
21. சிறுபாண். 116.

22. மதுரை. 715.

23. புறம். 374:12.

24. மேற்படி, 58:1–5.

25. மேற்படி, 199:1.

26. மலைபடு. 125–126.

27. புறம். 384:5–7.

28. மேற்படி, 281:1.

29. பதிற்று. 81:25.

30. புறம். 81.

31. பெரும்பாண். 83–84.

32. மேற்படி, 130.

33. மதுரை. 310.

34. மலைபடு. 136–137.

35. பதிற்று 43:25 (மாணிக்கனார் உரை, பக். 293–294).

36. மேற்படி, 22:27.

37. மேற்படி, 63:8.

38. மேற்படி, 61:5–6.

39. மதுரை. 307–308; பெரும்பாண். 122.

40. புறம். 324:5.

41. மலைபடு. 392–393.

42. நற்றி. 156, ஔவை சு. துரைசாமிப்பிள்ளை உரை, ப. 617.

43. மலைபடு. 224.

44. மதுரை. 271; புறம். 120:10.

45. மலைபடு. 122–123, பதிற்று. 13:2, பெரும்பாண். 201.

46. மதுரை. 287.

47. புறம். 98:15–17.

48. மலைபடு. 114–115.

49. மலைபடு. 114–115 (நச்சர் உரை).

50. பெரும்பாண். 308.

51. சிறுபாண். 69–70.

52. புறம். 23:3–4; (சிலம்பு. 24; பாடுமடை), மணி 4:49.

53. பதிற்று. 4வது பத்து, பதிகம்–7.

54. சிறுபாண். 7.

55. மலைபடு. 498.

56. பதிற்று. 17:4–7.

57. முருகு. 10–11.

58. முருகு. 202.

59. பொருந. 80.

60. சிறுபாண். 12, பொருந. 50–51.

61. மலைபடு. 14.

62. புறம். 334:1, மலைபடு. 454, பெருங். 2:19:187, மதுரை. 172.

63. மதுரை. 171–172.

64. புறம். 341:4.

65. பதிற்று. 16:2.

66. மேற்படி, 11:21.

67. புறம். 340:8.

68. மேற்படி, 261:13.

69. பதிற்று. 40:5.

70. புறம். 392:24–26.

71. பெரும்பாண். 7–8, மாணிக்கனார் உரை.

72. புறம். 237:13, 240:9, 245:3–4.

73. மேற்படி, 322:2.

74. பெரும்பாண. 375; மலைபடு. 449.

75. பதிற்று 23:19–20.

76. பி.எல். சாமி. சங்க இலக்கியத்தில் செடி கொடி விளக்கம், ப. 64.

77. மேற்படி, ப. 64.

78. மேற்படி, பக். 72–73.

79. புறம். 90:1, மலைபடு. 519.

80. புறம். 144:8–9.

81. இராம. குருநாதன், குறிஞ்சி வளம், ப. 643.

82. மலைபடு. 145.

83. பெரும்பாண். 371–372.

84. சிறுபாண். 167.

85. மலைபடு. 336.

86. பதிற்று. 15:11–12.

87. பதிற்று. 81:2.

88. புறம். 168:2–4.

89. கலி. 39:15.

90. நற்றி. 313:6–7.

91. பரி. 8:25.

92. நற்றி. 294:7–8.

93. பி.எல்.சாமி, சங்க இலக்கியத்தில் செடி கொடி விளக்கம், ப. 71.

94. பொருந. 201; ஐங். 420.

95. திவாகரம், 'கஞ்சங் குல்லை கஞ்சாவாகும்',

96. முருகு. 201.

97. பொருந. 234.

98. புறம். 116:1.

99. பெரும்பாண். 293.

100. முருகு. 22.

101. பதிற்று. 52: 22–23 (மாணிக்கனார் உரை, ப. 366).

102. புறம். 396:2.

103. மலைபடு. 189.

104. பதிற்று. 30:22–23.

105. மலைபடு. 334.

106. சிறுபாண். 46.

107. இராம. குருநாதன், குறிஞ்சி வளம், ப.45.

108. நற்றி. (ஔவை சு. துரைசாமிப்பிள்ளை உரை) ப. 488, 1052.

109. பி.எல். சாமி, சங்க இலக்கியத்தில செடி கொடி விளக்கம், ப. 32.

110. மதுரை. 300.

111. புறம். 374:8.

112. மதுரை. 613.

113. கு. சீனிவாசன், தமிழ்ப்பொழில், துணர்–34, மலர். 11; ப. 317.

114. Gamble; J.S. Flora of the Presidency of Madras. Vol- II.

115. கலைக்களஞ்சியம், தொகுதி–3, ப. 317.

116. Kurinci.- A Curious Plant / Science Reporter April 1973.

117. இரா. குருநாதன், குறிஞ்சிப்பூவும் வாழ்வும், ஏழாவது இந்தியப் பல்கலைக்கழகத் தமிழாசிரியர் கருத்தரங்க மலர் 1, ப. 100.

118. புறம் 168:12 (மாணிக்கனார் உரை, ப. 332.)

119. மேற்படி, (புலியூர்கேசிகன் உரை, ப. 221).

120. புறம். 168:12.

121. பதிற்று. 75:11.

122. பொருந. 201.

123. மதுரை. 277.

124. பரி. 19; பரிமேலழகர் உரை.

125. முருகு. 34–35; சிறுபாண். 25–26; புறம். 336: 9–10.

126. மதுரை. 338.

127. பதிற்று. 15:8–9, 90:30.

128. பெரும்பாண். 267.

129. புறம். 283:1.

130. மதுரை. 171–172.

131. பதிற்று 30:1; 51:6.

132. மேற்படி. 51:4–5.

133. முருகு. 191.

134. பதிற்று 89:16.

135. புறம். 93:8–10.

136. பெரும்பாண். 264–265.

137. புறம். 395:6.

138. மதுரை. 248:249, பரி. 13–50.

139. பெரும்பாண். 114, சிறுபாண். 183, முருகு. 73, மதுரை. 249.

140. பொருந. 159, அகம். 106:1.

141. சிறுபாண்.182.

142. முருகு. 72–74.

143. பதிற்று. 4–6.

144. குறுந்தொகை ஆராய்ச்சி, டாக்டர்.உவே. சாமிநாதையர், ப. 41.

145. சிறுபாண். 146.

146. மதுரை. 114–115.

147. சிலம்பு. 6:166–168.

148. புறம். 252:3.

149. மலைபடு. 520.

150. இராம. குருநாதன், குறிஞ்சி வளம், ப. 49.

151. மலைபடு. 107–108.

152. பதிற்று 16:3–4.

153. பதிற்று 31:8–10.

154. பெரும்பாண். 357.

155. பெரும்பாண். 364.

156. பதிற்று 11:21–22.

157. புறம். 235:8–9.

158. மேற்படி, 302:4–5.

159. மேற்படி, 132:4 (உரை).

160. மலைபடு. 514–515.

161. புறம். 168:5.

162. சிறுபாண். 116, பொருந. 209, மலைபடு. 50.

163. மலைபடு. 133–135.

164. புறம். 177:10.

165. புறம். 177:11.

166. மதுரை. 247.

167. பதிற்று. 29:3.

168. மலைபடு. 471, புறம். 348:1–3.

169. புறம். 314:4.

170. மேற்படி, 191:9.

171. பி.எல். சாமி, சங்க இலக்கியத்தில் செடி கொடி விளக்கம், ப. 58.

172. பதிற்று. 5:11.

173. முருகு. 75, சிலம்பு 14:77.

174. பதிற்று. 1:2.

175. புறம். 48:3–4.

176. பதிற்று. 3:4–5.

177. புறம். 271:1–2.

178. மேற்படி, 272:1–3.

179. மேற்படி, 271:3–8.

180. மேற்படி, 235:18.

181. பொருந. 195.

182. புறம். 235:18.

183. மதுரை. 261.

184. பதிற்று. 76:12–13.

185. புறம். 200:1.

186. பெரும்பாண். 356.

187. மலைபடு. 12.

188. புறம். 77–78.

189. மேற்படி, 158:23.

190. மேற்படி, 380:9.

191. மலைபடு. 292–293.

192. மேற்படி, 138– 139, 292; பதிற்று. 61:1.

193. புறம். 374:5–6.

194. புறம். 128:1–4.

195. முருகு 301–316, மலைபடு. 174.

196. டாக்டர் ச.வே. சுப்பிரமணியன், தமிழர் வாழ்வியல் தாவரம், ப.30.

197. தி. முத்துக்கண்ணப்பன், சங்க இலக்கியத்தில் நெய்தல் நிலம், ப. 45.

198. பி.எல். சாமி, சங்க இலக்கியத்தில் செடிகொடி விளக்கம், ப. 122.

199. பெரும்பாண். 265–266.

200. புறம். 391:17.

201. பதிற். 30:3–4.

202. பதிற்று. 51:31.

203. புறம். 177:16.

204. பெரும்பாண். 360.

205. புறம். 85:7, 375:4.

206. பதிற்று. 40:9–10, 51: 31.

207. புறம். 160:3–6.

208. பதிற்று. 42:1.

209. மேற்படி, 37:7.

210. பதிற்று 70:6–7.

211. டாக்டர் ச.வே. சுப்பிரமணியன், தமிழர் வாழ்வியல் தாவரம், ப. 28.

212. பெரும்பாண். 354.

213. முருகு. 235.

214. சிறுபாண். 44.

215. மு. வரதராசன், பழந்தமிழ் இலக்கியத்தில் இயற்கை (மொ), ப.414.

216. புறம். 370:10.

217. மலைபடு. 431, புறம்.264:2.

218. பி.எல். சாமி, சங்க இலக்கியத்தில் செடிகொடி விளக்கம், ப. 45.

219. பதிற்று. 23:19–20.

220. முருகு. 32–34.

221. முருகு. 27–29.

222. பி.எல். சாமி, சங்க இலக்கியத்தில் செடி கொடி விளக்கம், ப. 51.

223. பெரும்பாண். 232.

224. பெரும்பாண். 309.

225. முருகு. 59–60.

226. மலைபடு. 137–138.

227. வித்துவான் சண்முக சுந்தரம், தமிழும் தாவரமும், ப. 61.

228. புறம். 168:1–2.

229. சிறுபாண். 43.

230. மலைபடு. 521.

231. மேற்படி, 521.

232. புறம். 197:10–12 (அ. மாணிக்கனார் உரை)

233. புறம். 197:10–12.

234. புறம். 328:14–16.

235. பதிற்று. 23:20.

236. பி.எல். சாமி, சங்க இலக்கியத்தில் செடிகொடி விளக்கம், ப. 53.

237. மேற்படி, ப. 54.

238. பொருந. '221.

239. புறம். 205:6.

240. சிறுபாண். 29–30.

241. பொருந. 200.

242. பி.எல். சாமி, சங்க இலக்கியத்தில் செடி கொடி விளக்கம், ப. 56.

243. இராம. குருநாதன், குறிஞ்சி வளம், ப. 51.

244. புறம். 168:1.

245. பெரும்பாண். 257, முருகு. 12, குறுந். 108:1.

246. மலைபடு. 120–121.

247. மலைபடு. 132–133.

248. பதிற்று. 41:14–15; புறம். 370:9.

249. மதுரை. 286–287.

250. புறம். 305:1.

251. மேற்படி, 321:6.

252. மதுரை. 272, புறம். 384:4.

253. புறம். 2:5:1.

254. பெரும்பாண். 193.

255. பதிற்று: 75:11.

256. மலைபடு. 113.

257. இராம. குருநாதன், குறிஞ்சி வளம், ப. 52.

258. பதிற்று. 41:13.

259. மலைபடு. 181.

260. மதுரை. 255.

261. புறம். 399:6.

262. பதிற்று. 29:2.

263. பதிற்று. 44:23

264. மலைபடு. 129.

265. பதிற்று. 13:14.

266. புறம். 202:1.

267. முருகு. 21.

268. புறம். 120:1.

269. மதுரை. 296–297.

270. புறம். 265:2.

271. புறம். 202:18.

272. மலைபடு. 305.

273. புறம். 202:19.

274. புறம். 202:18–19.

275. மலைபடு. 305–306; அகம். 48

276. கு. சீனிவாசன், தமிழில் தாவரம், தமிழ்ப்பொழில் துணர், 34, மலர்–1, ப. 24.

277. பதிற்று. 41:7–10.

278. பதிற்று. 58:13–15.

279. புறம். 324:3–5.

280. பதிற்று. 39:12–13.

281. புறம். 98:7–8.

282. மதுரை. 257.

283. பெரும்பாண். 263 (மாணிக்கனார் உரை).

284. பதிற்று. 15:8–11.

285. பதிற்று. 90:30

286. புறம். 246:7–8.

287. மதுரை. 311, பெரும்பாண். 60.

288. புறம். 325:7–12.

289. மலைபடு.219, குறிஞ்சி. 96, குறிப்புரை.

290. புறம். 97:15–16 (மாணிக்கனார் உரை)

291. புறம். 119:2.

292. புறம். 119:2. (அ. மாணிக்கனார் உரை)

293. பொருந. 200.

294. புறம். 328:7–12.

295. மதுரை. 282–283.

296. மதுரை. 251.

297. மலைபடு. 515.

298. மலைபடு. 446–447.

299. மதுரை. 683.

300. பதிற்று. 81:25.

301. பதிற்று. 209, 214, 223 (நச்சர் உரை).

302. மலைபடு. 516.

303. புறம். 399:6.

304. புறம். 345:19–20.

305. பெரும்பாண். 3–6.

306. புறம். 251–முன்னுரைக் குறிப்பு.

307. பதிற்று. 15:13.

308. பெரும்பாண். 192.

309. பதிற்று. 26:10–11, புறம். 155:4–7.

310. பெரும்பாண். 306.

311. புறம். 320.

312. பெரும்பாண். 214–216, சிறுபாண். 148.

313. மலைபடு. 429–430.

314. பதிற்று. 43:23.

315. புறம். 181:1–3.

316. முருகு. 192.

317. மதுரை. 400–401.

318. பதிற்று. 5 ஆம் பத்து, பதிகம்: 13.

319. வித்துவான்.ல. சண்முகசுந்தரம், தமிழும் தாவரமும். ப. 49.

320. மு. வரதராசன், பழந்தமிழ் இலக்கியத்தில் இயற்கை, பக். 419–420.

321. குறள். 758.

322. மலைபடு. 330–335.

323. புறம். 138:3.

324. புறம். 396:1.

325. பதிற்று: 21:27. (அ. மாணிக்கனார் உரை)

326. தி. முத்துக்கண்ணப்பன், சங்க இலக்கியத்தில் நெய்தல் நிலம், ப. 138.

327. புறம். 176:2–4.

328. மேற்படி, 249:3–4.

329. மேற்படி, 249:1–2.

330. பதிற்று. 13:1.

331. புறம். 212:3–4.

332. சிறுபாண். 181, புறம். 249:6.

333. தி. முத்துக்கண்ணப்பன், சங்க இலக்கியத்தில் நெய்தல் நிலம், ப. 138.

334. புறம். 384:8–9.

335. தி. முத்துக்கண்ணப்பன், சங்க இலக்கியத்தில் நெய்தல் நிலம், ப. 133.

336. ஆ. சிங்காரவேலு முதலியார், அபிதான சிந்தாமணி, ப. 548.

337. புறம். 225:12.

338. மதுரை. 375.

339. புறம். 158:1, முருகு. 120.

340. மதுரை. 316.

341. மதுரை. 401.

342. வீரசோழியம், பொருளதிகாரம், பொருட்படலம், 94:2.

343. கலைக்களஞ்சியம், தொகுதி–5, ப. 113.

344. தி. முத்துக்கண்ணப்பன், சங்க இலக்கியத்தில் நெய்தல் நிலம், ப. 102.

345. புறம். 399:5.

346. பி.எல்.சாமி, சங்க இலக்கியத்தில் விலங்கின விளக்கம், பக்.428–432.

347. தி. முத்துக்கண்ணப்பன், சங்க இலக்கியத்தில் நெய்தல் நிலம், ப. 107.

348. மதுரை. 255.

349. மதுரை. 375.

350. தொல். மரபியல். 31:1.

351. ச. பரிமளா, பழந்தமிழ் நூல்களில் நீர்வாழ் உயிரினங்கள், ப. 104.

352. சிறுபாண்.195.

353. பொருந. 9–10.

354. பதிற்று. 52:6–9.

355. கலைக்களஞ்சியம், தொகுதி எட்டு, ப. 405.

356. மதுரை. 315.

357. பதிற்று. 30:5–7.

358. பதிற்று. 67:1, 2, 4, 74:5–6.

359. சிறுபாண். 55–61.

360. பொருந.162.

361. புறம். 104:3–4, மலைபடு. 211, குறிஞ்சி. 322.

362. மலைபடு. 90, குறிஞ்சி. 257, சிலம்பு.13:7.

363. பதிற்று. 53:8.

364. மலைபடு. 210–211; புறம். 104:3–4.

365. ச. பரிமளா, பழந்தமிழ் நூல்களில் நீர்வாழ் உயிரினங்கள், ப. 141.

366. புறம். 399:5.

367. மேற்படி, 249:5.

368. மலைபடு. 457–458.

369. புறம். 287:7–8, 322:8–9, 354:4–5, மலைபடு. 454:455.

370. புறம். 322:7–8, மலைபடு. 455.

371. பெரும்பாண். 287.

372. புறம். 395:4.

373. மேற்படி, 18:7–8.

374. செ. வேங்கடராமச்செட்டியார், பழந்தமிழ் நூல்களில் உயிர்வகைகள், ப. 183.

375. பெரும்பாண். 85.

376. முருகு. 15.

377. சிறுபாண். 168.

378. மலைபடு. 508, புறம். 326:9.

379. மலைபடு. 507–508.

380. புறம். 326:8–12.

381. மேற்படி. 321:4–7.

382. மேற்படி. 322:3.

383. மேற்படி. 384:4–5.

384. மேற்படி. 324:3–8.

385. மலைபடு. 504.

386. புறம். 51:9–10.

387. பதிற்று. 39:7–15.

388. புறம். 256:3.

389. மலைபடு. 261.

390. பெரும்பாண். 232.

391. முருகு. 148–150.

392. பதிற்று. 51:12–13.

393. புறம். 333:1–5.

394. மேற்படி. 322:5–6.

395. மேற்படி. 334:1–2.

396. மேற்படி. 328:14–15.

397. செ. வேங்கடராமச் செட்டியார், பழந்தமிழ் நூல்களில் உயிர்வகைகள், ப. 182.

398. கலைக்களஞ்சியம், தொகுதி எட்டு, ப. 273.

399. தி. முத்துக்கண்ணப்பன், சங்க இலக்கியத்தில் நெய்தல் நிலம், ப. 72.

400. மதுரை. 385–386.

401. புறம். 67:1, 6–11.

402. மேற்படி, 318:4–9 (மாணிக்கனார் உரை).

403. மேற்படி, 238:2, 373:38, 370:25–27.

404. பதிற்று. 36:6–9.

405. மேற்படி. 67:8–10.

406. பதிற்று. 36:10.

407. முருகு. 150–151, புறம். 56:5–6, சிலம்பு. 11:136.

408. புறம். 297:7, மதுரை. 254.

409. கலைக்களஞ்சியம், தொகுதி–3, பக். 417–418.

410. புறம். 238:3, 362:17.

411. புறம். 342:1.

412. பொருந. 185–186.

413. பதிற்று. 30:30–39, பொருந. 183–184.

414. கலைக்களஞ்சியம், தொகுதி–3, ப. 444.

415. புறம். 52:15–16.

416. மேற்படி, 395:9–11.

417. பெரும்பாண். 227.

418. பெரும்பாண். 300–301.

419. மதுரை. 291.

420. பெரும்பாண். 493–94.

421. கலைக்களஞ்சியம்,

422. புறம். 269:1, சீவக. 660.

423. சிறுபாண். 4.

424. பெரும்பாண். 204–205.

425. புறம். 321:1.

426. மதுரை. 169–170, மணிமேகலை. 6:75–76.

427. முருகு. 49.

428. புறம். 240–6.

429. மதுரை. 170, பதிற்று. 44–18.

430. புறம். 359:1–2.

431. மேற்படி. 240:6–7.

432. பொருந. 210, புறம். 170:6–7.

433. மலைபடு. 140–141, புறம். 370:4–8.

434. பதிற்று. 44:17–19.

435. புறம். 342:7–10.

436. மூதுரை 16:2–4.

437. புறம். 398:3.

438. புறம். 326:6.

439. மதுரை. 673, மணிமேகலை. 7:116.

440. புறம். 383:1.

441. ஐங்குறுநூறு, பா. 187.

442. சிறுபாண். 181.

443. சிறுபாண். 182.

444. சிறுபாண். 179–181, புறம். 243:9.

445. பெரும்பாண். 312–313.

446. பதிற்று. 23:1–2, 58:12–13.

447. ஆ. சிங்கார வேலு முதலியார், அபிதான சிந்தாமணி, ப. 971.

448. பதிற்று. 29:6.

449. மேற்படி. 32:12.

450. மேற்படி. 23:21.

451. மேற்படி. 32:12–15, 51:4–6.

452. புறம். 209:1–2.

453. பதிற்று. 39:10–12.

454. பெரும்பாண். 439.

455. புறம். 141:11.

456. ஐங்கு. 294.

457. முருகு. 247.

458. பாக்யவதி சங்கரலிங்கம், சங்க இலக்கியத்தில் மயில், ப. 3.

459. பரி. 6:4.

460. 127:4.

461. பதிற்று. 9:10:42.

462. புறம். 56:7, 344:1, மலைபடு. 235.

463. மலைபடு. 234–235.

464. மதுரை. 333.

465. முருகு. 205, 310, பெரும்பாண். 331, மதுரை. 608.

466. புறம். 344:1.

467. மேற்படி. 60:3–5.

468. பாக்யவதி சங்கரலிங்கம், சங்க இலக்கியத்தில் மயில், ப. 51.

469. மதுரை. 268–269.

470. புறம். 269:1.

471. மேற்படி. 391:15–17.

472. மேற்படி. 238:2, பெரும்பாண். 439–440.

473. மதுரை. 674, குறுந். 34:4–5, அகம்.145:14–15, திருப்பாவை பா. 7.

474. சீவக. 892.

475. சிறுபாண். 184.

476. பதிற்று. 66:16.

477. பொருந. 211.

478. புறம். 198:25.

479. மலைபடு. 503.

480. பெரும்பாண். 153, மலைபடு. 414.

481. புறம். 197:10–11.

482. புறம். 383:20, மலைபடு. 217.

483. மேற்படி. 138:1.

484. பதிற்று. 13:5–6.

485. மலைபடு. 330–334.

486. மேற்படி. 330–334.

487. குறுந். 317:1.

488. அகம். 238:4.

489. மலைபடு. 330.

490. சிறுபாண். 259–260.

491. மலைபடு. 573, 408–409.

492. புறம். 327: 1–2.

493. பதிற்று. 30:9–11, புறம். 319:10.

494. புறம். 170:1–2.

495. மதுரை. 292–293.

496. புறம். 323:1–7.

497. பதிற்று. 13:3–4, மலைபடு. 472.

498. சிறுபாண். 41–46.

499. மலைபடு. 501.

500. முருகு. 313.

501. மேற்படி. 312–313.

502. மலைபடு. 501.

503. மலைபடு. 501.

504. பெரும்பாண். 79–80, புறம். 392:14.

505. புறம். 392:14–16.

506. புறம். 326:1–6.

507. மு. வரதராசன், பழந்தமிழ் இலக்கியத்தில் இயற்கை, பக். 418–419.

508. செ. வேங்கடராம செட்டியார், பழந்தமிழ் நூல்களில் உயிர்வகைகள், ப. 14.

509. புறம். 350:5.

510. புறம். 266:7.

511. மேற்படி. 240:1.

512. பதிற்று 42:15.

513. பெரும்பாண். 488, பொருந. 165.

514. பதிற்று 34: 25.

515. பொருந. 165; பெரும்பாண். 488.

516. புறம். 240:1, புறம். 206:6.

517. மதுரை. 689.

518. பதிற்று. 65:1–4.

519. புறம். 304:3

520. புறம். 200:3.

521. முருகு. 303.

522. புறம். 383:21.

523. புறம். 200:4.

524. புறம். 200:3.

525. சிறுபாண். 221.

526. புறம். 200:4.

527. மலைபடு. 292–293.

528. புறம். 200: 1–5.

529. மதுரை. 332–334.

530. பெரும்பாண். 393–395.

531. மலைபடு. 311–314.

532. புறம். 383–21.

533. செ. வேங்கடராம செட்டியார், பழந்தமிழ் நூல்களில் உயிர் வகைகள், ப. 23.

534. பதிற்று. 12:4

535. புறம். 318:5.

536. பெரும்பாண். 448–449.

537. பதிற்று. 12: 3–4.

538. புறம். 318: 5–6.

539. மு. வரதராசன், பழந்தமிழ் இலக்கியத்தில் இயற்கை (மொ), ப. 420.

540. புறம். 359:3.

541. பெரும்பாண். 112.

542. மேற்படி. 112.

543. மேற்படி. 125.

544. சிறுபாண். 17–18, பொருந. 42.

545. மேற்படி. 130–132.

546. மலைபடு. 177, 563.

547. புறம். 205:7–8.

548. மேற்படி. 283:2.

549. மேற்படி. 177:13.

550. மலைபடு. 247.

551. புறம். 176:2.

552. மலைபடு. 246–247.

553. மேற்படி. 153.

554. பதிற்று. 13:1 (மாணிக்கனார் உரை)

555. மலைபடு. 297–298.

556. புறம். 168:2–4.

557. மேற்படி. 168:3–6.

558. பதிற்று. 26:2.

559. மலைபடு. 245.

560. பெரும்பாண். 336–342.

561. புறம். 374:10–11.

562. மேற்படி. 325:6.

563. மலைபடு. 300–301.

564. புறம். 152:2.

565. மதுரை. 298.

566. புறம். 135:1.

567. மேற்படி. 157:12.

568. மேற்படி. 170:7.

569. மேற்படி. 157:11.

570. மேற்படி. 157:11–13.

571. மேற்படி. 190:6–10.

572. மலைபடு. 302–304.

573. பதிற்று. 74:8–9.

574. புறம். 152:3.

575. மதுரை. 275–276, புறம். 2:21.

576. புறம். 205:7–8.

577. மலைபடு. 406, 331.

578. புறம். 166:11.

579. பதிற்று. 11:21–22.

580. புறம். 132:6–7.

581. மேற்படி. 190:9.

582. முருகு. 304.

583. புறம். 96:8.

584. பெரும்பாண். 436, புறம். 369:2.

585. புறம். 348:9.

586. புறம். 374:13, 310:4, 377:23, 310:4, பதிற்று. 34:6, பெரும்பாண்.448.

587. பதிற்று. 43:3.

588. புறம். 334:8–10, 159:22.

589. மேற்படி. 395:8; 170:10.

590. பதிற்று. 30:11.

591. சீவக. 1621.

592. புறம். 371:18–19.

593. புறம். 323:6.

594. முருகு. 304–305, மலைபடு. 517–518, பதிற்று. 32:3, புறம். 170:10–11.

595. பதிற்று. 82:1–10.

596. புறம். 337:22.

597. மலைபடு. 307–310.

598. மேற்படி, 298–299.

599. மேற்படி, 325–327.

600. பதிற்று. 42:7–10.

601. மேற்படி, 53:15–20.

602. மதுரை. 46–47, புறம். 17: 34–35.

603. பதிற்று. 84:1–4.

604. புறம். 98:1–4.

605. பெரும்பாண். 498–499.

606. மு. வரதராசன், பழந்தமிழ் இலக்கியத்தில் இயற்கை (மொ), ப. 420.

607. மலைபடு. 502–503.

608. எம்.எஸ். கலியாணசுந்தரம், தென்னாட்டு மலையூர்கள், ப. 76.

**இயல் - நான்கு**

# உவமையில் இயற்கை

உலக வழக்கிலும் செய்யுள் வழக்கிலும் மக்கள் உவமையைக் கையாண்டு வருகின்றனர். சங்க காலப் புலவர்கள் தம் பாடல்களிலே உவமையைக் கையாண்டுள்ளனர். சங்கப் புறப்பாடல்களில் இயற்கையைத் தழுவி உவமை பெறும் சிறப்பினை இவ்வியல் ஆராய்கிறது.

## உவமையணி விளக்கம்

அறிந்த ஒன்றனைக் கொண்டு அறியாத ஒன்றனை அதனோடு ஒப்பிட்டுக் கூறிவருவதை அன்றாட வாழ்வில் காண்கிறோம். இவ்வாறு மக்களுக்கு அதிகம் பயன்படும் உவமையைப் பற்றி இளம்பூரணர் மிகத் தெளிவாக விளக்கியுள்ளார். தொல்காப்பியத்தில் வரும் 'உவமையியல்' என்பதற்கு விளக்கம் தரும்போது, "ஒருபுடை ஒப்புமை பற்றி உவமை உணர்த்தினமையாற் பெற்ற பெயர்; மெய்ப்பாடு பற்றித் தோன்றி வழங்குவது" என்றும், "இதனாற் பயன் என்னை மதிப்பதோவெனின், புலன் அல்லாதன புலனாதலும், அலங்காரமாகிக் கேட்போர்க்கின்பம் பயத்தலும் 'ஆப்போலும் ஆமா என' உணர்த்திய வழி, அதனைக் காட்டகத்துக் கண்டான் முன்கேட்ட ஒப்புமை பற்றி இஃது ஆமாவென்று அறியும். 'தாமரை போல் வாண்முகத்துத் தையலீர்' என்ற வழி அலங்காரமாகிக் கேட்டார்க்கு இன்பம் பயக்கும்"[1] என்றும் கூறியுள்ளார்.

ஆதலால் இதன்வழி, உவமையானது, முழு ஒப்புமை பற்றியன்றி ஒருபுடை ஒப்புமை பற்றியே அதிகம் வருமென்பதும், கேட்போர்க்கும் படிப்போர்க்கும் இன்பம் பயக்கவல்லது என்பதும் தெளிவாகிறது.

செம்புலப் பெயனீரார்,[2] தேய்புரி பழங்கயிற்றியனார்[3] என உவமையின் சிறப்பினால் புலவர்கள் பெயர் பெற்று விளங்குவதால் உவமையின் பெருமையினை அறியமுடிகிறது.

'எல்லாவித அலங்காரங்களும், உவமையணியின் விரிவுகளைத் தவிர வேறொன்றும் இல்லை. உபமாலங்காரமே, அலங்கார சாஸ்திரத்தின் பிராணன்'[4] என்று மகாகவி பாரதியார் கூறுவதும் உவமை அணியின் தலைமைத் தன்மையைப் புலப்படுத்தும்.

"உள்ளக் கருத்தைத் தெள்ளத் தெளிய படிப்பவர், கேட்பவர் மனத்தில், பசுமரத்தாணி போல் பதிய வைப்பதற்கு உவமை உதவி புரிகின்றது."[5] என்னும் ச.வே. சுப்பிரமணியன் கூற்று இங்கு நினைவு கூரத்தக்கதாகும்.

ரா. சீனிவாசன் உவமையைப் பற்றிக் கூறும்போது, "ஒன்றைப் போல ஒன்று நிகர்க்கும் பொருத்தத்தைக் கண்டு உவமை கூறும்பொழுது அப்பொருத்தமே ஒரு தனிச்சிறப்பாக அமைகிறது. இன்ன பொருள் இன்ன பொருளை நிகர்க்கும் என்று கண்டு அறிந்து கூறும் பொழுது அதுவே ஒரு புதிய கண்டுபிடிப்பாக அமைகிறது,"[6] என்பார்.

## தொல்காப்பியரும் உவமையும்

தொல்காப்பியர் தம் நூலான தொல்காப்பியத்தில் உவமையைக் கூறுவதற்கென்றே உவமையியலைப் படைத்துள்ளார். உவமையானது வினை, பயன், மெய், உரு என்ற நான்கின் அடிப்படையில் தோன்றும் என்பதை,

**"வினைபயன் மெய்யுரு என்ற நான்கே**
**வகைபெற வந்த உவமைத் தோற்றம்"**[7]

என்ற நூற்பாவால் அறிவுறுத்துகிறது.

## உள்ளுறை உவமம்

உவமையில் உள்ளுறை உவமம் என்னும் ஒன்றனைப் பற்றியும் தொல்காப்பியர் குறிப்பிட்டுள்ளார். உள்ளுறை உவமம் வெளிப்படையாகத் தோன்றாமல், குறிப்பாகப் பொருள் உணரக் கூடிய வகையில் அமைவதாகும். இது தெய்வம் நீங்கலாக மற்றக் கருப்பொருள்களை ஒட்டியே அமையும் என்பதை,

**"உள்ளுறை தெய்வம் ஒழிந்ததை நிலமெனக்**
**கொள்ளு மென்ப குறியறிந் தோரே"[8]**

என்ற நூற்பாவால் தொல்காப்பியர் சுட்டிச் சென்றுள்ளார். மேலும் அவர்,

**"உடனுறை உவமம் சுட்டுநகை சிறப்பெனக்**
**கெடலரு மரபின் உள்ளுறை ஐந்தே"[9]**

என்னும் நூற்பாவில் உள்ளுறையானது உடனுறை, உவமம், சுட்டு, நகை, சிறப்பு என ஐந்து வகைப்படும் என்று குறித்துள்ளார். பேராசிரியர், உள்ளுறை உவமத்தைப் பற்றிக் கூறுகையில், "இலக்கியக் கருத்துகளை ஏற்றமுள்ளதாக்கவும், அழகுபடுத்தவும் உள்ளுறை உவமம் பயன்படுகின்றது."[10] என்றார். "கருப்பொருள் பற்றி வரும் இவ்வுவமைகள் மனிதனின் செயல்களையும் உணர்ச்சிகளையும் விளக்குவனவாய் உள்ளன. படிப்பவர்கள் உய்த்துணருமாறும் உள்ளன."[11] என்கிறார் மு.வ.

"ஒருவர் தாம் கூறக் கருதிய பொருள், இதனோடு ஒத்து முடிதல் வேண்டும் என்று உட்கொண்டு அதற்கு வேண்டுவனவற்றை உள்ளுறுத்திக் கூறுவதே உள்ளுறை உவமம் ஆகும்"[12] என்று உள்ளுறை உவமத்தைக் கரந்தைத் தமிழ்ச் சங்க வெள்ளி விழாமலர் விளக்குகிறது.

மேற்கூறியவற்றால் உள்ளுறை உவமம் என்பது தெய்வம் ஒழிந்த ஏனைய கருப்பொருளைச் சார்ந்துவரும். இது கருப்பொருள்களின் வாயிலாக

வருகிற உரிப்பொருள் ஆகும். இது திட்டமிட்டு வரும். மேலும், குறிப்பாக உணரக்கூடிய தன்மையில் அமைந்தது. இன்றைக்கு அது குறியீடாக மாறிவிட்டது.

**இறைச்சி**

இறைச்சி உரிப்பொருளின் புறத்தே தோன்றும் என்பதை "இறைச்சி தானே உரிப்புறத் ததுவே"[13] என்ற நூற்பாவால் உணரலாம்.

"இறைச்சி, என்னும் சொல்லுக்குக் கருப்பொருள் உண்டு"[14] என்று ஔவை சு. துரைசாமிப்பிள்ளை கூறியுள்ளார். தொல்காப்பியர் இறைச்சியிலிருந்து தோன்றும் குறிப்புப் பொருள்கள் உண்டு என்கிறார். இதனை,

**"இறைச்சியில் பிறக்கும் பொருளுமா ருளவே**
**திறத்தியல் மருங்கில் தெரியு மோர்க்கே"[15]**

என்ற நூற்பாவால் அறியலாம்.

உள்ளுறை இன்றியும் இறைச்சி இருக்கும். இறைச்சி இன்றைக்குத் தொனியாக மாறிவிட்டது.

"அகப்பொருள் இலக்கியங்களில் பயன்படுத்தக்கூடிய இவ்விறைச்சி மிக நுட்பமானது"[16] என்று ரா. சீனிவாசன் சுட்டிக் கூறும் கருத்து ஈண்டு நினைவுகூரத்தக்கதாகும்.

இவ்வுள்ளுறை உவமமும், இறைச்சியும், அகப்பொருள் இலக்கியத்திலேயன்றிப் , புறப்பொருள் இலக்கியத்திலும் சிறிதளவு பயின்று வருவதை அறியமுடிகிறது. "கருத்தினைக் குறிப்பால் விளக்க இறைச்சி, உள்ளுறை உவமம் முதலியவற்றைப் புலவர்கள் கையாண்டனர்."[17]

## அகஇலக்கியத்துள் உள்ளுறை (குறிப்புப் பொருள்)

இரவில் வந்து, தலைவியைக் கண்டு மீளும் தலைவனைக் கண்ட தோழி. அவன் எதிரே வந்து தலைவியின் காம மிகுதியைக் கூறி, அவளை விரைவில் மணந்து கொள் என்ற வற்புறுத்தும் பொருண்மை உடையது.

**"வேரல் வேலி வேர்க்கோட் பலவின்**
**சாரல் நாட செவ்வியை ஆகுமதி**
**யாரஃது அறிந்திசி னோரே சாரல்**
**சிறுகோட்டுப் பெரும்பழம் தூங்கியாங் கிவள்**
**உயிர்தவச் சிறிது காமமோ பெரிதே"[18]** (குறுந்-18)

என்னும் பாடலாகும். இதன் வழி, தலைவியின் உயிர் வருத்தும் காமநோயை நீயாவது அறிந்து விரைவில் அவளை மணம் புரிந்து, அந்நோயிலிருந்து மீட்க வேண்டும் என்கிறாள் தோழி.

யாரும் வளர்க்காமல் இயல்பாகவே வளர்ந்த சிறுமூங்கில் பலாவிற்குக் காவல் நிற்பது போலத் தலைவியின் மீதார்ந்த காமத்திற்கு அவளின் இயல்பான குணநலனே காவலாக இருக்கிறது என்ற குறிப்புப் பொருள் உணர்த்தப்படுகிறது.

சிறுகோட்டில் தொங்கும் பழம் கனிந்து தானே கொம்பினின்று உகும். அன்றிப், பிறராற் கொள்ளவும் படும். அதுபோலத் தலைவி, காமம் மீதூர்ந்து உயிர்விடுதலும் நேரும். அன்றி, அவளைப் பிறர் மணந்து கொள்ளவும் முயல்வர் என்பது உவமைவழிப் பெறப்படும் குறிப்புப் பொருளாம்.

சீற்றம் கொண்ட களிறு ஒன்று வேங்கை மரக்கிளையைத் தாழ்த்தி வளைக்கிறது; கிளை ஒடிந்து போகவில்லை; நிலத்தில் தாழ்ந்துவிடுகிறது.

ஆயினும், பூக்கள் பூக்கின்றன; நிலத்தில் நின்றபடியே பறிக்கவும் எளிதாகிறது.இக்காட்சியை உள்ளுறை உவமமாகக் கையாண்டு தலைவியின் உளப்பாங்கினை உணர்த்துகிறார் ஒரு புலவர்.

**"பொருகளிறு மிதித்த நெரிதாள் வேங்கை**
**குறவர் மகளிர் கூடுதற் பெய்ம்மார்**
**நின்றுகொய மலரும்"[19]**

என வரும் பாடலில் தலைவி தோழிக்குத் தன்னிலையை உணர்த்துகிறாள் எனலாம். தலைவன் தன்னை வாழவும் விடவில்லை; சாகவும் விடவில்லை; களவொழுக்கத்தில் துன்பத்தைக் கூறவும் முடியவில்லை என்பதை உணர்த்துகிறாள். இங்குத் தலைவி வேங்கை மரமாகவும், தலைவன் களிறாகவும் வளைந்த கிளைகள் களவொழுக்கத்தில் அவளுக்கு ஏற்பட்ட துன்பமாகவும், பூப்பறிப்பவர்கள் அலர் தூற்றுபவர்களாகவும் உவமிக்கப்படுகின்றனர்.

சங்க அக இலக்கியத்தில் காணப்படும் செடி, கொடி, விலங்கு முதலியவற்றின் வருணனைகள் பல இடங்களில் இத்தகைய உள்ளுறை உவமங்களாக உள்ளன. "வண்டும், எருமையும், மீனும் உள்ளுறை உவமங்களில் அடிக்கடி பயன்படுத்தப்படுகின்றன"[20] என்பர் மு.வ.

குறிப்புப் பொருள் உணர்த்துமிடங்களில் இயற்கைக் காட்சிகளே பயன்படுத்தப் படுகின்றன. மறைமுகமாகக் கூறும் பொருள், உள்ளத்தில் நன்கு பதியும் என்பது உள்ளுறை உவமங்களின் நோக்கமாகும்.

சங்க அகப்பாடலில் இயற்கை பற்றிய ஓர் உவமையைக் காண்போம். பொருள் கருதிப் பிரியப் போகும் செய்தியைத் தலைவிக்கு உணர்த்தினான் தலைவன். அவளது முகம் புதுக்கவின் இழந்து காலை நேரத்து மதிபோல் ஒளி மழுங்கியது என்பதைச்,

**"செய்பொருள் மருங்கின் செலவுதனக்(கு) உரைத்தென**
**வைகுநிலை மதியம் போலப் பையெனப்**
**புலம்புகொள் அவலமொடு புதுக்கவின் இழந்த**
**நலங்கெழு திருமுகம்"[21]**

என்ற அகநானூற்றுப்பாடலால் அறிகிறோம்.

பிரிவுத்துயரால் படரும் பசலை நிறத்துக்குப் பீர்க்கம் பூவின் நிறமும்[22] கொன்றை மலரின் வண்ணமும்[23] உவமையாகப் பேசப்பெறுகின்றன.

சங்க அகப்பொருள் இலக்கியங்களில் இயற்கை உவமை வாயிலாகக் குறிப்புப் பொருளும் உவமையும் பொருள் விளக்கமுறவும் மனத்தில் பதியவும் கையாண்டுள்ளனர்.

சங்க இலக்கிய உவமைகள் நன்கு கூர்ந்து கணித்தறிந்த நுணுக்கங்களும் நுட்பமான ஒப்புமை நயங்களும் அமைந்து கிடப்பதைக் காணலாம். சில உவமைகள் மரபாக ஒரே மாதிரியாகத் தோன்றினாலும் புலவர்கள் தாம் நேரில் கண்டு, கவியுணர்வில் திளைத்த பாங்கில், புதிய கிளர்ச்சியுடன் உவமைகள் அமைப்பது சங்க இலக்கியத்தின் சிறப்பு.

## இயற்கையை உவமானமாகக் கொள்ளல் பற்றிய விளக்கம்

உவமையில் ஒப்புமை கூற ஆதாரமாக நிற்கும் பொருள் உவமானம்; அப்பொருளால் உவமிக்கப் பெற்றுப் பொருள் விளக்கம் கொள்ளும் பொருள் உவமேயம் எனப்பெறும். உவமானம் உலகறி பொருளாய் இருத்தல் வேண்டும். அன்றேல் பொருள் விளக்கம் அமையாது மயக்கமே விளையும். மேலும் உவமிக்கப்பெறும் பொருள் தன்மையும் அறிய இயலாது. அவ்வுவமை வெற்றெனத் தொடுத்தலாகிப் பயனற்றுப் போகும். ஆதலின் உலகோரால் நன்கறியப் பெற்ற பொருள் கொண்டே உவமையை அமைத்தலே புலனெறி வழக்காயிற்று எனலாம்.

உலகத்து உள்பொருள்களை இருபெருங் கூறாகப் பகுத்துக் காட்டல் ஒல்லும். அவற்றுள் ஒன்று இயற்கைப் பொருள், மற்றது செயற்கைப் பொருள். செயற்கைப் பொருள் யாவும் மானுடத்தின் முயற்சியால் விளைவன. இயற்கைப் பொருளோ கைபுனைந்தியற்றாக் கவினுடையன. எனவே செயற்கைப் பொருளை உவமானமாகக் கொள்வதைக் காட்டிலும் கவின் உடையதும் சிற்றறிவினராகிய மாந்தரான் அன்றிப் பேரறிவாளனாகிய இறைவனால் படைக்கப்பெற்றமையால் குறைவில்லாததுமான இயற்கைப் பொருளை உவமானமாகக் கொள்ளவே சங்கப் புலவர்கள் விழைந்தனர்.

அகமாயினும் புறமாயினும் இயற்கைப் பொருள்களைக் கொண்டே பொருள் விளக்கம் தர அச்செந்நாப் புலவர்கள் முயன்றனர்; வெற்றியும் கண்டனர். ஆதலால் சங்கப் பாடல்களில் பயின்று வரும் உவமைகளில் உவமானப் பொருளாக இயற்கையே பெரிதும் கையாளப் பெற்றுள்ளமை இவண் குறிப்பிட வேண்டுவதாகும்.

இவ்வியல் புறப்பாடல்களில் பயின்றுவரும் உவமை அணியில் உவமானமாகக் கொள்ளப்பெற்றுள்ள இயற்கைப் பொருள்களை எடுத்துக்காட்டும் பொருண்மையில் அமைக்கப் பெற்றுள்ளது. ஆயினும் உவமேயப் பொருள்களைச் சுட்டுவதாக உள் தலைப்புகள் தரப் பெற்றுள்ளன. ஏன் எனின் உவமானத்தால் விளக்கம் பெறும் பொருள் உவமேயம் ஆதலால் அதனைச் சுட்டிக் காட்டுவதே உவமானத்தை எளிதில் உணரும் வழி எனக் கொண்டு அவ்வாறு சுட்டப்பெற்றது. இனி, சங்கப் புறப் பாடல்களால் காணப்பெறும் உவமைகளில் ஆளப் பெற்றுள்ள இயற்கைப் பொருள் குறித்து விரிவாகக் காண்போம்.

# பெண்

### கூந்தல்

சங்கப் புறப்பாடல்களின் இயற்கை உவமையில் பெண்ணைப் பற்றி வருணிக்கும் போது, இளம்பெண்ணின் கூந்தல் "மை போன்ற கரிய நிறம் உடையதாக விளங்கியது"[24] என்றும் "கருமேகம் போன்ற கூந்தல்"[25] என்றும் "மயிற் பீலிக் கற்றைப் போன்றது"[26] என்றும் உவமைகள் கூறப்பட்டுள்ளன. மேலும் கூந்தலுக்கு, கருமணலின் ஒழுகிய அறல் உவமையாகக் கூறப்பட்டுள்ளது.[27] அதே கூந்தலுக்கு அகுதை மன்னனின் கூடல் நகரில் உள்ள ஆழ்ந்த நீர்நிலைகளை உவமையாகக் கூறுகிறார் கபிலர், விறலியின் கூந்தலுக்கு வாழைப்பூ[28] உவமையாகக் கூறுவதோடு "உழத்தியரின் கூந்தல் பிடியின் கையை ஒத்த பின்னல் போன்று விளங்கிற்று"[29] எனச் சிறுபாணாற்றுப்படை கூறுகிறது.

முதுபெண்டிரின் கூந்தல் வெண்மையான சங்கினைப் போன்றும்,[30] கொக்கின் வெண்ணிற இறகினைப் போன்றும்[31] விளங்கியது.

### முகம்

நுளைச்சியரின் முகம் மதி போன்று இருந்தது.[32] செல்வ மகளிரின் முகங்கள் மேகத்தில் மறைந்தும் தோன்றியும் காணப்படும் திங்களைப் போன்று மாளிகையின் பெருங்கொடிகளால் மறைந்தும் வெளிப்பட்டும் தோன்றுகிறதாம்.[33]

### கண்

பெண்ணின் கண்ணுக்குப் பூ[34] என்று பொதுவாகவும், தாமரை மலரும்[35], குவளை மலரும்[36] சிறப்பாகவும் உவமைகளாகக் கூறுப்பட்டுள்ளன. மேலும் நீலமலர் போன்று மைபூசப் பெற்ற கண்கள்[37] எனவும், நறவம் பூவின்

இதழ் போன்ற கண்[38] எனவும், ஒப்பு நோக்கப்பெற்றுள்ளது. பெண்ணின் கண்ணுக்குப் பெண்மான் போன்ற மருண்ட கண்[39] எனப் பரணர் புறநானூற்றில் சுட்டிச் செல்கிறார். இரவ மரத்தின் விதையைப் போலச் சுருங்கிய கண்ணையுடைய முதியவள்[40] என்று புறநானூறு கூறுகிறது.

**உதடு**

"ஆடுகோட்பாட்டுச் சேரலாதனின் மனைவியின் உதடுகள் ஊடலால், நீர்ப்பெருக்கின்போது அசையும் தளிரைப் போல் நடுங்கின"[41] எனக் காட்டுகிறார் புலவர்.

**பற்கள்**

மகளிரின் பற்கள் முத்து[42] போல் வெண்மையானவை என்றும், முள் போன்று கூர்மையானவை[43] என்றும் ஒப்புமை செய்யப்பட்டுள்ளன.

**தோள்**

பெண்ணின் தோளுக்கு மூங்கில்[44] உவமையாகக் கூறப்பட்டுள்ளது.

**நகில்**

கோங்கினது அரும்பு போன்ற இளநகில்[45] என்று நகில் உவமிக்கப்பட்டுள்ளது.

**சுணங்கு**

வேங்கைப் பூவின் தாது போன்ற சுணங்கு[46] என்றும் பொன் உரைத்தது போன்ற திதலை[47] என்றும் இயற்கையோடு இயைத்துக் கூறப்பட்டுள்ளது.

**மேனி**

மகளிர் மேனி நிறத்துக்கு மாந்தளிர்[48] உவமை கூறப்பட்டுள்ளது.

**கை விரல்**

காந்தள் அரும்பினைப் போன்றது கைவிரல்.[49]

**இடை**

கொடி போன்ற இடையுடையவள் விறலி.[50]

**முதியவளின் அடி வயிறு**

தாமரை இலை போன்ற அடி வயிற்றை உடையவள் முதியவள்.[51]

**தொடை**

பிடியின் கை போன்றது தொடை[52] என்று சுட்டப்பட்டுள்ளது.

**அடி**

ஆடுகோட்பாட்டுச் சேரலாதன் மனைவியின் பாதஅடி ஒளிபொருந்திய மலரைப் போன்று விளங்கியது.[53] விறலியின் பாதஅடி நாயின் நாக்கினைப் போன்று இருந்தது[54] என்று பெருங்கௌசிகனார் கூறுகிறார்.

“இரு பொருள்களுக்கிடையே உள்ள பொதுப் பண்பினைக் கண்டு முதன்முதலாக உவமை வகுப்பவன் கவிஞனேயாவான்” எனுங் கருத்தைப் பொருத்தமுறக் கூறியுள்ளார் லியான் என்ற அறிஞர்.[55] இக்கருத்தினை மேற்சுட்டிய சங்கப் புலவர்தம் உவமைத் திறத்தால் நன்கு விளங்கிக் கொள்ளலாம்.

**நடை**

மகளிர் நடைக்கு மயிலின் சாயல்[56] உவமை கூறப்பட்டுள்ளது. சூல் கொண்ட மகளிர் மயில் போல மெல்லமெல்ல கடவுளை வணங்க நடந்து சென்றர்.[57] என்று மதுரைக்காஞ்சி கூறுகிறது.

தாமரை மலர், தாமரை அரும்பினைப் பிடித்தாற் போன்று பெண்டிர் தம் பிள்ளைகளின் கைகளைத் தம் கைகளால் பிடித்தபடி சென்று புத்தபகவானை வழிபட்டதாக மாங்குடி மருதனார் குறிப்பிடுவார்.[58]

**கைம்மைப் பெண்டிர்**

வெளிமான் என்பவனைக் கூற்றுவன் கவர்ந்தான். கணவன் இறந்த பின்னர் அவன்தன் மகளிர் தம் மார்பில் அடித்துக் கொண்டு புலம்பும்போது கைவளையல்கள் உடைந்து சிதறின. அவை வாழைப்பூ சிதறுதலைப் போன்று விளங்கின.[59]

கரிகாலன் மறைந்தான். அவனுடைய உரிமை மகளிர் அருங்கலங்களைக் களைந்தனர். அந்த நிகழ்வின் தோற்றம் எப்படி இருந்தது? மழை பெய்யாமையால் அருவி நீரின் வருகை குறைவுபட்டது. அத்தகைய வறட்சிடம் உண்டான காலத்தில் ஆயர் தம் பசுக்கூட்டத்தைக் காத்தற்பொருட்டாக, வேங்கை மரத்தின் கிளைகளைப் பூக்கள் உதிருமாறு தம் கையிலுள்ள வாளால் வெட்டினர். தழைகள் பூக்கள் அற்று நின்ற வேங்கை மரம் போல் கரிகாலனின் உரிமை மகளிர் அருங்கல அணிகளைக் களைந்து காணப்பட்டனர்.[60]

கைம்பெண்கள் வளையல்களை நீக்கியதால் அந்த வளையல்கள் இருந்த கைகளின் பகுதி வெண்மையாக விளங்கிற்று. அந்தக் கைகள் பட்டை நீக்கப்பட்ட மூங்கிலைப் போன்று[61] இருந்ததாக உவமிக்கப்பட்டுள்ளது. மேற்குறித்தவை முறையே வெளிமானைக் காணச்சென்ற பெருஞ்சித்திரனார், அவன் இறந்ததற்காக இரங்கிப் பாடியதால் கையறுநிலை என்ற துறைபாற்பட்டது. கரிகாலன் இறந்ததை எண்ணிக், கருங்குழல் ஆதனார் இரங்கிப் பாடியதால் இதுவும் கையறுநிலை என்ற துறையதாகும்.

குளம்பாதாயனார் காட்டில் கணவனை இழந்தாளின் துயர்நிலையைப் பாடுவதால் இது முதுபாலை என்ற துறையின்கண்படும். இவை மூன்று நிகழ்வுகளுமே பொதுவியல் என்ற திணைக்கு உரியனவாகும்.

பாடினியைப் பற்றிய வருணனை பொருநர் ஆற்றுப்படையிலும்,[62] விறலியின் வருணனை சிறுபாணாற்றுப்படையிலும்[63] காண முடிகிறது. அவர்களை வருணிக்கும் போது முடிமுதல் அடி வரை (கேசாதி பாதம்) வருணிக்கும் மரபு கடைபிடிக்கப்பெற்றுள்ளன. இது மானிடர்களை வருணிக்கும் மரபாக உள்ளது.

சிறுபாணாற்றுப்படையில் விறலியின் அங்க அவயங்கள் தொடர்ச்சியாக ஒன்றன்பின் ஒன்றாக வருணிக்கப்படுவது மாலை உவமை என்பர். சந்தான உவமை என்பதும் இதுவேயாகும். இச்சிறுபாணாற்றுப்படை அடிகளைப் பேராசிரியர் – தொல்காப்பியம்– உவமயியல் சூத்திரம் 36க்கு எடுத்துக்காட்டுவர்.[64]

கின்னரப் பறவையைப் போன்று விறலியர் யாழிசையுடன் பாடக் கூடியவர்.[65]

**சிறார்**

வறுமையில் உழலும் விறலியின் பிள்ளைகள் செம்மறி ஆட்டினைப் போன்று பொலிவற்ற தலையையுடையராய்க் காணப்பட்டனர்.[66]

அரசச் சிறுவனின் வாய் பவளம் போன்றிருந்தது.[67] அத்தகைய பிள்ளைகளுடன் அரசனை வாழ்க என வாழ்த்தலான், இது பாடாண் திணையாயிற்று. மலைப்பகுதியில் செல்லும் வழியைக் கூறும் போது அவ்வழியில் கிளைகளில் குரங்கள் இருக்கும். அதன் குட்டிகள் இருக்கும். அவற்றையே பார்த்துக் கொண்டு இருக்க வேண்டாம். அத்தகைய பிள்ளை போன்ற குரங்குக் குட்டிகளைக் கடந்து செல்வீராக[68] என்று பெருங்கௌசிகனார் கூறுவர்.

கூத்தரின் பிள்ளைகள் கிளைகளில் ஏறி ஆடுவதைப் போன்று குரங்குக் குட்டிகளும் ஏறி ஆடின என்ற குறிப்புப் பொருள் இதில் இருப்பதை அறிய முடிகிறது.

இரு பொருள்களைப் பொதுநோக்காகக் பார்க்கும் எவர்க்கும் அவற்றிடையே உள்ள முரணும் மாறுபாடுமே தெரியும். ஆயின், அவற்றிடையே உள்ள ஒற்றுமையும் உறவும் நுணுகிப் பார்க்கும் திறனுடையார்க்கே தோன்றும். அத்தகைய திறமை கவிஞர்களுக்கே உண்டு. ஆதலால், இரு பொருள்களிடையே உள்ள பொதுப் பண்பினைக் கண்டு முதன்முதலாக உவமை வகுப்பவன் கவிஞனேயாவான்.[69]

**அணிகலன்**

சேரமான் வஞ்சன் என்பான் திருத்தாமனார் என்ற புலவருக்கு மணிமாலை பரிசளித்தான். பல மணிகள் பதிக்கப்பெற்ற அம்மாலை வரை போன்ற மார்பினில் பாம்பு போல் வளைந்து, பிறைநிலவு போல் ஒளி வீசியது.[70]

ஞாயிறு போல் ஒளி வீசுகின்ற மணிகளால் ஆன மாலை, அரசன் மார்பினில் விளங்கியது.[71]

வானத்தில் மின்னல் தோன்றுவது போன்று ஒளி வீசும் பொன்னரி மாலையைப் பாடினி கூந்தலில் அணிந்திருந்தாள். இருள்வான், நீண்ட கருமையான கூந்தலுக்கும், மின்னல் பொன்னரி மாலைக்கும் உவமைகளாயின.[72] மின்னல் தோன்றி மறையக் கூடியது. அதுபோன்று பாடினி, பரிசால் பெற்ற பொன்னரி மாலையும் அவளிடத்திலே நில்லாமல் வறுமையின் காரணமாக அவளிடமிருந்து அழியக் கூடியது என்ற குறிப்புப் பொருளைத் தருகிறார் புலவர்.

பெண்கள் நெற்றியில் அணியும் தலைக்கோலம் என்ற அணி சுறாமீன் வாய்திறந்த தோற்றம் போன்று விளங்கியது.[73]

பொய்கையில் செங்குவளை மலர், நீலப்பூ, முரட்பூ எனப் பல வண்ண மலர்கள் மலர்ந்திருந்தன. அந்தப் பல்நிற மலர்களுக்கு இந்திர வில்லாகிய வானவில் உவமையாகக் கூறப்பெற்றுள்ளது.[74] அணிகலன்கள் மின்னல் போன்று ஒளிவீசக் கூடியதாக விளங்கின.[75]

## வளம்

### மலை

வாழ்வுக்கு வளம் சேர்ப்பது உழவுத் தொழிலாகும். உழவுத் தொழிலின் பயன்களுள் ஒன்று நெல்லாகும். உழவர்கள் நெற்போரினை மலைபோன்று குவித்து வைத்தனர்.[76] அதிலிருந்து நீக்கப்படும் வைக்கோலையும் மலை போல் குவித்தனர். கடாவிட்டுக் குவித்த நெல்லை வலிய வில்வீரர்களுக்கு உணவாகக் கொடுத்தனர்.[77]

அரண்மனைகளுக்கு மதில்கள் அமைத்தனர். அவை மலையின் உச்சியைப் போன்று உயரமுடையதாக விளங்கின.[78]

### காடு

சிறந்த நாட்டுக்குக் காட்டு வளம் மிக அவசியமாகும். இரவு ஓரிடத்தில் உறங்குவதைப் போன்ற செறிந்த இருளுடைய காடு[79] என்று கற்பனை நயம்படக் காட்டுவளம் உவமிக்கப்பட்டுள்ளது. குளத்தைக் கண்டாற் போன்ற குளிர்ந்த காடு என்று உவமிக்கப்பட்டுள்ளது. குளம் எவ்வாறு உயிர்களுக்குப் பயன்படுகிறதோ அது போலக் காடும் அனைத்து உயிரினங்களுக்கும் பயன்படுகிறது என்ற குறிப்புப் பொருளையும் பெருங்கௌசிகனார் அறிவுறுத்துகிறார்.

## நீர்

நள்ளியின் மலை பளிங்கு போல் வெண்மையான நீர் வளம் பெற்றிருந்தது.[80] தைப்பனியால் குளிர்ந்த தெளிவான குளத்தின் நிறை நீர், எடுக்க எடுக்கக் குறையாததைப் போன்று சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவனின் நகர் கொடுக்கக் கொடுக்கக் குறையாததாக விளங்கிற்று.[81] இது கிள்ளிவளவனின் கொடையைப் பற்றிக் கூறுவதால் பாடாண் திணை ஆகும். சிறு குளத்தில் கரை எட்டாம் நாள் பிறை நிலவினைப்போன்று வளைந்திருந்தது.[82] குளத்தைக் கண்டாற் போன்ற குளிர்ந்த காடு,[83] இரவுக் காலத்து இருள் போன்ற ஆழமான மடு[84] என்ற உவமைகள் சிறப்புடையதாக உள்ளன.

## உணவும் பிறவும்

வேங்கைப் பூவிற்கு மூங்கில் அரிசியும்[85] அவரைவிதையின் பருப்பும்[86] உவமை கூறப்பட்டுள்ளன. நெல் பொன்னை அளவாக நறுக்கியது போன்று விளங்கியது.[87] கழனிகளில் நெல்விளைச்சல் சிறப்புற்றிருந்தது. கழனியில் நெல்லின் தாள் மூங்கிலைப் போன்று வளம்[88] பொருந்தி வளர்ந்து செழிப்புற்றது.

அரும்புகளையுடைய அவரைக் கொடி பவளத்தைப் போல் மலர்ந்தது[89] என்றும் இலைகளையுடைய சேம்பு வாய் அகன்ற சோறு படைக்கும் பாத்திரம் போன்று செழித்தது[90] என்றும் உவமிக்கப்பட்டுள்ளன. இதில் சேம்பின் அடியானது பானைக்கும் (பாத்திரத்திற்கும்) இலை அகன்ற வாய்க்கும் உவமையாகும். வெண்கடம்ப மரத்தின் வெண்மையான மலரைப் போன்று குறும்பூழ்ப் பறவையினது பார்ப்பின் தோற்றம் அமைந்துள்ளது[91] என்று உவமிக்கப்பெற்றுள்ளது.

நீர்வளம் சிறப்புற்று விளங்கியதால் அதில் வாளை மீன்கள் மேற்பரப்பில் துள்ளிக் குதித்தன. அவ்வாளைமீன் திரண்ட கொம்பினைப் போன்ற மீசையை உடையதாக[92] விளங்கியது.

முதிரை மலைச்சாரலில் பலவின் கனியையுண்ட கடுவன் பஞ்சு போன்ற தலைமயிரையுடைய பெண் குரங்கினைக்[93] 'கனி உண்ண அழைக்கின்ற வளமுடையது உன் மலை' என்று பெருஞ்சித்திரனார் குமணனிடம் கூறுகிறார். இதில் கடுவன், தான் பலவின் கனியை உண்டது மட்டுமின்றித் தன் உறவான மந்தியையும் அழைத்து, அதற்கும் அளிக்கிறது. அது போல் நீயும் எமக்குப் பரிசில் நல்க வேண்டும் என்ற குறிப்புப் பொருளைப் பெற வைப்பதால் இது பரிசில் கடா நிலையாகும். கதிர் போன்ற கொம்பை உடையது ஆண் நத்தை[94] என்று உவமிக்கப்பட்டுள்ளது. மகளிர் கரையில் பொலங்குழையைக் கழற்றி வைத்து விட்டுப் புனலாடுகின்றனர். மீன் கொத்திப்பறவை அப்பொலங்குழையை இரையென மயங்கி எடுத்துச் சென்று, வேள்வி இயற்றிய தூணின் உச்சியில் அமர்ந்திருந்தது. அது யவனர் கூம்பின் மேல் இட்ட அன்னப்பறவையைப் போன்றும், வெள்ளி மீனைப் போன்றும் ஒளியுடன் விளங்கியது என்று பெரும்பாணாற்றுப் படையில் நயமுற எடுத்தியம்புகிறார் உருத்திரங்கண்ணனார்.[95] இந்நிகழ்ச்சியில் மீன் கொத்திப் பறவைக்கு அன்னப்பறவையும் வேள்வித் தூணுக்கு ஒந்திம விளக்கும், பொலங்குழைக்கு வெள்ளி மீனும் உவமைகளாயின.

வரகு குதிர்களுக்குப் பெண் யானைக் கூட்டமும்[96] வரகு திரிகைக்குக் களிற்றியானையின் காலும்[97] உவமிக்கப்பெற்றுள்ளன. யானை மென்று துப்பிய கவளத்தின் கோது போல் மதுப்பிழிவார் எறிந்த கோதுகளிலிருந்து மதுச் சிதறும்.[98] அவ்வாறு சிதறிய மது சேறாகி நாற்புறமும் ஒழுகும் வளமிக்கது பறம்பு மலையாகும் என்று கபிலர் பறம்பு மலை வளத்தைப் பாடியுள்ளார்.

யானையின் உடம்பு எவ்வாறு சொரசொரப்பாக உள்ளதோ அது போன்று தென்னையின் வாடிய மடல் சொரசொரப்பாக விளங்கியது.[99] பிடியின் முழந்தாளைப் போன்று கவலைக் குழிகள் தோறும் கவலைக் கிழங்குகள் சீரியதாகக் கீழே வளர்ந்தன.[100]

வளைந்த பலா மரத்தில் தொங்கும் பலாப்பழம் போல் கழுதையின் முதுகில் இருபக்கமும் சம எடையுள்ள மிளகு மூட்டைகளை[101] வணிகர்கள் ஏற்றிச் சென்று வாணிகம் செய்தனர்.

கடல் கொணர்ந்து ஒதுக்கிய அகில் மர விறகு, ஒட்டகம் உறங்கிக் கிடந்தது போன்று தோன்றும். அத்தகைய வளத்தினை உடையது எயிற்பட்டினத்தின் சிறப்பு என்று[102] நல்லூர் நத்தத்தனார் கூறியுள்ளார்.

“உழவு செய்து நீங்கிய எருது வைக்கோலைத் தின்பது போல் செங்கண் மகளிர் தரும் தேறலை மாந்திப் புகழ் பெற்று வாழ்க தலைவனே”[103] என்று வாழ்த்துவதன் வாயிலாகச் செல்வ வளத்தைப் புலப்படுத்துகிறார் கவிஞர்.

மதுவை உண்டு ஊடல் கொண்ட மகளிர் சினத்தால் தம் மாலையை அறுத்தெறிந்தனர். அது முத்துடன் பொன்னை உருக்கும் நெருப்புச் சிந்திய நிலத்தைப் போன்று இளையதாகிய பச்சைப்பாக்குடன் முத்தொழிந்த மாணிக்கமும் மரகதமும் பொன்னும் மணிகளும் விழுந்து கிடப்பதைப் போன்று விளங்கின[104] என்பதனாலும் நாட்டின் செல்வ வளம் விளக்கமுறுகிறது.

பாரியின் பறம்பு மலையானது வானத்தைப் போன்று உயர்ந்தது எனவும் அவன் மலையில் விண்ணில் உள்ள மீன்கள் போன்றவை சுனைகள் என்றும் உவமித்துள்ளார் கபிலர்.[105]

பெருஞ்சேரல் இரும்பொறையின் படைப்பெருக்கம் ஆடுகள் பரவியதைப் போன்று குதிரைகளும், பசுக்கள் பரவியதைப் போன்று யானைகளும் இருந்தன.[106]

பூந்தாது போன்ற சுண்ணாம்பு[107] பிறை போன்ற சுண்ணாம்பு, குளிர்ந்த நீர்நிலை போன்ற அரண்மனை[108] என உவமிக்கப்பட்டுள்ளதால் நாட்டின் வளம் வெளிப்படுகிறது.

**வளம்**

இனி, வளம் என்ற பகுதியில் இயற்கைக்கு இயற்கையே உவமையாகக் கூறப்பெற்றுள்ள இடங்களும் உண்டு.

**மலை முதலியன**

நிலமகளின் நகில் போன்று மலையும், அவளின் ஆரமாக ஆறும் விளங்கின.[109] மலையில் தோன்றும் சுனைநீர் பளிங்கு போன்றிருந்தது.[110] மலையில் காணப்படும் கருங்கல் எருமை போன்றிருந்தது[111] என்றும் ஒன்றுடன் ஒன்று நெருங்கிக் காணப்படும் துறுகற்கள் யானைகள் போரிடுவதைப் போன்றிருந்தன[112] என்றும் கற்பனை நயம்பட உவமிக்கப்பட்டுள்ளன. இருளுக்கும்,[113] கிடங்கில் உள்ள நீருக்கும்,[114] பயிருக்கும்,[115] நீலமணி உவமைப்படுத்தப்பட்டுள்ளது. கிடங்கில் உள்ள நீருக்கு நீலமணி பயன்படுத்தப்பட்டுள்ளதால் கிடங்கு மிகவும் ஆழம் உடையது என்ற பொருளும் விளக்கம் பெறுகிறது.

காற்று, கடல் போன்று ஒலிக்கும்[116] என்றும் மேற்குக் கடலில் கடலலை இடி போன்று முழங்கும்[117] என்றும் உவமிக்கப்பட்டுள்ளன. கடற்கரையில் உள்ள மணலுக்கு முத்தும்,[118] நிலவும்[119] உவமைகளாயின. கடலைச் சார்ந்த உப்பங்கழியின் நீர் நீலமணி போன்ற நிறமுடையது.[120]

**தாவரம்**

தாமரைமலர்,[121] அசோகமலர்[122], மரா மலர்[123], செங்காந்தள் மலர்[124], காஞ்சிமலர், முருக்கமலர்[125] ஆகிய மலர்கள் நெருப்புப் போன்று உள்ளனவாக உவமிக்கப்பெற்றுள்ளன. இருள்வாசிப் பூ காக்கைச் சிறகினைப் போன்று கரியநிறம் கொண்டதாகும்.[126] பொய்கையில் குவளை, நீலமலர், முரட்பூ ஆகிய மலர்கள் மலர்ந்திருப்பது இந்திரவில்லைப் போன்று காட்சியளிப்பதாக அழகுபட உவமிக்கப்பெற்றுள்ளது.[127] அவரைப் பூ[128], நெய்தற் பூ[129], ஆகிய மலர்கள் மணி போலும், சுழிமுள்ளி மலரும்[130] எள்ளின் தோடும்[131] நீலமணி போல விளங்கும் என்று உவமிக்கப்பட்டுள்ளன.

செருந்தியும்[132], வாகையும்[133] பொன்போன்று பூப்பூக்கும். சங்கு உடைந்தாற் போன்ற இதழையுடைய வெண் காந்தட்பூ[134], காந்தள் மலர் கைவிரல்[135] போன்றும் முசுண்டைக் கொடியின் மலர் கார்த்தளை மீனைப் போன்றும்[136] முல்லை வெள்ளி போன்றும் மலரும்[137] என்று உவமிக்கப் பெற்றுள்ளன. அதிரல் கொடியின் மலர் குயில் வாய் அலகினைப் போன்ற கூர்மையான மொட்டுகளையுடையது.[138] இதனைக் காட்டு மல்லிகை என்றும் கூறுவர். இது நிரம்ப மலராமல் கொடியின் ஒரோ வழி பூக்கும். வீரர்கள் இதனைத் தங்கள் தலையில் சூடிக் கொள்வர்.

தாழை மலர் அன்னம் போன்று மலரும்[139] புன்னை முத்துப் போல் அரும்பு ஈனும்[140], காயா மலர் மயில் கழுத்தைப் போன்று மலரும்[141] ஊகம்புல்லின் பூ அணிலின் வால் போல் மலரும்[142] என்று கூறப்பட்டுள்ளன.

முல்லை அரும்பு, காட்டுப் பூனைக் குட்டியின் பற்கள்[143] போல முகிழ்ந்தன என்று மிக அழகாக உவமிக்கிறார் கபிலர். கார் காலத்தில் மழை பொழிகிறது. அந்த மழையில் களிறு நனைகிறது. அப்போது அதன் முகத்தில் உள்ள புள்ளிகளைப் போன்று தெறுழ் கொடியின் மலர் மலரும் என்று மிக நயம்பட, கபிலர் கூறியுள்ளார்.[144]

ஆடுகோட்பாட்டுச் சேரலாதனைக் காண அரசர் முதலியோர் குழுமியிருந்தனர். அவர்கள் குழுமியிருந்த பந்தலில் கண் போன்ற நெய்தல் மலர்கள் தொங்கவிடப்பட்டிருந்தன.[145] இதில் குறிப்புட் பொருளையும் தருகின்றார் காக்கைபாடினியார் நச்செள்ளையார். நெய்தல் மலர்கள் [illegible] ஆடுகோட்பாட்டுச்சேரலாதனின் பெருமையைத் [illegible] தம் கண்கொண்டு பார்ப்பதாகக் கூறப்பட்ட உவமை சிறந்ததாக விளங்குகிறது.

வரகு இலை தழைத்து ஓங்கி, கரிய தண்டு நீண்ட பாளை விரிந்து, கதிரின் அடியும் தலையும் காய்ந்து வளமுற்றிருந்தது. அதனை ஈன்றணிமையுடைய மென்மையான மயில் என்று கபிலர் ஒப்புநோக்கியுள்ளார்.[146] அத்தகைய காய்ந்த வரகினைப் [illegible] புனத்திலிருந்து அறுப்பர் என்று பறம்பு மலையின் வளத்தைக் கபிலர் கூறுவார்.

முல்லை நிலத்தில் தினைக் கதிர்கள் வளைந்து செழிப்புற்று விளங்குகின்றன. அக்கதிர்கள் ஒன்றுடன் ஒன்று நெருங்கிக் காணப்படுகின்றன. அக்காட்சி யானைக் கன்றுகள் விளையாட்டாகப் பொய்யாகப் போரிடும் போது அவற்றின் கைகள் ஒன்றுடன் ஒன்று பிணைந்து தோன்றுவது போல விளங்கியது[147] என்று கூறுமிடத்து முல்லை நிலவளம் வெளிப்படுகிறது.

எருமைக் கொம்பு போன்று பச்சைப் பயிற்றின் காய்[148] விளங்கியது என்றும் உரித்த வெண்மையான வாழைப்பழம் பிடியின் மருப்புப் போன்று விளங்கிற்று[149] என்றும் மிகப் பொருத்தமுற புதுமையான உவமைகள் சங்க இலக்கியத்தில் கையாளப்பெற்றுள்ளமையை அறியமுடிகிறது.

**மரம்**

கமுகின் தண்டிற்கு மழைக்கால் உவமை கூறப்பட்டுள்ளது.[150] மழைக்கால் எவ்வாறு ஒற்றையாக நேராக இருக்கிறதோ அதுபோன்று கமுகின் தண்டும் விளங்குகிறது என்ற நயம் இயற்கையோடு ஒத்து மிகச் சிறப்புடையதாக விளங்குகிறது.

பலாக்கனி முட்டைபோன்ற வடிவுடையது.[151] பலாப்பழத்தின் வெளியே வண்டுக் கூட்டங்கள் மொய்க்கின்றன. பலாக்கனி இனிய சுவையுடையது, அரிவாளால் அறுக்க முடியாதது; மரத்தில் உண்டானது; வழிச் செல்வோருக்கு உணவாகக் கூடியது; அவர்களின் களைப்பினைப் போக்கக் கூடியது.

அழகான பெண் ஒருத்தியின் தந்தையிடம் அரசன், பெண் கேட்கிறான். அவள் தந்தை பேச்சை இழுத்துக் கொண்டு போனானேயன்றி அரசனின் விருப்பத்திற்கு உடன்படவில்லை. அதனால் அவள் அவ்வூருக்குக் கேடுதரப் பிறந்தவளேயாவாள் என்பதை விளக்கவந்த மருதன் இளநாகனார் காட்டுப் பெருமரத்தில் பட்ட சிறுதீ அக்காட்டினையே அழிப்பது போல், அவள் அவ்வூரை அழிக்கும் அணங்காயினாள்[152] என்ற உவமையைக் கையாண்டுள்ளார். இவ்வுவமை சிறப்புடையதாக உள்ளது. இதில் பெண் தர இசையாததால் இது 'மகட்பாற்காஞ்சி' என்னும் துறையாயிற்று.

**நீர் வாழ்வன**

வரால் மீன் பெண் யானையின் துதிக்கையினைப் போன்றிருந்தது.[153] அவ்வரால் மீன்களை மருதநில மக்கள் கூத்தருக்கு விருந்தாக அளித்தனர் என்று மலைபடுகடாம் கூறுகிறது. ஆரல் மீன் கதிர் முளை போன்ற மூக்குடையது[154] என்று உவமிக்கப்பெற்றுள்ளது.

**பறப்பன**

தேனீக்கள் உயர்ந்தோங்கிய மலை முகட்டில் கூடு கட்டின. அத்தேன்கூடு பருதியைப் போன்றிருந்தது.[155]

செல்வக்கடுங்கோ வாழியாதனின் வீரர்கள் பனைக்குருத்துடன் கூடிய வாகைப் பூ மாலையை அணிந்திருந்தனர். பனங்குருத்தும் வாகைப்பூவும் சேர்ந்திருக்கும் மாலைக்கு முல்லைப் புதரினை மொய்க்கும் வண்டினத்தை உவமையாக்குகிறார் கபிலர்.[156]

பனைக்குருத்து வெண்மையாகவும் வாகைப்பூ நீல நிறமாகவும் விளங்குவன. ஆதலால் பனையுடன் தொடுக்கப்பட்ட வாகைப்பூவுக்கு முல்லைப் புதரினை மொய்க்கும் வண்டினம் உவமையாயிற்று. இப்பாடலுக்குத் தலைப்பும் **'புதல் சூழ் பறவை'** என அமைந்துள்ள பாங்கு, நயம்பயப்பதாக விளங்குகிறது.

## விலங்குகள்

**ஊர்வன**

மரம்கிடந்தாற் போன்ற பாம்பு[157] மாசுணம் என்ற பெரிய பாம்பு யானையையே விழுங்கக் கூடியதாகும். இதன் வாயிலாக அச்சம் தரத்தக்க மலைவளம் மலைபடுகடாத்தில் கூறப்பட்டுள்ளது.

**நடப்பன**

பசுவின் பாலுக்குச் சங்கு உவமை கூறப்பட்டுள்ளது.[158] சங்கு போன்ற வெண்மையான பசுவின் பாலினை ஆயமகளிர் கூத்தர்களுக்கு விருந்தில் அளித்தனர். குறுமுயல் சம்பங்கோரையின் கதிர் போலும் மயிரினை உடையது.[159] பன்றி இருள் அற்றுக் கிடந்ததைப் போன்ற நிறமுடையது.[160]

வேங்கை மலர்கள் கரும்பாறையின் மீது விழுந்து பரவிக் கிடக்கிறது. அது பெரிய வரிப் புலியின் முதுகினைப்போன்று காட்சியளிப்பதாக[161] கபிலர் கூறியுள்ள உவமையின் திறம் சிறப்புடையதாக உள்ளது.

ஆடு வெண்மையான கொட்டை போல் பிழுக்கையை வெளிப்படுத்தின.[162] அதற்குக் காரணம் அந்த ஆடுகள் தழைகளைத் தின்னாமல் குமிழம் பழங்களைத் தின்றதால் வெண்மையான பிழுக்கைகளை வெளிப்படுத்தியது எனலாம். அவ்வளவு வளமுடையது அப்புன்செய் நாடு என்று ஆலந்தூர் கிழார் கூற்றால் அறிய முடிகிறது.

**மனிதன்**

கூத்தரின் பிள்ளைகள் மூங்கிலின் மீது ஏறி ஆடுவர். அது போலக் குரங்குக் குட்டிகளும் விளையாடும் மலை எனப்[163] பெருங்கௌசிகனார் கூறுவார்.

# இசைக் கருவிகள்

**யாழ்**

பேரியாழ், சீறியாழ், மகரயாழ், சகோடயாழ் என யாழில் பலவகையுண்டு. யாழ் திருமணப் பெண்ணின் கூந்தலைப் போன்று நறுமணம் உடையது.[164] பேரியாழ் 1.தோல் 2. துளை 3. போர்வை 4. வாய் 5. கடை 6. வார்க்கட்டு 7. தண்டு 8. நரம்புக் கட்டு ஆகிய எட்டு உறுப்புகளைக் கொண்டதாகும்.[165]

**1. தோல்**

யாழின் தோல் விளக்குத் தீப்பிழம்பின் சுடர்நிறம் போன்ற நிறமுடையது என்று பொருநராற்றுப்படையும்[166] மின்னலைப் போன்ற நிறமுடையது என்று புறநானூறும்[167] பாதிரி மலரின் உள்ளிடம் போன்று சிவந்த நிறமுடையது என்று பெரும்பாணாற்றுப்படையும்[168] கூறுகின்றன.

**2. துளை**

வரகின் கதிர் போன்று நெருங்கிய துளைகளையுடையது யாழ் என்று மலைபடுகடாமும்[169] பாக்கு மரத்தின் பாளைப்பூ விரியாமல் கருக் கொண்டிருந்தது போன்று இரண்டு பக்கமும் துளையுடன் விளங்கியது என்று பெரும்பாணாற்றுப்படையும்[170] கூறுகின்றன.

**3. போர்வை**

சிவந்த அழகிய பெண்ணின் கருக்கொண்ட அடிவயிற்றின் மீதுள்ள அழகிய மயிர் ஒழுங்கு போன்றது யாழின் போர்வை.[171]

**4. வாய்**

நீர்ச்சுனை வற்றி உள்ளே இருண்டதைப் போன்ற உள்நாக்கு இல்லாதது யாழின் வாய் என்ற உறுப்பாகும்.[172]

**5. கடை**

முதல் பிறை நிலவு பிறந்து ஏந்தியிருப்பது போன்ற பிளவுபட்ட கடையைக் கொண்டது யாழ்.[173]

**6. வார்க்கட்டு**

பெண்ணின் முன்கைத் தொடியைப் போன்றது என்று பெரும்பாணாற்றுப்படையும்[174] கரியளின் முன் கையிலுள்ள நெருங்கிய வளையல்களைப் போன்றது என்று பொருநராற்றுப்படையும்[175] குரங்கு, பாம்பின் தலையைப் பிடித்த போது அப்பாம்பு குரங்கின் கையை ஒருகால் இறுகவும், ஒரு கால் நெகிழவும் சுற்றும் அது போன்று வார்க்கட்டு தண்டிடத்துச் சுற்றப்பட்டது என்று சிறுபாணாற்றுப்படையும்[176] கூறுகின்றன.

### 7. தண்டு

நீலமணி வரிசையாய் இருத்தலைப் போன்ற கரிய நிறம் கொண்டது என்று பெரும்பாணாற்றுப்படையும்[177] வளர்பிறையின் எட்டாம் நாள் நிலவு போன்ற வடிவத்தில் உள்நாக்கு இல்லாத பாம்பு தலை தூக்கியதைப் போன்ற கருமையான தண்டு என்று பொருநராற்றுப்படையும்[178] கூறுகின்றன.

### 8. நரம்புக்கட்டு

பொன்கம்பி பொருந்தியிருப்பதைப் போன்ற முறுக்கு அடங்கிய நரம்புக்கட்டு உடையது யாழ்[179] ஆகும். இதுபோன்ற உறுப்புகளைச் சீறியாழும் பெற்றுள்ளது. யாழ் புது மணப்பெண் போல அழகுடன் விளங்கியது.[180] சீறியாழில் வண்டின் ஒலி போன்ற இசையெழும்.[181]

### தடாரி

தடாரி என்பது பறையாகும். இது கிணை என்றும் ஒருகண் இரும்பறை என்றும் வழங்கப்படும். இது ஒருவகை மருதப்பறையாகும்.[182] தடாரி, களிற்றின் அடிச்சுவட்டினைப் போன்றது[183] என்றும் முழு மதி போன்றது[184] என்றும் பெண்ணின் கண் போன்றது[185] என்றும் வயலாமையின் வெண்மையான வயிற்றினைப் போன்றது[186] என்றும் உவமிக்கப்பெற்றுள்ளன.

படம் விரிந்த பாம்பினது பொறியை ஒப்பத் தடாரியில் இசைப்பவரின் கைவடு விளங்கியது.[187] தடாரிப் பறைக்குக் களிற்றின் அடிச்சுவடு உவமை செய்யப்பட்டுள்ளது. அதே போன்று ஒருகண் மாக்கிணைக்கும் களிற்றின் அடிச்சுவடு உவமை செய்யப்பட்டுள்ளதால்[188] ஒருகண் மாக்கிணையும் தடாரியும் ஒன்றே என்பதை அறிய முடிகிறது.

### உடுக்கை

கயத்து ஆமையை அம்பிலே கோத்தாற் போன்றது உடுக்கை[189] ஆகும்.

**முழவு**

இது 'மத்தளம்' என்றும் வழங்கப்படும். மற்றக் கருவிக்கெல்லாம் தளாமாய் உள்ளதால் மத்தளம் என்ற பெயர் பெற்றது. பலாப்பழம் போன்ற தோற்றமுடையது.[190] இரவலர்கள் தங்கள் இசைக் கருவிகளைப் பலா மரத்தில் மாட்டிச் சென்றனர். பலாப்பழத்தை மட்டுமே கண்டிருந்த குரங்கு, முழவினைப் பலாப் பழமென்றெண்ணி அதனை அடித்து ஒலியெழுப்பியது. அம்முழவு மேகம் போன்று ஒலித்தது.[191]

**முரசு**

முரசுக்கு இடியும்,[192] கடல் ஒலியும்[193] உவமைகளாகக் கூறப் பெற்றுள்ளன. முரசொலி சிறுமலையைத் தூவ எறிகின்ற ஓசையைப் போன்றது.[194]

**தூம்பு**

இது நெடுவங்கியம் என்றழைக்கப்படுகிறது. களிற்றின் நெட்டுயிர்ப்பினைப் போன்று ஓசையை எழுப்பும்.[195] இந்த இசைக்கருவிகளின் மூலம் பண்டைத் தமிழர் சிறந்த இசையறிவைப் பெற்றிருந்தனர் என அறியமுடிகிறது.

**உணவு**

புரவலர்களும் ஐவகை நிலமக்களும் இரவலர்களுக்கு விருந்தளித்தனர். அவர்கள் அரிசி, வரகு, தினை ஆகியவற்றின் சோற்றினை அளித்தனர். நெற்கதிர்கள் செங்குளவிக் கூட்டத்தைப் போன்று காணப்பட்டன.[196] அரிசி பொன்னை அளவாக நறுக்கி வைத்தது போன்று இருந்தது[197] நெல் சோறு முல்லை முகை,[198] ஈத்தின் விதை[199], கொக்கு நகம்[200] போன்று பலவிதமாக இருந்தன. வரகுச் சோறு சிறு பூளைப்பூ போன்றும்[201], தினைச் சோறு நண்டுப் பார்ப்பினைப் போன்றும் விளங்கின.[202]

**உண்கலம்**

உணவை உண்கலங்களில் பரிமாறினர். அவை ஞாயிற்றை ஏய்க்கும் பொற்கலங்களாகவும்,[203] விண்மீன் போன்ற வெள்ளிக் கலங்களுமாகவும்[204] இருந்தன.

**பொரியல்**

பருக்கைக் கற்கள் போன்ற பொரிக்கப்பட்ட பொரிகறிகள் அளிக்கப்பெற்றன.[205] நீர்நிலைகளிலே வீழ்கின்ற மழைத்துளிகளைப் போல நெய்யிலே கிடந்து துள்ளிய கறிவறுவல் என்று கூறப்பட்ட உவமை சிறந்ததாக உள்ளது.[206] நெய்காயும் உலையில் இடப்பட்ட ஆட்டுக்கறிக்கு மதம் கொண்டு மயங்கிய யானையின் நெட்டுயிர்ப்பு உவமை.[207] உடும்பின் பொரியல் அக்கு முட்டையைப் போன்று காணப்பட்டது.[208] கொல்லை நிலத்தை உழுத கொழு போன்று இறைச்சியை மெல்லும் இரவலரின் பற்கள் விளங்கின.[209]

**தயிர்**

தயிர் குடைக்காளான் முகை போன்று முகிழையுடையதாக விளங்கியது.[210] தயிர் கடையும் ஒலி புலி உறுமுவது போன்றிருந்தது.[211]

**பிற உணவு வகைகள்**

அடை, தேன்கூடு போன்றும்,[212] வளைந்த வெள்ளரிக்காய் அணில் வரியைப் போன்றும்[213], நெய் வெள்ளரிக்காயின் விதை போன்றும்,[214] ஊன் பஞ்சு போன்றும்[215] இருந்தன என அறியமுடிகிறது.

**கள்**

பழந்தமிழர் கள் உண்பதை வழக்கமாகக் கொண்டிருந்தனர். கள் காரைப் பழத்தைப் போன்றும்[216] புளிப்பு கொண்ட களாப்பழத்தைப்

போன்றும்[217] சுவை கொண்டதாய் விளங்கியது. குட்டுவனின் முசிறி, தண்ணீரைப் போன்ற மிகுதியான கள்ளினைப் பெற்றிருந்தது.[218] சூல் கொண்ட வயிற்றினைப் போன்ற பச்சைக் குப்பிகளில்[219] (தோல் பைகளில்) கள்ளை ஊற்றி வைத்தனர். கள்ளினை நெருப்புப் போன்ற பாத்திரத்தில் குடிப்பதற்கு ஊற்றித் தந்தனர்.[220] அக்கள் தேன்கரும்பினைப் போன்று (புளிப்புடன்) இருந்தது.[221]

## உடை

புரவலர்கள் வறிய இரவலர்களுக்குப் புத்தாடை அளித்துப் போற்றினர். இரவலர்கள் அணிந்திருந்த பழைய ஆடைகள் நீர்நிலைகளில் காணப்படும் பாசி வேர்கள்[222] போன்றும், பாம்பின் பிளவுபட்ட நாக்குகள் போன்றும்,[223] கிழிந்திருந்தன.

புரவலர்கள் இரவலர்களைக் கண்டவுடன் உபசரித்தனர். முதலில் இரவலர் வேற்றுமையுறத் தோன்றுவதற்கு ஏதுவான கந்தை ஆடையை அகற்றிச் சிறந்த ஆடையை உடுக்கச்செய்தனர்.[224]

புத்தாடைகள், பாம்பின் உரிந்த தோல்[225] மூங்கிலின் உள்தோல்[226], புகை[227], பாலாவி[228], கொன்றை மலர்,[229] பகன்றை மலர்[230] போன்று விளங்கின.

அந்திவானம்[231] போன்றும், இந்திரக்கோபப் பூச்சியைப் போன்றும்[232] செந்நிறம் கொண்ட ஆடை அணிந்தனர்.

உழவர் பகன்றைப் பூ மாலையை, வெண்மையான ஆடை போலத் தலையில் சூடினர்[233], வழிப்போக்கர் மார்பில் அணிந்த கச்சை ஆடை மலையில் ஊர்கின்ற பாம்பு போல விளங்கியது.[234] கொன்றை அரும்பின் பனி போன்று மகளிர் மணிபொருந்திய அல்குல் இடத்தில் நுண்ணிய ஆடை

அணிந்தனர்.[235] மதுரையில் கடற்கண் விளங்கும் அறலைப் போன்ற ஆடை விற்கப்பெற்றது.[236]

**உறையுள்**

இடையர்கள், வானில் பரவிய மேகம் போல் வரகு வைக்கோலால் குடியிருப்புகளை அமைத்தனர்.[237] எயினரின், ஈத்திலையால் அமைத்த குடில் முள்ளம்பன்றியின் முதுகினைப் போன்றிருந்தது.[238]

**அரசன்**

அரசர்கள் அரண்மனையில் வாழ்ந்தனர். நல்லியக்கோடன் அரண்மனை வாயில் மேருமலை கண் விழித்துப் பார்ப்பது போன்று எப்போதும் அடைக்கப்படாமல் இருந்தது.[239]

சேரலாதன் நெய்தல் மலரின் அழகிய இதழ்த் தோற்றமுடையவன்.[240] அரசர்கள் விண்மீன்களுக்கு நடுவில் இருக்கும் முழுநிலவைப் போன்று அறிஞர், வயவர், அரிவையர் ஆகியோர் கூட்டத்தின் நடுவே இருந்தனர்.[241]

**குடை**

அரசர்கள் நிறைமதி போன்ற வெண்குடை உடையவர்கள்.[242]

**மாலை**

அரசர்கள் மார்பினில் அணிந்த மாலை இந்திர வில்லைப் போன்றும்[243] மலையிலிருந்து அருவி விழுவது போன்றும்[244] விளங்கின.

**முடி**

நார்முடிச் சேரல் இரும்பொறையின் முத்துக் கோக்கப்பட்ட மணிமுடி வேல மரக்கிளைகளில் சிலந்தி வலை பின்னிப் போர்த்தது போல் அமைந்திருந்தது.[245]

# அரசாட்சி

## குடிமக்களைக் காத்தல்

அரசுரிமை ஏற்றுக் குடிகளைக் காக்கும் அரசபாரம் அவரவர் மன இயல்பால் இருவகைப்படும். குடிகளிடம் வரிவேண்டி இரக்கும் சிறுமையுடையோனுக்கு அது பெரும்பாரமாகத் தோன்றும். போராற்றுலும் சால்பும் உடையவனுக்கு அது கோடைக் காலத்தில் வற்றி உலர்ந்த வெண்மையான நெட்டியினது சிறு தண்டு போல் மிகவும் இலேசாக இருக்கும்[246] என்று குடிமக்களைக் காக்க வேண்டிய அரசபாரம் குறித்துச் சோழன் நலங்கிள்ளி என்ற அரசனே உவமித்திருக்கும் நயம் பொருட்செறிவுடன் உள்ளது. இவ்வுவமையால் தெளிந்த பொருளைக் கூறுவதால் இது **'பொருண்மொழிக்காஞ்சி'** என்ற துறை ஆயிற்று.

## கொடுங்கோன்மை

'யானை புக்க புலம் போல' என்ற உவமையால் பாண்டியன் அறிவுடைநம்பிக்குப் பிசிராந்தையார் செவியறிவுறுத்துகிறார்.

சிறிய நிலமாயினும் அதில் விளைந்த நெல்லை அறுத்துக் கவளம் கவளமாக யானைக்கு ஊட்டினால் பல நாட்களுக்கு அது வரும். ஆனால், மிகப் பெரிய விளைநிலத்தில் யானை தானே புகுந்து உண்டால், உண்ட நெல்லினும் கால் மிதிபட்டு அழிந்த நெல் மிகுதியாகி விடும் என்பதை விளக்க **'யானை புக்க புலம் போல'**[247] என்ற உவமையைக் கையாளுகிறார் பிசிராந்தையார். அறிவுடைவேந்தன் அறநெறி அறிந்து குடிமக்களிடம் இறை வசூலித்தால் கோடிக்கணக்கான செல்வம் பெற்ற அவன் இன்புறுவதுடன் அவன் நாடும் செழிக்கும். அவ்வாறன்றி அறநெறி நோக்காது குடிமக்களிடம் வரி வசூலித்தால் அவனுக்கும் அவன் நாட்டுக்கும் கேடு விளையும் என்று பாண்டியன் அறிவுடைநம்பிக்குப் பிசிராந்தையார் அறிவுரை கூறி நெறிப்படுத்தியதால் இது **'செவியறிவுறூஉ'** என்னும் துறையாகும்.

### அரசர் இயல்பு

அரசர்கள் பகைவர்க்கு ஞாயிற்றைப் போன்றும் நண்பர்க்குத் திங்களைப் போன்றும் விளங்கினர்.[248]

### வாழ்த்து

பெருங்குன்றூர்க் கிழார் இருபெருஞ்சேரல் இரும்பொறையை ஞாயிற்றைப் போன்று வாழ்க[249] என வாழ்த்தியுள்ளார்.

## படை

### போர் ஆரவாரம்

பயிர்களின் விளைச்சலால் கிடைக்கும் பயனை ஏர்க்களத்தில் பெறுதல் போல, வீரத்தால் விளையும் பயனைப் போர்க்களத்தில் பெறலாம் என்று பழந்தமிழர் நம்பினர். எனவே, போர்க்கள நிகழ்ச்சிகள் ஏர்க்கள நிகழ்ச்சிகளாக உருவகம் செய்யப்பெற்றன.[250] அக்காலத்தில் காலாட்படை, குதிரைப்படை, யானைப் படை, தேர்ப்படை என்ற நால்வகைப் படைகள் இருந்தன. அப்படைகள் ஆரவாரத்தோடு போர்புரிய எழுந்தன. அவ்வாரவாரம் பறவைகள் ஒலி எழுப்புவதைப் போன்றிருந்தது[251] என்று பெருங்குன்றூர்க் கிழார் குறிப்பிட்டுள்ளார்.

### படைப்பெருக்கம்

கடல் போன்ற பெரும்படையை அக்கால அரசர்கள் பெற்றிருந்தனர்.[252] அந்தத் தானை, கடல் போன்ற ஒலி பொருந்தியதாக விளங்கியது.[253] படைப்பெருக்கம் எல்லையில்லாத வெள்ளம் போன்றிருந்தது என்பதைக் காப்பியாற்றுக் காப்பியனாரின் **'வரம்பில் வெள்ளம்'** என்ற பதிற்றுப்பத்துப் பாடலால் அறியமுடிகிறது.[254]

# நால்வகைப்படை

## 1. காலாட்படை

யானையைக் கண்டோர் அஞ்சுவது போன்ற செலவினையுடையவர் மறவர்கள்.[255] காலாட்படை வீரருக்கு வெள்ளாட்டுக் கிடாய் உவமிக்கப்பெற்றுள்ளது.[256] வெள்ளாடானது ஓர் ஆடு சென்றவழியே மற்ற வெள்ளாடுகளும் செல்லும். அது போல, மன்னன் சென்ற வழியே செல்லும் இயல்புடைய வீரர்களைக் கொண்டது காலாட்படையாகும்.

## 2. யானைப்படை

மூங்கிலின் முனை போன்ற கொம்பையுடையதாகப் பெண்யானை விளங்கியது.[257] யானை கரிய பெரிய பனை மரம் போன்ற துதிக்கையையும்,[258] மேகம் போன்ற நிறத்தையும்[259], மலை போன்ற தோற்றத்தையும்[260] உடையதாக விளங்கியது. நீண்ட மேகத்தின் ஒலி போல், இடி போல் இளங்களிறு பிளிறியது.[261] ஆண் யானைகள் மட்டுமே போர்புரியப் பயன்படுத்தப்பட்டன. களிறு காற்றைப் போன்று வேகமாகச் செல்லத்தக்கதாக இருந்தது.[262] களிறு தன் தலையின் மீது வேங்கைப் பூவையுடைய இலைகளைத் தாங்கியவாறு செல்வது ஆயுதம் தாங்கிப் போருக்குச் செல்லும் வீரரை நினைவுப்படுத்தியது.[263]

யானைப்படையின் முன் செல்லும் கிடுகுப்படையின் தேரினில் கட்டிய கொடிகள் காற்றில் அசைவது கரிய மேகக்கூட்டத்தின் முன் கொக்குகள் பறப்பது போன்று உள்ளது என நயம்பட உவமிக்கப் பெற்றுள்ளது.[264]

களிறுகள் மதிற்போர் புரிகின்றன. மதிலில் உள்ள கணைய மரத்தையும் துலா மரத்தையும் தம் கோடுகளால் தகர்க்கின்றன. அதன் விளைவாக அவற்றின் கோடுகள் குறைப்படுகின்றன. ஆகவே அவை பன்றிகள் போலக் காட்சியளித்தன எனக் குமட்டூர் கண்ணாகனார் குறிப்பிடுகிறார்.[265]

**குதிரைப் படை**

குதிரை, பாற்கடலில் சங்கு போன்றும்[266] அன்னச் சேவலைப் போன்றும்[267] பால் போன்றும்[268] வெண்மை நிறங்கொண்டதாக விளங்கியது. குதிரைகள் காற்றைப் போன்று விரைந்தும்,[269] வளைத்து விடப்பட்ட மூங்கில் மேல் நோக்கி எழுவது போல் பாய்ந்தோடியும்[270] சென்றன. கவரி மயிரால் ஆன தலையாட்டத்தையுடைய அக்குதிரைகளின் இருபக்கமும் விண்மீன்கள் போன்ற மணிகளால் ஆன வட்டமான பக்கரைகள் அணிவிக்கப்பெற்றன.[271]

**4. தேர்ப்படை**

குதிரைகள் பிணிக்கப்பெற்ற, தேர்கள் காற்றைப் போன்று விரைந்து செல்லவல்லன.[272] அந்தத் தேரில் கொடிகள் தொங்கவிடப்பட்டிருந்தன. அவை மலையிலிருந்து இழியும் அருவிகள் போன்று அசைவனவாக விளங்கின.[273] ஆறு செல்வது போல், தேர் சென்றது.[274] இருபடையும் பொருகளத்தில் போரிட, அங்கே குருதி கொட்டி, சேறான அக்களத்திலே தேரினை ஏராகச் சுற்றிப் படைவீரர்கள் சால்பிடித்து உழுதனர்.[275] இந்தப் புறநானூற்றுப் பாடலில் சேரமான் கடல்பிறக்கோட்டிய செல்கெழுகுட்டுவன் பகைவரைக் கொல்வதைக் கூறுவதால் இது 'வாகைத்திணை'யாகும். பரணர் இப்பாடலில் போர்க்களத்தை ஏர்க்களத்தோடு ஒப்புமைப்படுத்திப் பாடுகின்றார். அரசனை உழவனாகக் கூறுகிறார். ஆகவே இது **'மறக்களவழி'** என்னும் துறையின் பாற்படும்.

**படைக்கருவிகள்**

போர்க்களத்தில் பயன்படுத்தப்படும் படைக்கருவிகளைப் பொதுவாக மூன்று வகைகளாகக் கூறலாம் என்பார் கி. பாண்டுரங்கன்.[276] பழந்தமிழர் பயன்படுத்திய கருவிகள் உடல் வலிமையை அடிப்படையாகக் கொண்டன. அவர்கள் பயன்படுத்திய போர்க்கருவிகளான வாள், வேல், வில் என்ற மூன்றனையும் கி. பாண்டுரங்கன் பின்வருமாறு கூறுகின்றார்.

**வாள்**

அருகில் உள்ள பகைவரை வீரர் தம்கையில் பிடித்த நிலையிலேயே தாக்கும் கருவி வாள்.[277] வாள் மின்னலைப் போன்று ஒளி வீசக் கூடியதாக விளங்கியது.[278] இவ்வாள் புலித்தோலால் செய்யப்பெற்ற உறையில் வைக்கப்பட்டிருந்தது.[279]

**வேல்**

வேல் கையால் எறியப்பட்டு ஓரளவு தொலைவுவரை செல்லுமாதலால், இடைப்பட்ட தொலைவில் உள்ள பகைவரைத் தாக்கும்.[280] வேல் மின்னல் நிமிர்ந்த நீட்சிமையும்[281] நிலவைப் போன்ற வெண்மையான ஒளியையும் உடையதாக விளங்கியது.[282]

**வில் (அம்பு)**

வில்லில் பொருந்தி, நாணின் வேகத்தால் செலுத்தப்படும் அம்பு, தொலைவில் உள்ள பகைவரைத் தாக்கும்.[283] அம்பு கூரிய முள்ளைப் போன்றது.[284] அம்புகள் கார்காலத்து மழைத்தாரை போல் பகைவர் மீது பாய்ந்தன.[285] அம்புகள் வைக்கப்படும் கூட்டிற்குத் தேன்கூடு உவமிக்கப்பட்டுள்ளது.[286] நவிர மலையில் மழை பொழிவது போல் களிற்றின் புகர்முகம் மறையும்படி அம்புகள் தைத்தன.[287] இத்தகைய ஊக்கமுள்ள யானையைக் குறித்து வள்ளுவப் பெருந்தகை,

> **"சிதைவிடத் தொல்கார் உரவோர் புதையம்பிற்**
> **பட்டுப்பா டூன்றுங் களிறு"**[288]

என்று கூறிய குறள் நினைவுகூரத்தக்கதாகும்.

**போர்க்களக்காட்சி**

இருதிறத்துப் படைகளும் பொருத போர்க்களம் குருதி கொட்டிச் செந்நிறமாகக் காட்சியளித்தது. அது மாலை நேரத்து வானினைப் போன்று இருந்தது.[289]

பெண்ணின் தந்தை மகள் கேட்ட மன்னனுக்குப் பெண் தர மறுக்கிறான். ஆகவே மன்னன் படையுடன் முற்றுகையிடுகிறான். களிறுகள் தம்முள் பொருது நீராடக் கலங்கிய குளம் போலவும், இவ்விருவரும் போரிடும் அறியாமையால் நாளை இவ்வூரின் அழகு இழந்து விடுமோ என்று பரணர் குறிப்பிடுகிறார். இதனைக்,

**"களிறுபொரக் கலங்கிய தண்கயம் போலப்**
**பெருங்கவின் இழப்பது கொல்லோ**
**மென்புனல் வைப்பினித் தண்பணை ஊரே"[290]**

என்பதனால் அறியலாம்.

**பாசறை**

பகல் நேரத்தில் போரிட்ட வீரர்கள், இரவில் போர்ப் பாசறையில் தங்கினர். அது பாடி வீடுகளில் வேளைக் கொடியும் சுரைக்கொடியும் படர்ந்தது போன்று விளங்கியது.[291] எனப் பதிற்றுப்பத்தில் பெருங்குன்றூர்க் கிழார் குறிப்பிடுவார்.

## வீரம்

**வலிமை**

பழந்தமிழகம் வீரத்தின் விளைநிலமாக விளங்கியது. வீரர்களின் தோள்கள் வலிமை வாய்ந்தவை. அவர்களின் தோளுக்குக் கணைய மரமும்[292], கல்லும்[293] உவமை கூறப்பெற்றுள்ளன. அவர்களின் மார்பு மலை

போன்றிருந்தது.[294] அரசன் கணைய மரம் போன்ற முழந்தாள் அளவு நீண்ட கையுடையவனாக விளங்கினான்.[295] நல்லியக்கோடன் புலி போன்ற வலிமையுடையவனாக விளங்கினான்.[296] அக்காலத்தில் கள்வர்களும் இருந்தனர். அவர்கள் வயக்களிறு போன்றும், கள்வரைக் கண்டறியும் ஊர்க் காவலர் வயப்புலி போன்றும் விளங்கினர்.[297]

### படை ஆரவாரம்

பெருங்காற்றால் பேராரவாரம் உண்டாவதைப் போன்று படை ஆரவாரத்துடன் சென்றது.[298]

### மறவனின் வீரம்

வீரர்கள் புலிகளைப் போன்று அஞ்சாமை உடையவர்களாக விளங்கினர்.[299] அவர்கள் இடி போன்று தாக்கும் வல்லமை பெற்றிருந்தனர்.[300] களிறு தலையின் மீது வேங்கை மலரையுடைய தழைகளைத் தாங்கிச் செல்வது போர் வீரன் போர்க்கருவிகளைத் தாங்கிச் செல்வது போன்றிருந்தது.[301] வீரன், அடிக்கும் கோலுக்கு அஞ்சாது எதிரே சீறி எழும் பாம்பு போன்றவன். இது அதியமான் தானையின் சிறப்பைக் கூறுவதால் 'தானைமற'மாகும்.[302] மார்பில் வேல் தைத்த மறவர் பனை மரத்தோடும்,[303] படைக்கலம் ஏற்படுத்திய புண்பட்ட மார்புடைய வீரன் மருந்து மரத்தோடும் உவமிக்கப்பட்டுள்ளனர்.[304] புல்லும் நீரும் இன்றி, உப்பு வணிகரால் கைவிடப்பட்டுச் சென்ற முடப்பட்ட எருது, அதன் அருகேயுள்ள அனைத்தையும் தின்று தீர்ப்பது போன்று போர்க்களத்தில் களிற்றுடன் போரிட்டு, அதனைக் கொன்று, புண்பட்டு வீழ்ந்து கிடக்கின்ற வீரன் வரும் பகைவரையெல்லாம் தீர்த்துக்கட்டுகிறான்.[305] வீரனும் களிறும் போருடற்றி இறத்தலால் 'தும்பைத்திணை'யும், 'களிற்றுடனிலை' என்ற துறையும் ஆயிற்று.

சிவந்த கூரிய அலகுடைய சிச்சிலிப் பறவை மீனைப் பிடிக்கக் குளத்து நீரில் மூழ்கி எழும் காட்சி, புண்பட்ட வீரர்களின் மார்பின் பிளவினைத் தைக்கும்பொருட்டு இரத்தத்தில் மூழ்கி எழும் ஊசியைப் போன்றிருந்தது.[306] அதனால் வீரர்கள் வடுபட்ட மார்புடையவராக விளங்கினர். அத்தகைய மறவர் தும்பை மலர் மாலை சூடி அவர்களுக்குச் சமமான வீரருடன் போரிட்டனர். சமமற்றவருடன் போரிடாமல் தவிர்த்தனர். அதனாலேயே போரும் சமம், சமர் எனப்பெற்றது. இதனால் வீரனின் மறமேம்பாடு விளக்கமுறுகிறது.

**அரசனின் வீரம்**

அரசனின் நடை ஆண் யானையின் நடையை ஒத்தது.[307] ஞாயிறு கடலில் தோன்றி விண்ணில் சென்று ஒளி வீசுவதுபோல் கரிகாலன் தோன்றிய நாள்முதல் நாட்டினைத் தோளில் சுமந்தான்.[308] அரசன் பகைவர்க்கு இடி,[309] ஞாயிறு[310], தீ[311], ஆண்புலி[312], சிங்கம்[313], முதலை[314], பகடு[315], மலை[316] போன்றவன். களிற்றுக் காலில் மிதிபட்டு அழியும் மூங்கில் முனையைப் போலப் பகை மன்னர் போரில் அழிவர்.[317] யானை மூங்கில் தண்டினை ஒடித்துத் தள்ளுவது போன்று சோழன் போர்வைக் கோப்பெருநற்கிள்ளி மல்லனை வென்றதாகச் சாத்தந்தையார் குறிப்பிட்டுள்ளார்.[318] நீர்த்துறையில் யானையின் வெண்கோட்டினைச் சிறுவர்கள், கழுவுதல் போல அதியமான் புலவர்க்கு இனியனாய் எளியனாய் உள்ளான். ஆனால் களிறுக்கு மதம் உண்டான போது எப்படிக் கொடியதாய் இருக்குமோ அதுபோலப் பகைவர்க்கு இன்னாதவனாய் உள்ளான் என ஔவையார் குறிப்பிடுவார்.[319]

அந்தி நேரத்தில் வானம் சிவந்திருந்தது. பிறை நிலவுடன் மேகக் கூட்டங்கள் விளங்கி ஆரவாரித்தன. அது பாரதப்போரில் குருதி ஆறு,

கோட்டுக்களிற்றை இழுத்துச் செல்வது போன்றிருந்தது[320] என்று பெரும்பாணாற்றுப்படையில் விளக்கப் பெற்றுள்ளது.

ஆளிக்குருளை களிறுகளை வீழ்த்துவது போல கரிகாலன் பகைவரை வீழ்த்தினான்.[321]

வலிமையுடைய பாண்டியனுக்கு அரிமாவையும் வலி குறைந்த பகைவருக்குக் களிற்றினையும் உவமைகளாகக் கூறப்பெற்றுள்ளன.[322]

### பகைவர் அச்சம்

நல்ல பாம்பு வாழும் புற்றினை போலவும், கொல்லேறு திரிகிற மன்றம் போலவும் வலிமையுடைய மாற்றாரும் 'இவன் பாசறையின்கண் உள்ளான்' என எண்ணி நடுங்கினர்.[323] புலிக்கூட்டம் உறங்கும் கற்குகையை நெருங்க முடியாது அதுபோல வாய்மையே பேசும் சேரமான் வஞ்சனது இருப்பிடத்தைப் பகைவர் நெருங்க முடியாது.[324]

## பகையரசர் வீரம்

### முள்வேலி

மணம் ஆகாத குமரியின் கூந்தல் போல் முள் வேலியும் மற்றவரால் அணுகுதற்கு அரியதாக விளங்கியது.[325]

### மதில்போர்

யானையைக் கொன்ற அரிமா, பின்பு அந்த யானையினும் சிறந்த புலிக் குட்டியின் மீது பாய எண்ணியதைப் போன்று, முன்புவென்ற அரசரை விட வலிய அரசரையே நாடி, அவர் மதிலை அழித்து, மணிமுடியைத் தொண்டைமான் இளந்திரையன் கொண்டதாக உருத்திரங்கண்ணனார் கூறுவார்.[326] இங்கு யானை, புலி என்பவை யானைக் கொடியுடைய கங்கரையும், புலிக்கொடியுடைய சோழரையும் குறிக்கும் என்பாரும் உளர்.

**போர்க்களம்**

புது வெள்ளம் பள்ளத்தை நோக்கி ஓடுவது போன்று போர்க்களத்தில் குருதி வெள்ளம் பாய்ந்தது.[327] போர்க்களத்தில் தேர்களும் குதிரைகளும் மழைத்துளிகளைப் போல் அழிந்து வீழ்ந்தன.[328]

**பகையரசர் வீரம்**

பகைவரும் சிங்கம் போன்ற வீரம் உடையவராக விளங்கினர்.[329] திறை தராத பகைவர் இரங்கத் தக்கவராக மாறுவர். அவரின் வாழ்க்கை ஈசலின் ஒரு பகல் வாழ்க்கையாக முடிந்து விடும் என்று ஐயூர் முடவனார் குறிப்பிடுவார்.[330]

**திறை**

காவிரி ஆறு கடலில் கலக்கும் புகார் முகம் போல் நன்னனின் கோபுர வாசலில் போர்புரிய ஆற்றாத பகை மன்னர்களின் திறைகள் வந்து குவிந்தன.[331] பாண்டிய நெடுஞ்செழியனுக்குப் பகை மன்னர்கள் கங்கை ஆறு, ஆயிரம்முகமாகிக் கடலில் சென்று கலப்பதைப் போன்று அளந்து முடிவறியாப் பண்டங்களைக் கொண்டுவந்து அளித்தனர்.[332]

**பகைவர் நாடு கெடல்**

அடிபணியாத பகையரசர்களின் ஊர்கள் தீயிட்டுக் கொளுத்தப்பட்டன. படை வீரர்கள் கொளுத்தாத ஊர்களையும் அழித்தனர்.[333] அழிக்கப்பட்ட பகைவர் நாட்டின் கரும்பு விளையும் வயல் உயிரற்ற யாக்கை போலப் பொலிவற்று விளங்கியது.[334]

சேரமான் பகைவர் நாட்டில் தீ எழச்செய்தான். இவ்வாறு செய்தல் **'எரிபரந்தெடுத்தல்'** என்ற துறையின் இலக்கணமாகும்.[335] காற்றுப் போன்று விரைந்து சென்று பகைவரின் நாட்டினை அழித்தனர்.[336] 'கிழக்கில்

தோன்றும் தேய்பிறை போன்று பகைவரின் ஆக்கம் கெடுக' என்று மாங்குடி மருதனார் கூறுவார்.[337]

### பெண்ணின் வீரம்

புலியாக மகனையும், புலி இருந்த கற்குகையாகத் தாயின் வயிற்றையும் உவமையாகக் கூறி, அம்மகன் போர்க்களத்தில் தோன்றுவான் என்று அந்தத்தாய் கூறுகிறாள்.[338] தமிழ்க்குடியின் மறமாண்பினைக் கூறுவதால் இது 'ஏறாண் முல்லை' என்னும் துறையாகும்.

### ஆட்சிச் சிறப்பு

வேலமரத்தின் சிறிய இலை அளவு நிலம் கூட மற்றவர்க்கு இல்லையாகும்படி நிலத்தைக் கையகப்படுத்தி அரசாண்டனர்.[339] கீழ்த்திசைக் கடலில் ஞாயிறு தோன்றி ஒளி பரப்புவது போன்று இளந்திரையன் தன் அரண்மனை முற்றத்தே தோன்றி அவனிடம் குறை வேண்டி வந்தவர்களுக்கும் முறை வேண்டி வந்தவர்களுக்கும் வேண்டியவற்றை வழங்கினான்.[340]

## கொடை

### புரவலரும் இரவலரும்

பழுமரத்தை நாடிச் செல்லும் பறவையினம் போல இரவலர்கள் புரவலர்களை நாடிச் சென்றனர்.[341] "இரவலர்கள் தம் வல்லமைக்கு ஏற்பப் பாடிப் பரிசில் பெறுவர். அப்பரிசிலால் மகிழ்வர். அப்பொருள்கொண்டு தம் சுற்றத்தை உணவளித்துக் காப்பர். பொருளை மிகுத்துக் காண்பதும் அவர்கள் இயல்பன்று. தாமும் உண்டு, பிறர்க்கும் மன மகிழ்ச்சியுடன் வழங்குவர். தம்மைப் புரப்போரால் பெறும் சிறப்புக்காக இவ்வாறு வருந்தி நாளும் அலைவதே இப்பரிசிலர் வாழ்க்கையின் தன்மையாகும்"[342] என்பார் கோவூர்கிழார். இரவலர்கள் மழைத்துளியை விரும்பிய வானம்பாடியைப் போன்று வள்ளலை நாடிச் சென்றனர்.[343]

“கடலை நோக்கிச் செல்லும் மேகங்கள் போல் ஆய் அண்டிரனை நோக்கி இரவலர் சென்றனர்” என்று முடமோசியார் குறிப்பிடுவார்.[344] புரவலர் ஈன்ற பசு போன்றவர் என்றும் தாய் போன்றவர் என்றும் சுட்டப்படுகின்றனர். அதே போல் இரவலர் கன்று போன்றவர் என்னும் குழந்தை போன்றவர் என்றும் உவமிக்கப்படுகின்றனர்.[345] புரவலர் கோடைக் காலத்துக் கொழு நிழல் போன்றவர்.[346] போர்க்களத்தில் எழினி இறந்து கிடக்கின்றான். அவனைக் கண்ட இரவலர்கள் தாயற்ற சிறு குழவிஅழுது வருந்துவது போல வருந்தினார்கள்.[347]

“நீர் வேட்கையுடையவர் அதிகமாக உள்ள கடல் நீரை விரும்பாமல் வேட்கை தணிக்கும் சிறிய நீரையே விரும்புவர். அதுபோல முடியுடை வேந்தர் பக்கத்தில் இருப்பாராயினும் கொடைத்தன்மை கொண்ட உம்மையே (கொண்கானங்கிழானையே) நாடி வந்தேன்” என்கிறார் மோசிகீரனார்.”[348]

புரவலர்கள் மாரியைப் போன்றும்,[349] தனி மரம்[350] போன்றும் கங்கையாறு[351] போன்றும் பரிசளித்தனர்.

‘உழுதுவரும் மாடு நெல்லினைப் பிறர்க்கு அளித்துத் தான் வைக்கோலைத் தின்பது போலப் பெற்ற செல்வத்தைப் பிறர்க்கு வழங்கி, எஞ்சியவை உண்டு மகிழ்ந்தான். தேர்வண்மலையன்’ என்று பெருஞ்சாத்தனார் குறிப்பிடுவார்.[352]

இருளை நீக்க ஞாயிறு கிழக்கில் தோன்றியதைப் போன்று பரிசிலரின் சிறுமை போக்க மேற்கில் உள்ளவன் ஆடுகோட்பாட்டுச் சேரலாதன்.[353]

வேனிற்காலத்து வெம்மை போல வறுமைத் துன்ப வெம்மையைப் போக்கியவன் கிள்ளிவளவன் என்று எருக்காட்டூர்த் தாயங்கண்ணனார் குறிப்பிடுவார்.[354] ஆய்அண்டிரனிடம் உள்ள செல்வம் இரவலர்களுக்குத்

தப்பாமல் பயன்படும் என்பதை 'அகன்ற புனத்தில் வாழும் கிளி மரப்பொந்தில் சேமித்து வைத்த தானியக் கதிரைப் போன்றவன்'[355] என்ற உவமை நிகழ்ச்சியால் புரவலனின் கொடைத் தன்மை புலப்படுகிறது.

**ஈயாதோரும் இரவலர் ஊக்கமும்**

ஈயாதோரிடம் சென்று தடாரி வாசித்தல் முட்புதரில் மழை பெய்தது போன்றதாகும்.[356] தகுதியுடைய பரிசிலர்க்கு உலகம் பெரிது. எனவே நெஞ்சமே யாளி போல ஊக்கத்தோடு எழுவாயாக[357] என்றும், ஆற்று நீரைப் போன்று வேகமாகச் செல்ல எழுவாயாக[358] என்றும் பெருஞ்சித்திரனார் குறிப்பிடுவார்.

புலி, தான் கொல்ல எண்ணிய யானையைத் தவறவிடுமானால் அது எலியை வேட்டையாடிக் கொன்று பசியைத் தீர்த்துக் கொள்ளாது. அதுபோல இளவெளிமான் தரும் சிறிய பரிசிலை ஏற்பது தக்கதன்று வேறு இடம் சென்று பெரிய பரிசிலைப் பெறலாம் என்று தன் நெஞ்சுக்குப் பெருஞ்சித்திரனார் உரைத்துச் செல்வார்.[359]

**இரவலரின் வறுமைத் தோற்றம்**

இரவலர்கள், உடும்பினைத் தோல் உரித்தது போன்ற உடம்பினை உடையவர்களாக இருந்தனர்.[360] அவர்கள் குளிர்காலத்துப் பருந்தின் கருமையான சிறகைப்போன்ற கந்தை ஆடை உடுத்தியவர்களாக விளங்கினர்.[361] மழை தருவதற்காகக் கடலில் திரண்ட மேகம் நீரில்லாது திரும்பாது. அதுபோலப் பரிசிலர் யானைகளைப் பெற்றன்றித் திரும்பார்.[362]

சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன் என்ற மன்னன் பசிப்பிணி மருத்துவனாகிய பண்ணனைப் புகழ்ந்து பாடியுள்ளான். பண்ணன் இரவலர்க்கு உணவளிக்க, அவர்கள் உண்ணுகின்றனர். அது பழ மரத்திலே

பறவையினம் ஒலித்தாற்போலக் காணப்படுகிறது.[363] எறும்புகள் முட்டை கொண்டு திட்டை நோக்கிச் செல்வது போல் இரவலரின் பிள்ளைகள் சோறு பெற்றுச் செல்கின்றனர்.[364]

உணவு சமைக்க ஏற்படும் புகை, மேகம் போல வானை மறைத்தது.[365] உணவை இரவலர்க்கு வெள்ளிக்கோள்மீன் போன்ற பொற்கலத்தில் அளித்தனர்.[366]

பாழான ஊரில் நெருஞ்சியின் பொன் போன்ற நிறமுடைய பூ கதிரவனை நோக்கிமலர்வது போன்று பாணரது உண்கலம் கீழானது மாலையணிந்த மார்பை நோக்கி மலர்ந்திருந்தது.[367]

கதிரவனால் சுட்டெரிக்கப்பட்ட உலர்ந்த புல் பொருந்திய காடு தளிர்க்க மழை பொழிந்தது போலத் தாளிக்கப்பட்ட சிறந்த துவையலுடன் கூடிய நெய் கலந்த உணவைக் குமணன் வழங்கினான்.[368] கொக்கின் நகம் போன்ற நெல்லரிசி சோற்றுடன் மான் இறைச்சியையும் சேரமான் வஞ்சன் என்பான் வழங்கினான்.[369]

'சோழன் செருப்பாழி எறிந்த இளஞ்சேட்சென்னி அளித்த அணிகளைப் பெற்ற புலவர் குடும்பத்தார், அவ்வணிகளைச் செம்முகக் குரங்கு அணிந்து இன்புற்றதைப் போன்று இன்புற்றனர் என்று ஊன்பொதி பசுங்குடையார் குறிப்பிடுவார்.[370]

இரவலர்களுக்குப் புரவலர்கள் கொடை அளிப்பதனால், அவர்களின் சிறப்பினை எடுத்தோதுவதனால் கொடை பற்றி வரும் பாடல்கள் 'பாடாண் திணை'யாயிற்று.

## நகர் வளம்

அக்காலத்தே மலைக் கூட்டத்தைப் போன்ற மாளிகைகள் எழிலுற விளங்கின.[371] மதுரையம்பதி ஆறு கிடந்த அகன்ற தெருவினையும்,[372] வையையாறு இடைவிடாமல் ஓடுவதைப் போன்று மக்களும் விலங்குகளும், இடைவிடாமல் உலவுகின்ற வாயிலையும் உடையது.[373] மலையிலிருந்து இழியும் அருவி போல் மாடங்களின் உச்சியிலிருந்து கொடிகள் காற்றால் அசைந்தன.[374] அக்கொடிகள் கடல் அலையைப் போன்று விளங்கின.[375] திருக்கோயில் குளத்தைக் கண்டாற் போன்ற குளிர்ச்சியுடையதாக விளங்கியது.[376] இதில் அரசனும் செங்கோன்மையுடன் விளங்கிக் குடிமக்களுக்குக் குளிர்ச்சி தரத்தக்கவனாய் விளங்க வேண்டும் என்ற குறிப்புப் பொருள் வெளிப்படுகிறது.

## வாணிகம்

உள்நாட்டு வணிகமும் வெளிநாட்டு வணிகமும் நடைபெற்றன. திரைகடலில் முகில் சூழ்ந்த மலை போன்ற பெரிய மரக்கலங்களைச் செலுத்தினர்.[377] பண்டங்கள் மரக்கலங்களில் வந்திறங்குவதால் உண்டாகும் ஓசை அயல்நாட்டு வாணிகர்கள் அணிகலன்கள் விலைபேசி வாங்குவதால் உண்டாகும் ஓசைகளெல்லாம் கூடிப் பல பறவைகளால் எழுப்பப்படும் ஓசையைப் போன்று விளங்கியது.[378]

## மனிதன்

அக்காலத்தில் சிறுவர்கள் குடுமி வைத்திருந்தனர். அக்குடுமி, குதிரையின் தலையாட்டத்தைப் போன்ற மயிர் பொருந்திய குடுமியாக விளங்கியது என்று பெருஞ்சித்திரனார் குறிப்பிடுவார்.[379] வறுமையுற்று வாடிய போதும் அக்கால மனிதன் தன் சுற்றத்தோடு வறுமையையும் ஏற்றுக் கூடி வாழ்ந்தான் என்பதைக் கூறவந்த ஓரேருழவர் "மானொன்று

வேடனிடமிருந்து தப்பிப் பிழைத்து ஓடுவது போல் யானும் சுற்றத்தை விட்டு நலமுடன் வாழ்ந்திருப்பேன். ஆனால், சுற்றத்தோடு கூடி வாழும் இல்வாழ்க்கை என்னைத் தடுத்து நிறுத்தி விடுகிறது.''[380] என்ற உவமை நிகழ்ச்சியின் வழிக் கூறிச்செல்கிறார். அத்தகைய சுற்றம் 'செல் நாய் அன்ன சுற்றம்' என்று கடியலூர் உருத்திரங்கண்ணனார் குறிப்பிடுவார்.[381]

வேட்டுவர், ஆண் காட்டுப்பூனை போன்ற[382] வெருண்ட நோக்கும், பெருந்தலையையும் உடையவர்கள், பாணர், மானின் நெற்றி மயிர் போன்ற பொற்றாமரை அணிந்திருந்தனர்.[383]

## கொள்கை

அக்கால மனிதர்கள் எலி போன்ற முயற்சியற்றவரிடம் நட்பு கொள்ளலாகாது என்றும் புலிபோன்ற ஊக்கமுடையவருடன் நட்பு கொள்ள வேண்டும் என்றும் கொள்கைப் பிடிப்புடையவராய் விளங்கினர்.[384] அவர்கள் நீர்வழிச் செல்லும் புணைபோல, அரிய உயிர்கள் ஊழ்வினை வழியே செல்லும் என்ற கருத்தினை ஏற்று, பெரியோரைக் கண்டு வியக்கவுமில்லை; சிறியோரைக் கண்டு இகழவும் செய்யாமல் வாழ்க்கைத் தெளிவினைப் பெற்று வாழ்ந்தனர்.[385]

உயிர்க்கு உறுதிதரும் தெளிந்த பொருளை எடுத்துக் கூறுவதால் இவை **'பொருண்மொழிக்காஞ்சி'** என்னும் துறையாகும்.

போர்வீரன் அக்காலத்தில் குச்சுப்புல் நிரைத்தது போன்ற தாடியையுடையவனாகத் திகழ்ந்தான்.[386] முதியவர்களின் தலைமுடி கயல்முள் போன்று வெண்மையாக விளங்கிற்று.[387] துறவிகளின் தலைமுடி தில்லை என்ற மரத்தின் தளிரைப் போலப் பொலிவற்றதாகவும்,[388] வலம்புரிச் சங்கினைப் போன்று வெண்ணிறம் கொண்டதாகவும்[389] காணப்பட்டது. அந்தணர், விடியற்காலத்தில் வண்டு இசைப்பது போல வேதம் ஓதினர்.[390]

### வழிப்பறி கொள்ளை

பரிசில் பெற்றுச் செல்லும் பாணர்களிடமுள்ள பரிசுப் பொருட்களைக், கீழ்மைப் பண்புள்ள ஆறலைக் கள்வர்கள், மலைவழியில் குரங்குகளைப் போலப் பறித்துச் சென்றனர்.[391]

### வரைவின் மகளிர்

வரைவின் மகளிர் மழையால் மலர்ந்த சிறுபுதர்போல் விளங்கப் பூக்களைச் சூடிக் கொண்டனர்; பலருடன் புணர்ந்தனர்.[392] அவர்கள் பூவில் உள்ள தேனினை முழுவதும் உறிஞ்சும் வண்டு போல் செல்வரிடமுள்ள பொருளை வவ்விப் பிரிந்தனர்[393] என்பதை மதுரைக்காஞ்சியாலும் மணிமேகலையாலும் அறியமுடிகிறது. பூக்களில் உள்ள தேனினை முழுவதும் உண்ட வண்டுகளாகிய அம்மகளிர் பழுமரத்தை நாடிச் செல்லும் பறவைக் கூட்டத்தைப் போன்று செல்வரை நாடிச் சென்றர்.[394]

### புகழ்

சங்க கால மன்னரில் பெரும்பாலோர் புகழ்நிறுவி மாண்டனர். “ஆலம் விழுது அதன் அடிமரத்தைத் தாங்குவது போலப் பாண்டியன் தன் குடிப்பெருமையைக் காத்தான்” என்பர் காரிக்கண்ணன்.[395] “இமயம் போன்று தன் புகழை நிலை நிறுத்த நல்வினை செய்தல் நன்று”[396] என்று கோப்பெருஞ்சோழன் குறிப்பிடுவார். உயிருக்கு உறுதி பயப்பதாய் மெய்நெறியை எடுத்தியம்பலால் இது **‘பொருண்மொழிக்காஞ்சி’** என்னும் துறையாகும். நீரினும் இனிய சாயல் உடையவனாகப் பாரி விளங்கினான்.[397] வானத்தில் கதிரவன் தோன்றிப் பரவி எல்லோர்க்கும் தெரிவதைப் போன்று கிள்ளிவளவனின் புகழ் உலகெங்கும் பரவியது.[398]

வெண்மதியால் இருள் நீங்குவது போல் நார்முடிச்சேரல், குடிமக்களின் மன இருளை நீக்கி நல்லொழுக்கத்தை நிலவச் செய்தான்.[399]

“கடலில் சங்குகள் ஒன்றாகத் தோன்றினும் வலம்புரிச் சங்கு சிறப்புடையதாகும். அதுபோலச் சேர,சோழ, பாண்டியர் என்னும் மூவேந்தர் குடியான ஒத்த தமிழ்க் குடியில் தோன்றிய மன்னருள்ளும் இளந்திரையன் சிறப்புடையவன்”[400] என்று கடியலூர் உருத்திரங்கண்ணனார் குறிப்பிடுவார்.

“வளர்பிறை நாளும் வளர்வதைப் போன்று பாண்டியனே!... வழி வழி வளர்ந்து சிறப்பாயாக”[401] என்ற மாங்குடி மருதனார் வாழ்த்துவார்.

அரசனின் நிழல், குளத்தில் குளிப்பதைப் போன்ற பயனைத் தரவல்லது.[402] கதிரவனை வாய்மைக்கு உவமை கூறுவர் சான்றோர். செல்கெழுகுட்டுவன் காலைக் கதிரவனைப் போன்ற சிறப்புடையவன் என்று பெருங்கௌசிகனார் கூறுவர்.[403] நீர்,தீ, வளி போன்றவன் மாறன் வழுதி என்பர் ஐயூர் முடவனார்.[404] பாண்டியன் இளவந்திகைப்பள்ளித் துஞ்சிய நன்மாறன் கதிரவன் போன்ற வீரமும் திங்கள் போன்ற அருளும் மழை போன்ற கொடையும் பெற்றிருந்தான் என்பார் மருதன் இளநாகனார்.[405] வாழியாதன் அன்பினால் தண்ணீரைப் போன்றவன்; சூழ்ச்சியால் வானினைப் போன்றவன்; கொடையால் கடலினைப் போன்றவன்; உறவில் விண்மீன்களுக்கிடையேயுள்ள நிலவு போன்றவன் என்று இளஞ்சேரல் இரும்பொறையால் புகழப்படுகிறான்.[406]

## புறப்பாடல்களில் உள்ளுறை உவமம்

உள்ளுறை உவமங்கள் சில இடங்களில் தெளிவாகக் கருத்துகள் விளங்கும் வகையில் கையாளப்படும். மற்றும் சில இடங்களில் உய்த்துணர்ந்து பொருளுரைக்க வேண்டியனவாயும் உள்ளன என்பார் மு. வரதராசனார்.[407] பாரி மகளிரை மணந்து இனிதே வாழ, விச்சிக்கோனைக் கபிலர் வாழ்த்துகிறார். அப்போது அவர் “பலாக் கனியுண்ட கரிய விரல்களையுடைய கடுவன், தன் மந்தியுடன் மேகமும் அறியாத உயர்ந்த மலைமுகட்டிலுள்ள

மூங்கில் உச்சியில் துயிலும். அத்தகைய வளமான மலையையுடைய வெற்பனே!''[408] என்று கூறுகிற பகுதி உள்ளுறை உவமமாகும். இதில் கடுவன் பலாக்கனியை உண்டு, மலையில் மூங்கிலின் உச்சியில் – உயர்ந்த இடத்தில் மந்தியுடன் துயில்வதாகக் காட்டப்பட்டுள்ளது. அதுபோல நீயும் இப்பாரி மகளிரை மனைவியாகக் கொண்டு இணைந்து இன்புற்று வாழ்க என்ற உள்ளுறைப் பொருள் வெளிப்படுவதை அறிய முடிகிறது. இதில் விச்சிக்கோனை வாழ்த்திப் பாடுவதால் '**பாடாண்திணை**'யும், கபிலர், பாரி மகளிரைத் தர, விச்சிக்கோனை ஏற்றுக் கொள்ள வேண்டுவதால் இது '**பரிசில் துறை**'யும் ஆயிற்று. புறப்பொருளில் வரும் உள்ளுறை உவமத்தைக் குறிப்புப் பொருள் என்றே குறிப்பர் என்பார் இரா.சாரங்கபாணி.[409]

தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டிய நெடுஞ்செழியன் தலையாலங் கானத்துப் போரில் பகைவரைக்கொன்று குவித்து, வெற்றி வாகை சூடியிருக்கிறான். அவனைக் காணக் கல்லாடனார் என்ற புலவர் காடு மலைகளைக் கடந்து வருகின்றார். வழியில் கண்ட காட்சியை எடுத்தியம்புகிறார். அந்த வழியில் கலைமானைப் புலி கொன்றது. அதனைக் கண்ட பிணைமான், வெருவி, தன் மறியை அணைத்துக் கொண்டு துள்ளி ஒடிற்று. ஓடிய அப்பிணைமான், மறிக்குப் பால் கொடுத்து அதனை வாழ்விக்க வேளைப் பூவை மட்டுமே தின்று உயிர்வாழ்ந்திருந்த கொடிய காட்சியைக் கண்டேன்[410] என்பதே உள்ளுறை உவவமாகும். நின் தலையாலங்கானத்துப் போரால் தம் மக்கள் வாழ்வு குறித்துத் தாமும் உயிர் ஓம்பியிருப்பர் என்ற உண்மையுணர்ந்தும் கடத்தற்கரிய கொடுங்காடும் கடந்து வந்து, நின்னைக் கண்டேன். ஆகவே இனி இவ்வகைப் போரினைத் தவிர்க்க வேண்டும் என்ற கருத்தினை வலியுறுத்துகிறார் புலவர். அரசனுடைய போர் வெற்றியை எடுத்துக் கூறலால் இது '**அரச வாகை**' என்ற துறையாயிற்று.

வையாவிக் கோப்பெரும் பேகனும் அவன் மனைவி கண்ணகியும் பிரிந்துள்ளனர். மனைவியாகிய கண்ணகியை ஏற்றுக் கொள்ள வேண்டி, அவளின் இரங்கத்தக்க நிலையைக் கபிலர் எடுத்துக் கூறுகிறார். “மழையற்ற போது மழை பெய்ய வேண்டியும் பெருமழை பெய்தபோது அதனை நிறுத்த வேண்டியும் தெய்வம் போற்றும் குறமக்கள், மழை மாறிய மகிழ்வினராய்ப் புனத்து விளைந்த தினையை உண்டு மகிழும் வளநாடனே”[411] என்பது குறிப்புப் பொருளாக வந்துள்ளது. கபிலர், பேகனையும் அவன் மலையையும்பாட, பேகனின் மனைவி அழுது நிற்கிறாள். அவன் நாட்டில் மழையாகிய இயற்கையும் வேண்டியபடி பெய்ய, பேகனின் மனைவி மட்டும் துயரக் கண்ணீர் சிந்துவது சரியா? அது சரியாகாது. ஆகவே அவள் மகிழ்ச்சியுடன் விளங்க அவளைப் பேகன் ஏற்றுக் கொள்ள வேண்டும் என்ற குறிப்புப் பொருளைப் பெற வைக்கிறார் கபிலர்.

மேற்கூறியவற்றால் உள்ளுறை உவமம், அகப்பொருளுக்கே உரியதாயினும் சில சமயம் புறப்பொருளினும் வரும் என்பதை அறியமுடிகிறது. நார்மன் அர்ஸ்டு (Norman Hurts) என்பவர் குறிப்பு வகைப்பொருள் பற்றிக் குறிப்பிடுகையில், “விளக்கப்படும் இயற்கையின் காட்சியும் கற்பனையும் தெளிவும், குறிப்பாற் புலப்படுத்தப்படும் கருத்திற்கும், எண்ணத்திற்கும் ஒத்திசைப்பனவாக இருக்க வேண்டும் என்கிறார்.” மேலும் இத்தகைய குறிப்பு உவமைகள் கருதிய பொருளைப் புலப்படுத்துவதோடு அதனைத் திறம்பட மறைப்பனவாகவும் இருக்க வேண்டும்”[412] என்ற கருத்து நினைவுகூரத்தக்கதாகும்.

## சங்க காலப் புலவர்கள்

புலவர்கள் கருத்திற்கு உயிர்நிலையாக விளங்கும் உவமைகளைத் தேவைப்பட்ட இடங்களில் பொருத்திக்காட்டும் ஆற்றலைப் பெற்றிருந்தனர். “அனுபவம் மட்டும் புலவர்க்கு இத்திறனைத் தாராது; ஆழ்ந்த அனுபவத்தை

உள்ளத்தில் உணர்வதன் பயனே புலவர்களுக்கு இன்றியமையாதது"[413] என்கிறார் ஐ.ஏ. ரிச்சர்ட்ஸ் ஆல்டன் கூறுவது போல் சங்கப் புலவர்களின் நினைவும் கற்பனையும் நம் கண்களினால் கண்ட காட்சியிலிருந்து எழுந்தவைகளே; பிற புலன்களினின் வாயிலாக அரும்பியவை சிலவே எனல் வேண்டும்.[414]

## தொகுப்புரை

பொருள் விளக்கத்திற்கு உவமை பயன்படுகிறது. ஒருபுடை ஒப்புமை பற்றியே உவமை பெரிதும் பயின்று வருகிறது; சிறுபான்மை முழு ஒப்புமை பற்றியும் அமையும்.

சங்கப் புலவர் பலரின் பெயர்கள் அவர்கள் கையாண்ட உவமை கொண்டே வழங்கப் பெறுதலின் சங்கப் புலவரிடையே விளங்கிய உவமை பற்றிய மதிப்பீடும், உவமையின் பெருமையும் புலனாகிறது.

தொல்காப்பியர் தம் நூற்கண் உவமை அணியினை விளக்க உவமையியலைப் படைத்துள்ளார். உவமையின் வகைகளைச் சுட்டும் அவர், குறிப்புப் பொருள் தருவனவாகிய உள்ளுறை இறைச்சி ஆகியனவற்றையும் நன்கு விளக்கியுள்ளார். இக்குறிப்புப் பொருள்கள் அகப்பாடல்களில் பெரிதும் பயின்று வருவனவாயினும் புறப்பாடல்களிலும் சிறிதளவு பயின்று வரவே செய்கின்றன.

சங்கப் புலவர்கள் உவமானமாக இயற்கைப் பொருள்களையே பெரிதும் பயன்படுத்தியுள்ளனர். பெண்டிர் அங்கங்களும் அவர்தம் சாயல் நடை முதலானவையும் இயற்கைப் பொருள்களை உவமானமாகக் கொண்டு உவமிக்கப்பெற்றுள்ளன. விறலியின் கேசாதி பாத வருணனை வாயிலாகப் பிற்காலத்தில் இறைவனை வருணிக்கும் பாதாதி கேச வருணனை உருப்பெற்றது எனலாம்.

கைம்மைப் பெண்டிர், சிறார்தம் செயல்கள் ஆகியனவும் இயற்கைப் பொருள்களைக் கொண்டு சங்கப் புலவர்கள் பொருள் விளக்கம் செய்துள்ளனர். அணிகலன், மலை, காடு, நீர், உணவு முதலானவற்றையும் இயற்கைப் பொருள்கள் கொண்டு உவமித்துள்ளனர்.

அவ்வாறே இயற்கைப் பொருளுக்கு இயற்கைப் பொருளே உவமையாக அமைக்கப் பெற்றுள்ள முறைமையும் புறப்பாடல்களில் காணமுடிகிறது. மலை, தாவர வகைகள், மரம், நீர் வாழ்வன, பறப்பன, விலங்குகள், ஊர்வன, நடப்பன ஆகிய இயற்கைப் பொருள்கள் இயற்கைப் பொருள்களைக் கொண்டே உவமிக்கப்பட்டுள்ளன.

இசைக்கருவிகள், குறிப்பாக யாழ் பல்வேறு இயற்கைப் பொருள்களைக் கொண்டு உவமிக்கப் பெற்றுள்ளது. அவ்வாறே உடுக்கை, முழவு, முரசு, தூம்பு ஆகியனவும் விளக்கம் பெற்றுள்ளன.

அரசன், அவன்தன் முடி, போர், அரவம், படைப் பெருக்கம், நால்வகைப் படை, படைக்கருவிகள், போர்க்களம், பாசறை ஆகியனவும் பல்வேறு இயற்கைப் பொருள்களால் உவமிக்கப் பெற்றுள்ளன.

புறப்பாடல்களில் உள்ளுறையும் கையாளப் பெற்றுள்ளது. உவமை போன்றே உள்ளுறை உவமமும் பொருள் விளக்கம் வேண்டி ஆளப்பெற்றுள்ளது.

குறிப்புகள்

# உவமையில் இயற்கை

1. தொல். உவமை. இளம். உரை, ப. 395.
2. குறுந். 40.
3. நற்றி. 284.
4. சி. சுப்பிரமணியபாரதி, பாரதியார் கட்டுரைகள், கலைகள், ப. 230.
5. ச.வே. சுப்பிரமணியன், இலக்கிய நினைவுகள், ப. 37.
6. சீனிவாசன்.ரா, சங்க இலக்கியத்தில் உவமைகள், ப. 86.
7. தொல், பொருள். உவமை. நூ.1.
8. தொல். பொருள். அகத். நூ. 50.
9. தொல். பொருள். நூ. 46.
10. தொல். பொருள். நூ. 48.
11. பழந்தமிழ் இலக்கியம், இயற்கை, ப. 530.
12. கரந்தைத் தமிழ்ச்சங்க வெள்ளி விழா மலர், ப. 187.
13. தொல். பொருள். பொருளியல். நூ. 33.
14. ஐங்கு. முன்னுரை, ப. 28.
15. தொல். பொருள். பொருளியல். 34.
16. ரா. சீனிவாசன், சங்க இலக்கியத்தில் உவமைகள், ப. 230.
17. இர. சாந்தகுமாரி, பெரிய புராணத்தில் இயற்கை, முனைவர் பட்ட ஆய்வேடு, ப. 26.
18. குறுந். பா. 18.
19. மேற்படி. பா. 208.

20. மு. வரதராசன், பழந்தமிழ் இலக்கியத்தில் இயற்கை, ப. 533.
21. அகம். 299.
22. மேற்படி, 135.
23. மேற்படி, 398.
24. மதுரை. 417.
25. பதிற்று. 43.
26. சிறுபாண். 14–15, புறம். 133:4–5, 146:7–8.
27. சிறுபாண். 6, பதிற்று. 74:3–4.
28. புறம். 347:5–7.
29. சிறுபாண். 22–22.
30. மதுரை. 407–408.
31. புறம். 277:1–2.
32. சிறுபாண். 156–157.
33. மதுரை. 451–452.
34. பதிற்று. 21:34–35, புறம். 96:4.
35. மலைபடு. 58.
36. புறம். 348:6–7.
37. மேற்படி. 144:1–4.
38. பெரும்பாண். 386–387, பரி. 7: 63–64, 8: 75.
39. புறம். 354.
40. மேற்படி. 276:2, 354.
41. பதிற்று. 52:21–22.
42. சிறுபாண். 56–57.
43. புறம். 361:16.

44. பதிற்று. 12:22, 65:8, மலைபடு. 57, பெரும்பாண். 161, மதுரை. 414, புறம். 395:12.

45. புறம். 336:8–11, சிறுபாண். 25–26, முருகு. 34–35.

46. புறம். 352:12–14.

47. முருகு. 145, புறம். 84:2.

48. மதுரை. 706–708, முருகு. 143–144, சிறுபாண். 176.

49. புறம். 144:8–9.

50. மேற்படி. 139:4.

51. மேற்படி. 278:2.

52. சிறுபாண். 19–20, பொருநர். 40.

53. பதிற்று. 52:19.

54. மலைபடு. 42–43.

55. P.H.B. Lyon, The Discovery of Poetry, P. 167.

56. முருகு. 205, பெரும்பாண். 327–331, மதுரை. 418–608, சிறுபாண். 16, பொருந. 47, புறம். 373:10.

57. மதுரை. 608–609.

58. மேற்படி, 461–465.

59. புறம். 237:10–14.

60. மேற்படி, 253:5–6.

61. மேற்படி, 224:10–17.

62. பொருந. 25–47.

63. சிறுபாண். 13–33.

64. பேராசிரியம். தொல். உவம. சூ. 36.

65. பதிற்று. 43:21–22.

66. மலைபடு. 217–218.

67. புறம். 198:4–5.

68. மலைபடு. 236–237.

69. P.H.B. Lyon, The Discovery of Poetry, P. 167.

70. புறம். 398:26–27.

71. புறம். 62:1–2, 312:13.

72. பொருந. 159–162.

73. முருகு. 24–25.

74. பெரும்பாண். 292–294, புறம். 10:10, 36:12, 61:14.

75. பதிற்று. 81–26.

76. மலைபடு. 461, பொருந. 244, பெரும்பாண். 240–41, கம்ப நாடு. 46, திருவிளை. நாடு. 27.

77. புறம். 353:8–11.

78. மேற்படி. 16:1.

79. மேற்படி. 126:6–7.

80. மேற்படி. 150:25–28.

81. மேற்படி. 70:6–7.

82. மேற்படி. 118:1–5.

83. மலைபடு. 259.

84. மலைபடு. 212–213, 274–276.

85. மேற்படி. 434–435.

86. பெரும்பாண். 194–195.

87. மலைபடு. 440.

88. பதிற்று. 32:13.

89. சிறுபாண். 164.

90. பதிற்று. 24:20.

91. பெரும்பாண். 203–205.
92. புறம். 249:20.
93. மேற்படி. 158:23–24.
94. புறம். 266:4–5.
95. பெரும்பாண். 312–318.
96. பெரும்பாண். 186.
97. மேற்படி. 187.
98. புறம். 114:3–6.
99. பெரும்பாண். 352–353.
100. மலைபடு. 127–128, பெரும்பாண். 53, மதுரை. 534.
101. பெரும்பாண். 72–82.
102. சிறுபாண். 154–155.
103. புறம். 366:13–16.
104. மதுரை. 679:9–10.
105. புறம். 109:9–10.
106. பதிற்று. 78:13–14.
107. மதுரை. 399.
108. புறம். 378:6–7.
109. சிறுபாண். 1–2.
110. மலைபடு. 250–251.
111. மேற்படி. 111, புறம். 5:1.
112. மேற்படி. 384–385.
113. பதிற்று. 31:11.
114. மதுரை. 351.

115. மேற்படி. 279.

116. மேற்படி. 309.

117. பதிற்று. 51:3.

118. புறம். 53:1.

119. பொருந. 213, மதுரை. 114, புறம். 17:11.

120. சிறுபாண். 152–153, மதுரை. 351, மலைபடு. 250, ஐங்கு. 117:4, குறள். 742.

121. மதுரை. 249, 710, புறம். 249:3, பதிற்று. 19:9, 23:23.

122. மலைபடு. 159:160, மதுரை. 700–701, குறிஞ்சி. 105, 118–119.

123. மலைபடு. 498.

124. மேற்படி. 145–149.

125. பதிற்று. 23:19–20.

126. புறம். 342:1–4.

127. பெரும்பாண். 292–294, புறம். 10:10, 36:12, 61:14.

128. மதுரை. 293.

129. மதுரை. 282, பதிற்று. 30:2, குறுந். 55:1.

130. சிறுபாண். 148, மதுரை. 96, அகம். 236:1.

131. மலைபடு. 102, மதுரை. 279.

132. சிறுபாண். 147.

133. பதிற்று. நான்காம் பத்து, பதிகம்: 9.

134. மலைபடு. 519.

135. சிறுபாண். 167, புறம். 144:8–9, பொருந. 33. நச்சர் குறிப்புரை.

136. மலைபடு. 100–101, நெடுநல். 13.

137. மதுரை. 280–281.

138. புறம். 269:1–3.

139. சிறுபாண். 146.

140. மேற்படி. 149.

141. மேற்படி. 165.

142. புறம். 307:4–6.

143. மேற்படி. 117:8–10.

144. மேற்படி. 119:1–2.

145. பதிற்று. 51:15–18.

146. புறம். 120:5–9.

147. மலைபடு. 107–108, குறிஞ்சி. 35–38.

148. புறம். 297:1–3.

149. பெரும்பாண். 358–359.

150. மேற்படி, 362–363.

151. பதிற்று. 60:4–8.

152. புறம். 349:5–7.

153. மலைபடு. 456–458.

154. புறம். 249:1.

155. முருகு. 299–300, மலைபடு. 238–239.

156. பதிற்று. 66:15–18.

157. மலைபடு. 260–261.

158. மேற்படி, 409–410.

159. புறம். 334:1–4.

160. மலைபடு. 247.

161. புறம். 202:18–20.

162. மேற்படி. 324:9–10.

163. மலைபடு. 236–237.

164. மேற்படி. 30–31, பொருந. 19–20, ஐங். 306:4, அகநா. 244:5.

165. பெரும்பாண். 4–15.

166. பொருந. 5.

167. புறம். 308:2.

168. பெரும்பாண். 4–6.

169. மலைபடு. 24–25.

170. பெரும்பாண். 7–8.

171. பொருந. 7–8.

172. பெரும்பாண். 10.

173. மேற்படி. 11.

174. மேற்படி. 12–13.

175. பொருந. 155.

176. சிறுபாண். 221–222.

177. பெரும்பாண். 14.

178. பொருந. 11–12.

179. பெரும்பாண். 15.

180. பொருந. 19–20.

181. புறம். 308:2.

182. தமிழ்–தமிழ் அகர முதலி, ப. 533.

183. புறம். 392: 4–5, 368: 14–15.

184. மேற்படி, 393:19–23, 398:12, 371:14–15, 400:4–8.

185. புறம். 111:3–4.

186. மேற்படி, 387:1–4.

187. பொருந. 68–70.

188. புறம். 263:1–2.

189. மேற்படி, 70:2–4.

190. மேற்படி, 128:1–3.

191. மலைபடு. 532, 1–3.

192. புறம். 350:4–5, 366:3, 126:19, முருகு. 121.

193. மதுரை. 361–362.

194. மலைபடு. 533, புறம். 128: 1–3, மலைபடு. 1–3.

195. மலைபடு. 6.

196. பெரும்பாண். 229–230.

197. மலைபடு. 440.

198. பொருந. 112–114.

199. பெரும்பாண். 130:131.

200. புறம். 395:36.

201. பெரும்பாண். 192–193.

202. பெரும்பாண். 167–168.

203. சிறுபாண். 243–244.

204. பெரும்பாண். 477, புறம். 392:17

205. பொருந. 115.

206. புறம். 386:1–3.

207. புறம். 261:7–9.

208. பெரும்பாண். 132–133.

209. பொருந. 117–118.

210. பெரும்பாண். 157–158.

211. பெரும்பாண். 156; அகம். 277:5, தொல்.அகத். சூ.41, நம்பி 182, சீவக. 2717.

212. மதுரை. 624, புறம். 103:10.

213. புறம். 246:4.

214. மேற்படி, 246:5.

215. மேற்படி, 125:1–2.

216. மேற்படி, 258:1–2.

217. மேற்படி, 328:8.

218. மேற்படி, 343:9.

219. பெரும்பாண். 381–382, மதுரை. 2–3.

220. புறம். 398:21.

221. புறம். 392:21.

222. புறம். 392:18–19, 390:13–14, பொருந. 153–154.

223. புறம். 393:15–16.

224. பெரும்பாண். 468–470.

225. புறம். 383:10, 397:15, 382, பொருந. 82–83.

226. புறம். 383:11–12.

227. மேற்படி, 398:18–20.

228. பெரும்பாண். 469.

229. மேற்படி. 390:15.

230. புறம். 393:17–19.

231. மதுரை. 431–433.

232. முருகு. 15.

233. பதிற்று. 76: 12–15.

234. பெரும்பாண். 71–72.

235. மேற்படி, 328–329.

236. மதுரை. 519–521.

237. பெரும்பாண். 190–191.

238. மேற்படி, 87–88.

239. சிறுபாண். 205–206.

240. பதிற்று. 64:16–17.

241. புறம். 26–28.

242. மேற்படி, 231:5, 392:1–2.

243. பதிற்று. 63:4.

244. புறம். 198:1–2

245. பதிற்று. 39:12–16.

246. புறம். 75:7–10.

247. மேற்படி. 184:7–11.

248. புறம். 59:57.

249. பதிற்று. 88:38.

250. புறம். 369, 370, 371.

251. பதிற்று. 84: 19–24.

252. புறம். 97:14, 197:3, 351:4, 380:3.

253. 377:29.

254. பதிற்று. 33:5–6.

255. மதுரை. 392–393.

256. புறம். 286:1–2.

257. பெரும்பாண். 53.

258. புறம். 340–7.

259. மலைபடு. 530.

260. புறம். 368:1–2, 307:2, 125:9–10, 38:1, 42:1, பதிற்று 69:1–8, மதுரை. 46, பெரும்பாண். 352.

261. புறம். 81:1–2, பதிற்று. 84:11.

262. முருகு. 82:170, பெருங். 1.42:221.

263. பதிற்று. 41:7–12.

264. மேற்படி. 83:1–5.

265. மேற்படி. 16:5–8

266. பெரும்பாண். 487–488.

267. மதுரை. 386–388.

268. பெரும்பாண். 319–320.

269. புறம். 369:7.

270. புறம். 302:1–2.

271. பதிற்று. 90–35.

272. மதுரை. 51–52.

273. பதிற்று. 25:11.

274. மலைபடு. 571.

275. புறம். 369:11.

276. கி. பாண்டுரங்கன், பண்டைத் தமிழர் போரியல் வாழ்க்கை, ப. 119.

277. மேற்படி, ப. 121.

278. புறம். 369:4, பதிற்று. 24:1

279. பதிற்று. 24:2,

280. பாண்டுரங்கன். கி, பண்டைத் தமிழர் போரியல் வாழ்க்கை, ப. 121.

281. புறம். 57:8.

282. பதிற்று. 61:16–17.

283. கி. பாண்டுரங்கன், பண்டைத் தமிழர் போரியல் வாழ்க்கை, ப. 121.

284. பதிற்று. 33:8.

285. புறம். 287:3.

286. பெரும்பாண். 122–123.

287. மலைபடு. 225–227.

288. குறள். 597.

289. பதிற்று. 7–8.

290. புறம். 341:17–19.

291. பதிற்று. 29–30.

292. சிறுபாண். 49:112, பதிற்று. 31:19–20, பதிற்று. 45:10–11.

293. பதிற்று. 70:4.

294. பதிற்று. 31: 14–17.

295. புறம். 90: 10–11.

296. சிறுபாண். 120–126.

297. மதுரை. 643–645.

298. மேற்படி. 125.

299. பெரும்பாண். 138; சிறுபாண். 122; புறம். 341:7–8, பதிற்று 5 ஆம் பத்து, பதிகம். 10.

300. பதிற்று. 58:4.

301. புறம். 330:1–4.

302. மேற்படி. 89:5–6.

303. மேற்படி. 297:8–10.

304. மேற்படி. 180:3–7

305. புறம். 307: 7–10.

306. பதிற்று. 42: 2–5.

307. புறம். 79: 3–4.

308. பொருந. 135.

309. மதுரை. 62–63, பதிற்று, 84:18, புறம். 58:6–9, பதிற்று. 63:10–12.

310. பதிற்று 12:5–8, மலைபடு. 84–85, பதிற்று. 64:12–15.

311. புறம். 373:20–22.

312. மேற்படி, 52:1–6, 78:2–4, 100:7–11.

313. பதிற்று. 75:1–2.

314. புறம். 104:2–4.

315. மேற்படி. 60:6–9, 90:6–11, 302:8.

316. மேற்படி. 169:4–6.

317. மேற்படி. 73:8–11, பதிற்று: 11–13.

318. மேற்படி. 80:5–9.

319. மேற்படி. 94:1–5.

320. பெரும்பாண். 412–420.

321. பொருந. 139–147.

322. மதுரை. 143–144.

323. புறம். 309:3–4, 329:5–9.

324. மேற்படி. 398:8–11.

325. மேற்படி. 301:1–6.

326. பெரும்பாண். 448–451.

327. பதிற்று. 49:10–13.

328. புறம். 373:3.

329. மேற்படி. 71:1–3.

330. மேற்படி. 51:8–11.

331. மலைபடு. 509–529.

332. மதுரை. 694–698, மதுரை. 741, புறம். 22:34–35.

333. பதிற்று. 15:5–8.

334. மேற்படி. 13:11–13.

335. மேற்படி. 62:5–9.

336. மதுரை. 125–130.

337. மேற்படி. 195–196.

338. புறம். 86:1–6.

339. மேற்படி. 363:1–4.

340. பெரும்பாண். 441–445.

341. புறம். 370:11–12, 47:1, 173:3, 199:2–4, 209:7–15, குறள். 216, மலைபடு. 54–56, பொருந. 64, பெரும்பாண். 18–22, மதுரை. 576, சீவக. 93, மணி. 14:24–26.

342. புறம். 47:1–7.

343. மேற்படி. 198:25–27.

344. மேற்படி. 375:11–14.

345. பொருந. 150–152, புறம். 379: 14–15.

346. புறம். 237:3.

347. மேற்படி, 230:7–10.

348. மேற்படி, 154:1–7.

349. மேற்படி, 133:7–8, 142: 1–6, 159:15–20, 397:16, 174:17–28, 204:11–13, 107:1–4, பெரும்பாண். 23–28, பதிற்று. 55:13–17, 164:18–20, மலைபடு. 72, 75–76, 580, 576–583.

350. புறம். 119:5–7.

351. மேற்படி. 161:1–8; பெரும்பாண். 427, புறம். 42:19–21, பு.வெ.மா. 11.

352. புறம். 125:7–8.

353. பதிற்று. 59:5–10.

354. புறம். 397:17–18.

355. மேற்படி, 138:7–10.

356. மேற்படி, 381: 8–14.

357. மேற்படி, 207:6–9.

358. மேற்படி, 237: 18–19.

359. மேற்படி, 237:15–20.

360. மேற்படி, 68:1.

361. மேற்படி, 150:1–2.

362. மேற்படி, 205:10–14.

363. மேற்படி, 173:2–3.

364. மேற்படி, 173:5–12.

365. மேற்படி, 379:16–18.

366. மேற்படி, 392:22.

367. மேற்படி, 155:3–8.

368. மேற்படி, 360:1–7.

369. மேற்படி, 398:24–25.

370. மேற்படி, 378:20–22.

371. மேற்படி, 390:7, மதுரை. 355, 406, 477, 488, 501–502.

372. மதுரை. 359, மலைபடு. 481.

373. மதுரை. 356, பு.வெ.மா. 278.

374. பதிற்று. 47:3.

375. மதுரை. 450.

376. மதுரை. 484, புறம். 378:7.

377. மதுரை. 83–85.

378. மதுரை. 536–544.

379. புறம். 160:18, 310:7.

380. மேற்படி, 193:2–4.

381. பெரும்பாண். 139 (தொல். உவம. சூ. 37 பேரா.மேற்)

382. புறம். 324:1–3.

383. மேற்படி, 374:1–4.

384. மேற்படி, 190:1–12.

385. மேற்படி, 192:6–13.

386. மேற்படி, 257:3.

387. மேற்படி, 195:2.

388. மேற்படி, 252:2.

389. முருகு. 127.

390. மதுரை. 655–656, பரி. 27:7–11.

391. புறம். 136:11–14.

392. மதுரை. 567–568.

393. மதுரை. 572–575, மணி. 18:19–20, 20:108–109.

394. மதுரை. 576–578.

395. புறம். 58:1–5.

396. மேற்படி. 214:12–13.

397. மேற்படி. 4–8.

398. மேற்படி. 228:7–10.

399. பதிற்று. 31:11–13.

400. பெரும்பாண். 32–34.

401. மதுரை. 193–194, குறுந். 178:5, குறுந். 289:1.

402. மலைபடு. 47, சீவக. 872.

403. பதிற்று. 21:3–4.

404. புறம். 51:6–7.

405. மேற்படி. 12–19.

406. பதிற்று. 90:14–18.

407. மு. வரதராசன், பழந்தமிழ் இலக்கியத்தில் இயற்கை, ப. 530.

408. புறம். 200:1–5.

409. இரா. சாரங்கபாணி, இயற்கை விருந்து, ப. 20.

410. புறம். 23:15–23.

411. மேற்படி, 143:1–5.

412. Four Elements in Literature, P.145-146.

413. I.A. Richards, Priciples of Literary Criticism, P. 181.

414. An Introudction to Poetry, P.94.

இயல் - ஐந்து

# இயற்கையோடு இயைந்த வாழ்வியல்

மனிதனுடைய வாழ்க்கை இயற்கையில் உருவாக்கப்பட்டது.[1] சங்கப் புலவர்கள் இயற்கையை நுணுகி நோக்கினர்; தெளிவுறப் பாடல் படைத்தனர்.[2] அவர்கள் இயற்கையினைத் தனியாகக் கற்பனை செய்து பாடாமல் மக்களின் வாழ்விற்குப் பின்னணியாகவே பாடியுள்ளனர்.[3] மக்களின் வாழ்க்கை நிகழ்ச்சிகளையும் சமுதாயப் பழக்க வழக்கங்களையும் அரசியல், வாணிகம் முதலிய துறைகளின் இயல்புகளையும் பற்பல உண்மை நிகழ்ச்சிகளையும் தத்தம் பாடல்களில் பொதிந்து வைத்துள்ளனர்.[4]

அகப்பொருள் இலக்கியங்களில் புலவர்களின் கற்பனை மாந்தர்கள் பேசுகின்றனரேயன்றிப் புலவர்கள் பேசுவதில்லை. அவர்கள் தம்மைப் புலப்படுத்திக் கொள்வதற்குப் புறப்பொருட்பாடல்களையே கருவியாகக் கொள்கின்றனர். அவர்களுடைய வாழ்வின் இன்ப துன்பங்களும் அவர்களை வாழ்வித்த புரவலர்களின் அருளும் ஆற்றலும் புறப்பொருட்பாடல்களில் சிறப்பொடு விளங்குகின்றன.[5]

வீரத்திற்கு வித்திட்ட மண் தமிழகம் என்பதைச் சங்க இலக்கியத்தை நன்கு கற்றுணர்ந்தோர் மறுக்கவியலாது. மறவர்களின் வீர இயல்பினை முதன்மையாக்கிப் படைக்கப்பட்ட பாடல்கள் சங்க இலக்கியத்தில் மிகுதியாக இடம் பெற்றிருக்கின்றன.[6] புற இலக்கியத்தில் போரும் வாழ்வியலின் ஒரு கூறாக இடம் பெற்றுள்ளது.

## வினையே ஆடவர்க்கு உயிர்

அரசனுக்கு உதவியாய்ப் போர்ப் படையில் இருந்த மறவர்கள் மட்டுமன்றிச் சமுதாயத்தில் வாழ்ந்த ஒவ்வொருவரும் வீரம்

செறிந்தவர்களாகவே விளங்கினர். வில், அம்பு, வேல் ஆகிய கருவிகளைக் கொண்டு மான், புலி, காட்டுப்பன்றி, யானை முதலியவற்றை வீழ்த்திய வீரஞ் செறிந்த மக்களைப் புறநானூற்றில் காண்கிறோம்.[7] முழு வலி படைத்த மாந்தர் பலர் போர்ப்படையில் பணிபுரிந்தனர். ஆடவரின் மார்பினில் வீரத் தழும்பு இருப்பது சிறந்த ஆடவரின் இலக்கணமாகக் கருதப்பட்டது.[8]

## அரசன் வீரம்

அரசர்கள் வீரம் மிக்கவர்களாக விளங்கினர். வல்வில் ஓரி ஒரு முறை தொடுத்த அம்பு யானை, புலி, மான், பன்றி என்பவற்றைக் கொன்று வீழ்த்திப் புற்றினிலிருந்த உடும்பின் உடலில் புதைந்து நின்றது.[9] நலங்கிள்ளியின் காலாட் படைப்பெருக்கம் மிகச் சிறப்பாகப் பேசப்படுகிறது. அப்படையின் தலை, இடை, கடைப்பகுதி வீரர்கள் வழியில் உள்ள பனை மரத்தின் நுங்கு, பனம்பழம், பனங்கிழங்கு ஆகியவற்றை உண்டனர்.[10] சிறுவர்கள் குளவிக் கூட்டினைக் கலைத்தால் அவர்களுக்கு ஏற்படும் இன்னலைப் போன்று பெருஞ்சேரல் இரும்பொறையிடம் உடன்று வாழ்வோர் அறியாமல் போருடற்றின் அவர்கள் இன்னலுற்று மூலைக்கு ஒருவராய்ச் சிதறுவர்.[11] பகைவரின் காவல் மரத்தில் யானையைக் கட்டினர்.[12] காவல் மரத்தையும் வெட்டி வீழ்த்தினர். பகை மன்னரின் பட்டத்து யானையைக் கொன்று அதன் கொம்பில் கட்டில் கால் அமைப்பது வீரமாகக் கருதப்பட்டது.[13]

## போர்க் கருவிகள்

வீரர்கள் வாள், வேல், அம்பு, ஈட்டி ஆகிய கருவிகளைப் பயன்படுத்தினர். அரையில் கச்சை, வாள் முதலியவற்றை அணிந்து, மார்பில் கவசம் பூண்டவராய் வில், வேல் முதலிய ஆயுதப் பயிற்சியுடையவராய் விளங்கினர்.[14] இவரை 'வாளின் வாழ்நர்'[15] என்றும் இவர் பிறந்த குடியை

'வாட்குடி'[16] என்றும் அழைப்பர். வாளினைப் புலித்தோலினால் ஆன உறையில் வைத்திருப்பர்.[17] வீரர்கள் போர் புரியாதபோது வேல்களை வீட்டுக் கூரையினில் செருகிவைப்பர்.

**பூக்கோள் பறை**

பூக்கோள் பறை முழங்கியவுடன் மறவர்கள் காலம் தாழ்த்தாமல் பூக்கொள்ள முயல்வர். அவ்வாறு காலம் தாழ்த்துவோர் **'நாணுடை மாக்கள்'** என்று இழித்துரைக்கப்படுவராதலால் பூக்கொள்வதில் காலந்தாழ்த்துதலை விரும்பா வீரர்களாய்த் திகழ்ந்தனர்.[18] மறவர்கள் போர்ப்பறை கேட்டால் பெருமகிழ்ச்சி அடைந்தனர்.[19]

**போர்க்கோலம்**

வீரர்கள் போருக்குச் செல்லும் முன்னர் நீராடினர்,[20] வெள்ளாடை அணிந்தனர்.[21] அவர்கள் பூந்தொழிலமைந்த ஆடையை உடுத்தி அரையில் நீலக் கச்சினை அணிந்தனர்.[22] ஆடையின் மீது இரும்பாலான உடைவாளைக் கட்டிக் கொண்டனர்.[23] அவர் தம் மார்பில் புலித்தோலாலான கவசம் அணிந்தனர்.[24] இக்கவசம் மெய்ம்மறை[25] மெய்புதை அரணம்[26] என்று வழங்கப்பெறும். அவ்வீரர்கள் போர்க்களத்தில் வெண்ணிறக் கொடிகளைத் தம் கைகளில் ஏந்திச் சென்றனர்.[27]

**படை மறவர்கள்**

படைவீரர்கள் தூசிப்படையால் ஆகிய போர் மட்டுமன்றிக் களிறு ஊர்தல், மாவூர்தல், மற்போர் மற்றும் கடற்போர் செய்தல் ஆகியவற்றையும் மேற்கொண்டனர்.

**களிறு ஊர்தல்**

களிற்றின் மேலிருந்து படைதொடுக்கும் வீரன் அதன் பிடரிக்கண் இருக்கும் கயிற்றிடையே தன் தாளைச் செருகி, அதற்குத் தன்

குறிப்புணர்த்திப் போர்புரிந்தான் என்பதைக் 'களிறு கடைஇய தாள்'[28] என்று பதிற்றுப்பத்துப் பேசுகிறது.

**யானைக்குப் பயிற்சி**

பாகர் யானைக்கு வடமொழியால் பயிற்சியளித்துப் பழக்கினர் என்பதைத்,

**"தேம்படு கவுள சிறுகண் யானை**

**------------------------**

**கவைமுட் கருவியின் வடமொழி பயிற்றிக்**

**கல்லா இளைஞர் கவளம் கைப்ப"**[29] (முல்லை. 31–36)

**"பெருவெளிற் பிணிமார்**

**விரவுமொழி பயிற்றும் பாகர் ஓதை"**[30] (மலைபடு.326–327)

என்ற பகுதிகளால் அறியலாம்.

சங்க காலத்திலேயே ஆரியர் கலப்பு தமிழகத்தில் நடைபெற்றுள்ளது. அந்த ஆரியர்கள் யானையைப் பழக்கும் தொழிலிலும் ஈடுபட்டுள்ளனர். ஆகவே, அவர்கள் தம் தாய்மொழியாகிய வடமொழியில் பயிற்சி அளித்துள்ளனர் என்பதனை,

**"------------------------ ஆரியர்**

**பிடிபயின்று தரூஉம் பெருங்களிறு போல"**[31]

என்னும் அகநானூற்றுப் பாடல் அடிகள் தெளிவுறுத்துகின்றன.

**மாவூர்தல்**

குதிரைப் பயிற்சி பெற்ற வீரர்களை **'மாவுடற்றிய வடிம்பு'**[32] என்று பதிற்றுப்பத்துச் சிறப்பிக்கிறது.

**மற்போர்**

மற்போர் என்பது வீரர்களின் தோள்வன்மைக்கு அளிக்கப்பெற்ற பயிற்சியாகும். தடந்தோள் வீரர்கள், தம் தோளை மேலும் வன்மையானதாக்கக் கல்லாலான தூணொடு பொருது பயிற்சி பெற்றனர் என்றறிகிறோம்.[32]

**வீரர் பயிற்சி**

எறியீட்டியினைக் கையிற்கொண்டு ஈட்டி எறிவதிலும் பயிற்சி பெற்றிருந்தனர். முள் முருக்க மரத்தின் பருத்த அடியை நட்டு அதன்மேல் படைக்கலங்களை எறிந்து போர்மறவர்கள் பயிற்சி பெற்றனர்.[34]

**மறவன் வஞ்சினம்**

மறவன் கூறிய வஞ்சினம் கேட்டுப் பாசறையே நடுங்கிற்று.[35] அவ்வீரன் 'நேற்று என் தமையனைக் கொன்றவனையும் அவன் தம்பியையும் ஒருசேரப் போரிட்டு அழிப்பேன்' என்று வஞ்சினம் கூறினான். அவன் போருக்காகப் பல குதிரைகளையும் ஆராய்கிறான்.[36]

**மறவன் மாண்பு**

ஊர் மன்றின்கண் தூங்கும் முழவினைக் காற்று மோதியதால் ஏற்பட்ட ஒலியைக் கேட்டாலும் அவ்வொலி போருக்கழைக்கும் போர்ப்பறை ஒலி என எண்ணி மகிழுந் தன்மையராக வீரர்கள் விளங்கினர்.[37] அவ்வீரர்கள், அடிக்குங்கோலுக்கு எதிரில் சீறி எழும் பாம்பு போன்று[38] போர்வரின் முன் வைத்த அடியினைப் பின் வைக்காத வீர மாண்பினர்[39] 'ஒருவேளை போரில் புண்பட்டு வீழ்ந்த பொழுதும், அப்புண்ணினை ஆற்றிக்கொண்டு உயிர்வாழ வேண்டும் என எண்ணாதவராய்ப் போரிலேயே மடிந்து புகழெய்த விரும்புவர்''[40] என்று சுப்பிரமணியம் கூறும் கருத்து இங்கு

நினைக்கத்தக்கது. அவ்வீரர்கள், போரில் இறந்துபடின், உயிருடன் வாழும் இருவேந்தரும் ஒருவரையொருவர் எதிர்த்துப் போருடற்றுவர்.[41]

**நால்வகைப்படை**

கொல்களிறும், விரைந்து செல்லும் குதிரையும், கொடி பறக்கும் தேரும், அஞ்சாத போர் மறவரும் உடையவனாய்ப் பாண்டியன் இலவந்திகைப் பள்ளித் துஞ்சிய நன்மாறன் விளங்கினான் என்று மருதன் இளநாகனார் போற்றுகிறார்.[42]

**காலாட்படை**

காலாட்படையானது வாட்படை, வேற்படை, விற்படை என மூன்றாகப் பிரிக்க இயலும் தன்மைத்தாகும். அவ்வவ் வீரர்கள் அவ்வக் கருவிகளை ஏந்திக் களத்தில் காலால் நடந்தே பொருத காரணத்தால் இவ்வீரர்கள் காலாட்படை வீரர்கள் என்றழைக்கப்பட்டிருக்கலாம்.

**யானைப்படை**

யானைப்படை, போர்ப்படைகளுள் முதன்மை பெற்றதாகக் கருதப்பெறுகிறது. இவ்வீரர்கள் யானைப் படையினைக் கொண்டு பகைவர் படையினை உழுகின்ற உழவர் போன்றவராவர் என்று பதிற்றுப்பத்து சேரர்தம் யானைப்படையின் மாண்பினைச் சிறப்பிக்கிறது.[43] ‘தொழில்நவில் யானை’[44], ‘வினைநவில் யானை’[45], ‘போர்வல்யானை’[46] என யானைப்படை சிறப்பிக்கப்பெறுகிறது. யானைப் படைகளைப் பகைவர் படைகளூடே செலுத்திக் குழப்பத்தை உண்டாக்கி, அப்படைகளில் பிளவுகளை உண்டாக்குவர் என்றும், அவ்வாறு ஏற்படும் பிளவுகளிடையே வேல்வீரர்கள் நுழைந்து பகைவரை அழிப்பர் என்றும் அறிகிறோம்.[47] இத்தகு வலிமைமிகு யானைகள் கடிமதிலையும், கணைய மரத்தாலான கதவையும் அரணையும் அழிக்கும் திறன் பெற்றன என்று இலக்கியங்கள் அறைகின்றன.[48]

**குதிரைப்படை**

விரைவாகச் சென்று தாக்குவதற்குக் குதிரைப்படை பயன்பட்டது. அவ்வீரர்கள் ஈட்டி, வாள் ஆகியவற்றை ஏந்தித் தாக்கினர். **'வினைமாட்சிய விரைபுரவி'** என்று பெருநற்கிள்ளியின் குதிரை புகழப்பெறுகிறது.[49] பகைநாட்டினிற் சென்று அவர்தம் நெல் விளையும் கழனியைக் கொள்ளையிடவும், வீடுகளை இடித்து எரியூட்டவும் குதிரைகள் பயன்பட்டன என்று அறிகிறோம்.[50]

வேல், வாள் முதலிய படையேந்திய வீரரைச் செயலறப் பொருதழித்ததாய்க் குதிரைப்படை விளங்கியது.[51] குதிரைகள் மேற்குத் திசையிலிருந்து இறக்குமதி செய்யப்பட்டன.[52]

**தேர்ப்படை**

பகைவர் நாட்டுத் தெருக்களிலே தேரோடித் தடம் பதிக்கும் எனத் தேர்ப்படையின் மாட்சிமையை நெட்டிமையார் கூறுவார்.[53] தேர்ப்படையில் படைத்தளபதி, அமைச்சர், அரசர் முதலியோர் சென்று போருடற்றுவர் எனக் கொள்ளலாம்.

**கடற்படை**

நாற்படையுடன் கடற்படையும் இருந்தமையைப் பதிற்றுப்பத்துச் சான்றுவழி அறிகிறோம். கடலினை இடமாகக் கொண்டு போர் செய்தோரைச் செங்குட்டுவன் தன் வேற்படையைச் செலுத்திக் கடலே கலக்குமாறு போர் செய்தான்[54] என்றும், இமயவர்மன் நெடுஞ்சேரலாதன் மாபெரும் கடற்படை வைத்திருந்தான்[55] என்றும் உள்ள இலக்கியச் சான்றுகளால் அக்காலத்திலேயும் கடற்படை இருந்தமையை அறிகிறோம். மேலும், **'நளியிரு முந்நீர் நாவாயோட்டி'**[56] என்று புறநானூறு கூறுவதன் வழி வணிகக் கலங்கள் பின்னர்ப் போருக்குப் பயன்பட்டன எனக் கருத இடமுண்டு.[57]

**மற்ற படைகள்**

மேற்குறித்த ஐவகைப் படைகளேயன்றித் தார்ப்படை (அ) தூசிப்படை, மூலப்படை, தோற்படை (அ) கிடுகுப்படை, ஈரம்படை (அ) கூழைப்படை, கூளிப்படை, குமரிப்படை ஆகிய படைகளையும் பயன்படுத்தினர்.

**மன்னனை மதித்தல்**

மன்னனைக் குடிமக்கள் வாழ்த்திப் போற்றினர். தம் மன்னனுக்கு வெற்றி மிகவேண்டும்; புகழ் பெருக வேண்டும் என்று தெய்வத்தை வேண்டினர்.[58] உயிரை நிலைபெறச் செய்வது நெல்லும் நீரும் ஆகும். ஆனால் குடிமக்கள் நல்லாட்சியை நிலைபெறச் செய்யும் மன்னனையே உலகுக்கு உயிராகப் போற்றினர்.[59] நல்ல மக்கள் வாழும் நாடே நல்ல நாடு என்று புகழப்பட்டது.[60]

**போருக்குரிய காரணங்கள்**

போருக்குரிய காரணங்களாக அரங்க. இராமலிங்கம் பின்வருவனவற்றைக் குறிப்பிடுகிறார்.

1. இம்மண் சிறிதென்னும் ஊக்க மேலீட்டால் போரிடல்.

2. அரசுரிமைக்குத் தடை நேரும்போது போர் ஏற்படல்.

3. இளவரசர் தமக்கு முறையாக வரும் அரசுரிமையை வேந்தர் தரும் முன்பே ஆட்சியைப் பெற மேற்கொள்ளும் போர்.

4. தன் உரிமையை நிலைநாட்டுவதற்குத் தாயத்தாருடன் போர் நிகழ்வதுண்டு.

5. மாற்றார் தம் ஆற்றலை இகழ்வது கண்டு பொறாது போருக்கெழுதல் உண்டு.

6. பொறாமை காரணமாகப் போர் நிகழும்.

7. பெண்கோடல் காரணமாகப் போர் நடைபெறும்.

8. இனமானம் காரணமாக வேந்தர் போரில் ஈடுபட்டனர்.

9. ஏனைய வேந்தரைவிடத் தாமே தலைமைபெற வேண்டும் என்ற தலைமை விருப்பம் போருக்குக் காரணமாக அமைகிறது.

10. மற்றவர்களின் மிகைப்பட்ட மறப்பண்பு போருக்குத் தோற்றுவாயாக அமைகிறது.

11. பெருமைக்காகவும் போர் புரிதல் உண்டு.

12. வீர மரணம் பற்றிய நம்பிக்கையும் போருக்குக் காரணமாய் விளங்கிற்று.[61]

மேற்குறித்தவற்றைச் சுருங்கக் கூறின் மண்ணாசை, பெண்ணாசை, பொருளாசை, புகழாசை ஆகிய காரணங்களால் போர் ஏற்படும் எனலாம்.

## மன்னர்களின் அடையாளப் பூவும் மரமும்

மூவேந்தர்களாகிய சேர, சோழ, பாண்டியர் முறையே பனை, ஆத்தி, வேம்பு ஆகிய மலர் மாலைகளை அடையாளமாக அணிந்தனர்.[62] மேலும் சேரன், சோழன், பாண்டியன், திதியன், எருமையூரன், இருங்கோவேண்மான், பொருநன் ஆகிய ஏழு மன்னர்க்குரிய அடையாளங்களாகக் (பொறி) கேழல், மேழி, கலை, யாளி, வீணை, சிலை, கெண்டை ஆகியவை திகழ்ந்தன.[63] பழையனின் காவல் மரமாக வேம்பு விளங்கியது.[64] வாகை, நன்னனின் காவல் மரமாகும்.[65]

## அகத்திணைக்குப் புறனாகப் புறத்திணை அமையும்பாங்கு

குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை ஆகிய ஐவகைத் திணைகளுக்குப் புறனாக முறையே வெட்சி, வஞ்சி, உழிஞை, தும்பை, வாகை ஆகியவை அமைகின்றன என்று தொல்காப்பியம் கூறும். அந்தந்தப் புறத்திணைப் போர்களை மேற்கொள்வோர் அந்தந்த மலர்களைச் சூடுவர். போர் ஒழுக்கத்தின் பெயரும் அவ்வவ் நிலமக்கள் சூடிச்சென்ற பூவின் பெயராகவே அமைந்தது.[66] "புறத்திணைப் போர்ச் செயல் ஒவ்வொன்றிற்கும் ஒரு குறிப்பிட்ட மலரைச் சூடிக்காட்டும் பண்டைத் தமிழ் வழக்கம் வேறுமொழி இலக்கியங்களில் காணப்படவில்லை" என்பார் தனிநாயகம்.[67]

## வெட்சிப்போர்

வெட்சியாவது நிரை கவர்தல், பகைவர் நாட்டுப் பசு நிரைகளைக் கவர்ந்து வரச்செல்லும் வீரர் வெட்சி மலர் அணிந்து செல்வர்.[68] பொருளைக் கொள்ளையிடுதற்கு மேற்கொள்ளும் போர் வெட்சிப்போர் என்பார் கா.கோவிந்தன்.[69]

ஆநிரைகளைக் கவர்தலாகிய தொழில் இரவு நேரத்தில் நிகழ்ந்துள்ளது.[70] வீரர்கள் நற்சொல் கேட்டுப் போருக்குட் புறப்பட்டனர். அப்போது அவர்கள் நறும்புகை ஊட்டிய பச்சை இறைச்சியைத் தின்று, நிணமுடன் உள்ள எச்சில் கையை வில்லின் புறத்தில் தடவி, சிறு தாடியுடன் வேற்று நாட்டிற்கு ஆநிரை கவரச் சென்றனர்.[71] கவர்ந்து வந்த பசுக்கூட்டத்தை அந்த இரவே மற்றவர்க்கு வழங்கினர்.[72] இதனைப் **'பாதீடு'** என்பர். போருக்குப் புறப்படும்போது கள்ளுண்டு சென்றனர். அந்தக் கள்ளின் விலையாகப் பசுக்களை அளித்தனர்.[73] இங்ஙனம் தன்னுறு தொழிலாய் வீரன் தனியாகவும் கூட்டத்தோடும் சென்று ஆநிரைகளைக் கவர்ந்து வந்ததை அறியமுடிகிறது. ஆதலின் இதனை எல்லைப்புறம் நடந்த சிறு போராகக் கருத வேண்டியுள்ளது"[74] என்பர் பொன். முரளி.

**அறநெறி**

ஆநிரைகளைக் கவர்ந்து வரும்போது வாயில்லா உயிரினமாகிய ஆநிரைகட்கு எவ்விதத் துன்பமும் நேராமல் கொணர்ந்தனர்.[75] போருக்கான எச்சரிக்கை விடுக்கப்பட்டவுடன் அந்தணரும் மகளிரும் பிணியாளரும் புறம் அகல்வர். அவ்வாறு அகலுங்கால் பசுக்கள் எல்லாவற்றையும் அழைத்துக்கொண்டு போக இயலாமையால் விட்டுவிட்டுச் செல்வர். இதனைக் கருத்திற்கொண்டே ஆநிரை கவர்தல் நிகழ்ந்திருக்கலாம் என்பார் கி.வா. ஜகந்நாதன்.[76] எனவே தனிநாயகம் கூறும், 'ஆநிரை கவர்தலே தொடக்கநிலைப் போர்' என்ற கருத்து நெஞ்சில் நிலைநிறுத்தத் தக்கதாகும்.[77]

**கரந்தைப்போர்**

வெட்சி மறவர்கள் கவர்ந்து சென்ற ஆநிரைகளைக் கரந்தை வீரர்கள் கரந்தைப் பூவைச் சூடி மீட்பது கரந்தை ஆகும். இக்கரந்தையைக் குறித்து,

> **"நாகு முலையன்ன நறும்பூங் கரந்தை**
> **விரகறி யாளர் மரபிற் சூட்ட"**[78]

என்னும் புறநானூற்றுப் பாடலால் சூழ்நிலைக்கேற்ற உவமையுடன் கூறப்பட்டிருக்கும் கரந்தை மறவர் திறன் போற்றத்தக்கதாகும்.

**வீர மரணம்**

வெட்சியார் கவர்ந்து சென்ற பசுக் கூட்டத்தை மீட்டுவர அரசன் ஆணையிட, மீட்கச் சென்ற வீரன் ஒருவன் கோடரியால் வெட்டப்பட்ட மரத்தைப் போன்று வீழ்ந்தான். அவ்வீரனின் மறச் சிறப்பினை மன்னன் கண்ணீர் சொரிந்து பாராட்டினான்.[79] அம்மரணத்தை 'வீரமரணம்'[80] என்றே கருதினர்.

## நடுகல்

வீர மரணம் அடைந்தோர்க்கு நடுகல் அமைத்து வழிபட்டனர். ஆயர்கள், பனை ஓலையும் இலை மாலையும் நடுகல்லுக்குச் சூட்டி வழிபட்டனர்.[81] போரில் முன்நின்று களிற்றினை வீழ்த்தி இறந்தவனுக்கு நடுகல் எழுப்பப்பட்டதையும் புறநானூறு காட்டுகிறது.[82] பகைவரைப் போரில் வீழ்த்தி நடுகல்லான வீரனை மலைபடுகடாமும் குறிப்பிடுகிறது.[83]

தன் பிள்ளைகளுடன் பொருவதைத் தவிர்த்து வடக்கிருந்து உயிர்நீத்த கோப்பெருஞ்சோழனுக்கும்[84] அதியமான் நெடுமான் அஞ்சிக்கும்[85] நடுகல் நடப்பட்டதை அறிகிறோம்.

## நடுகல் அமைந்த இடம்

முல்லை நிலம் அன்றி, பெரும்பாலும் பாழ்பட்ட நிலமான முரம்பு நிலத்தில் நடுகற்கள் அமைந்துள்ளன.[86] மருத நிலத்திலோ நெய்தல் நிலத்திலோ நடுகல் காணப்பெறவில்லை.

நடுகற்கள் ஒரே இடத்தில் வரிசையாக அமைக்கப்பட்டிருந்தன.[87] அவற்றுக்குப் புடவையால் வண்ணப்பந்தல் அமைக்கப்பட்டிருந்தது.[88] பெரும்பாலும் மாமரத்தின் கீழ் நடுகற்கள் அமைந்தன.[89] இவற்றையெல்லாம் தற்காலத்தில் இறந்தவருக்கு அமைக்கும் சதுக்கம், கல்வெட்டு ஆகியவற்றோடு ஒப்புமைப்படுத்திப் பார்க்கலாம்.

## நடுகல் வணக்கம்

நடுகற்களின் மேல் மயிற்பீலி சூட்டினர்.[90] இறந்துபட்ட வீரனின் பெயர் பொறித்தனர்.[91] விடியற்காலையில் நடுகல்லை நீராட்டி, நெய்விளக்கேற்றி, பலியூட்டிச் சிறப்பித்தனர்.[92] நடுகல்லின் மீது மறவனின் உருவமைத்து, அவ்வீரனின் பெயரையும் செயலையும் எழுதி வழிபட்டனர்.[93]

கண்ணகிக்கு நடுகல் நாட்டி வாழ்த்திப் போற்றியதைச் சிலப்பதிகார வஞ்சிக்காண்டம் பரக்கப் பேசுகிறது.[94]

## வஞ்சிப்போர்

வீரர்கள் வஞ்சி மலரைச் சூடிச்சென்று பகைவரது நாட்டினைக் கைப்பற்றல் வஞ்சித் திணையாகும். வீரர்களைத் திரட்டப் போர்முரசு அறைந்து அறிவிக்கப்பெறும். சங்ககாலப் போர் பகல்பொழுதில் மட்டுமே நடைபெற்றது.[95]

## முரசறைதல்

படை திரட்டுவதற்கு நாட்டிலும், பொருநரை ஊக்குவதற்குப் போர்க்களங்களிலும் வெற்றி குறித்தற்கு ஈரிடத்திலும் போர்முரசு இடியோசைபட முழங்கப்பெறும்.

## முரசு

இரண்டு எருதுகள் போரிட, அவற்றுள் வென்ற கொல்லேற்றின் சீவாத தோலால் முரசு போர்த்தப்பட்டிருக்கும்[96] எனுஞ் செய்தியைப் புறநானூறு, மதுரைக்காஞ்சி வாயிலாக அறியலாம். சிலப்பதிகாரம், சீவக சிந்தாமணி ஆகியவை புலியைக் கொன்ற கொல்லேற்றுத் தோலால் முரசு ஆகியது என்று கூறும்.[97] கொடை முரசு இரவலர்க்கு இன்பந்தரும்.[98] போரில் ஈடுபட்ட வீரர்களுக்கு இசையும் பெருஞ்சோறும் முரசறைந்து வழங்கப் பெற்றது.[99] மணமுரசு விழாக்காலத்தில் விழாவினை அறிவிக்கப் பயன்படுத்தப்பெறும்.

மாற்றரசரின் காவல் மரத்தால் முரசு செய்வதில் மன்னர்கள் வேட்கை கொண்டிருந்தனர்.[100] முரசு தெய்வமாகக் கருதப்பட்டது. போருக்குப் புறப்படும்முன் முரசினை வணங்கி வழிபட்டனர். முரசினை நன்னீராட்டி

மலரால் பொலியச் செய்து குருதிப்பலியிட்ட பின்னரே போருக்குச் சென்றனர்.[101]

## எரிபரந்தெடுத்தல்

வஞ்சிப் போர் ஊர்க்கொலை போர்முறைகளை மட்டுமே நமக்குத் தெரிவிக்கிறது.[102] பண்டை நாளில் போர் மேற்செல்லும் மன்னர்கள் பகை நாட்டின்கண் தீக்கொளுவிப் பாழ்படுத்துவர்.[103] இதனை எரிபரந்தெடுத்தல் என்று தொல்காப்பியம் கூறும்.[104] எரிபரந்தெடுத்தல் இருவகையாகக் கருதப்பட்டது. அவை, 1. ஊர் கொள்ளையிடுதல் 2. ஊர் முழுவதும் தீயிட்டழித்தல் என்பனவாகும்.

## பெருஞ்சோற்றுநிலை

போருக்கு முன்னும் பின்னும் படைக்குப் பெருமைக்குரிய பெருஞ்சோறு அளிக்கப்பெற்றது. பாரதப்போரில் பாண்டவர், கௌரவர் ஆகியோரின் படைகளுக்குச் சேரமான் பெருஞ்சோற்று உதியஞ் சேரலாதன் 'பெருஞ்சோறு' அளித்துச் சிறப்பித்தான் என்று புறநானூறு புகல்கிறது.[105]

## உழிஞை

பகைவர், மதிலை வளைத்துப் போர் செய்பவர் உழிஞைப் பூவைச் சூடுவர். "கோட்டை முற்றுகைக் கருத்தினர் ஏறிப்படரும் இயல்புடைய உழிஞைக் கொடியினைத் தலையிற் சுற்றிக் கொண்டனர்."[106] வேந்தன் தங்கியிருக்கும் கோட்டையைச் சுற்றிப் பல அரண்கள் அமைந்திருக்கும். அவை மதிலரண், நிலவரண், நீரரண், காட்டரண், மலையரண் என ஐவகைப்படும்.

**மதிலரண்**

மலைபோல் உயர்ந்து வானைத் தொட்டு விளங்குவது மதிலரணாகும்.[107] இயற்கையாக உயர்ந்து நிற்கும் மலைகளும் சேர்ந்து மதில்கள் கட்டப்பெறும்.[108] மதில்களில் செப்புத் தகடுகளைப் பதித்து உறுதிசெய்யும் வழக்கமும் இருந்தது.[109] மதிலரண், மதில், எயில், இஞ்சி, சோ என நால்வகைப்படும். புரிசை என்பது இவற்றின் பொதுப்பெயர். மண்ணை அரைத்து மதில் (இஞ்சி) அரண் எழுப்புவர்.[110]

**நிலவரண்**

நிலவரண் என்பது மதிலுக்குப் புறத்தேயும் உள்ளேயும் அமைந்திருக்கும் பரந்தகன்ற இடப்பகுதி எனலாம். முள்வேலியையும்[111] பருத்தி வேலியையும்[112] இவ்வரண் கொண்டது.

**நீரரண்**

நீரரண் இயற்கையாகவும், செயற்கையாகவும் அமைந்திருக்கும். மதிற்புறத்து இயற்கையாக ஆறும் கடலும் அரணாக அமைதல் உண்டு. அகழி, அல்லது கிடங்கு என்னும் செயற்கை நீர்நிலைகளை அரணாக ஏற்படுத்தலும் உண்டு. அலை உண்டாகும் அளவிற்கு ஆழமுடையனவாகக் கிடங்குகள் இருந்ததை இலக்கியங்கள் குறிப்பிடுகின்றன.[113]

**காட்டரண்**

காட்டரண் என்பது படை மறவர் பகைவர்க்குத் தெரியாமல் மறைந்திருக்கக் கூடியதும் தொகுதியாகப் பகைவர் புக முடியாததாகவும் அமைந்திருக்கும். காட்டரண் மதிலைச் சுற்றியும் தனியாகவும் அமைந்திருக்கும். இக்காடுகளில் யானைகள் மிகுதியாக இருப்பது பற்றி இவை “உம்பர்காடு”[114] என்று அழைக்கப்பெற்றன.

**மலையரண்**

பகைவர் ஏற முடியாத உயர்ச்சியினை உடையதாக மலையரண் அமைந்திருக்கும். மதிலரண்கள் மலைகளை இணைத்துக் கட்டப்பெறுவது வழக்கம். குறுநில மன்னருள் பலர் ஒவ்வொரு மலையினைத் தத்தமக்குரிய இடமாகக் கொண்டனர். பாரியின் பறம்பு மலையினை மூவேந்தர் முற்றுகை இட்டதை இங்குச் சுட்டலாம்.[115] அயிரை மலையும் அதன் காடும் அரணாக விளங்கின.[116]

உழிஞை சூடிய அறுகை என்பான் தொலைவில் இருந்தாலும் அவன் செங்குட்டுவனின் நண்பன். அறுகை மோகூர் மன்னனுக்கு அஞ்சி ஓடி ஒளிந்து கொள்ள, தன் நண்பனுக்கு ஏற்பட்ட பழி தனக்கு ஏற்பட்டதாகக் கருதி மோகூர் மன்னன் பழையனுடன் செங்குட்டுவன் போர்புரிந்து, அவன் காவல் மரமான வேம்பினைத் தடிந்து போர்முரசு செய்து கொண்டான்.[117] மேலும், புறநானூற்றில் உழிஞை பற்றிய குறிப்புகள் இருப்பினும் இத்திணைக்குரிய பாடல்கள் இல்லை.

**நொச்சி**

மதிலுக்குள் இருப்போர் தம் மதில் காத்தல் போர் நொச்சி எனப்படும். இவ்வீரர் நொச்சிப்பூவினைச் சூடுவர். காவலர் தேவையில்லாத தன்மையதாக நொச்சி மதில் விளங்கியது.[118] வெளியே வந்து போரிடாமல் மதிலுக்குள் இருப்பது நாணமுடையதாகக் கருதப்பட்டது என்று புறநானூறு காட்டும்.[119] புறநானூற்றில் மூன்று பாடல்கள் மகள் கொடை மறுத்தல் துறைக்குரியனவாகக் காட்டப்பெறுகின்றன.[120] ஆனால் அப்பாடல்களில் மகள் மறுத்த குறிப்பில்லை என்பது எண்ணுதற்குரியதாகும்.

**தும்பைத் திணை**

தும்பைத் திணை என்பது மைந்து பொருளாக வந்த வேந்தனைச் சென்று தலையழிக்கும் செயலினைக் கூறுவது. போரின் உச்சநிலை என இதனைக் கூறலாம்.

போரிடும் இருதிறத்துப் படைவீரர்களும் அச்சமவெளியில் இருக்கும் தும்பைப்பூவை அணிந்தனர். ஆடுகோட்பாட்டுச் சேரலாதனின் வீரர்கள் வெண்ணிறப் பனந்தோட்டையும் அணிந்து சென்றனர்[121] என்று பதிற்றுப்பத்துக் குறித்துள்ளதால் தன்நாட்டு மன்னனின் மலரோடு அந்தந்தப் போருக்குரிய பூ மாலையையும் அணிந்து இருதிறத்து வீரரும் தம்மை வேறுபடுத்திக் கொண்டனர் எனலாம். வீரர்கள் தம்மையொத்த சமமானவருடனே போரிட்டனர்.[122]

**இறையை வழிபடல்**

இளஞ்சேரல் இரும்பொறை தும்பைசூடிப் போரில் வெற்றி உண்டாக அயிரை மலையில் உள்ள கொற்றவையை வணங்கினான்.[123] எனவே போருக்குச் செல்லும்முன்னர்த் தெய்வ வணக்கம் இருந்ததென்பதை அறியலாம்.

**போருடற்றல்**

பகைப்படையில் உறவினர் இருந்துள்ளனர். எனினும் போருடற்றினர்.[124] போர்க்களத்தில் பகைவரை வெல்லுதல் எளிதானது என்றும் ஆனால், வீரன் பெயரைச் சொன்னவுடன் பாசறையில் உள்ளவர் நடுங்குமாறு செய்வது அரிது என்றும் அதுவே சிறந்த வெற்றி என்றும் கருதப்பட்டது.[125]

யானையைக் கொன்றவன் பகை மறவனையும் கொன்றான்.[126] களிறு எறிந்து பெயர்தல் வீரனின் கடமையாகக் கருதப்பட்டது.[127] மற்றொரு மறவன் (முதியோள் சிறுவன்) களிறு எறிந்து பட்டதை அறிந்த அவன்தாய் ஈன்ற பொழுதிலும் பேருவகையடைந்து கண்ணீர் சொரிந்தாள்.[128] இது **'உவகை கலுழ்ச்சி'** என்னும் துறையாகும். அறப்போரில் இருதிறத்து வேந்தரும் மாண்டனர் என்பதை,

> **"பருந்(து) அருந்துற்ற தானையொடு செருமுனிந்(து)**
> **அறத்தின் மண்டிய மறப்போர் வேந்தர்**
> **தாம்மாய்ந்தனரே"**[129]

என்னும் புறநானூற்றுப் பாடல் அடிகள் புலப்படுத்தும்.

**வாகை**

போர்களின் விளைவான வெற்றி, வாகையென்ற குறியீடு பெற்றது. மாந்தர்தம் திறனில் மேலோங்குவது வாகை என இலக்கணம் காண்பது வாகையின் வளர்ச்சி நிலையாகும்.[130] இத்தகையோர் வாகைப் பூவினைச் சூடுவர். வாகை மரம் பாலை நிலக் கருப்பொருள்களில் ஒன்று. இம்மரம் ஆரவாரிக்கும் முதிர்ந்த வெண்ணெற்றுகளையுடையது. இம்மரத்தின் மணமிகுந்த வெள்ளை மலர்கள் மயிலின் உச்சிச் சூடுபோல் தோற்றமளிக்கும்.[131] வாகை நன்னனின் காவல் மரமாக விளங்கியது. வாகை என்னும் ஊர் மதுரை நாட்டில் உள்ளது என்பர் ஔவை துரைசாமி.[132] ஆகவே வாகை என்பது மரப்பெயராகவும் ஊர்ப்பெயராகவும் போர்க்களப் பெயராகவும் விளங்கியது என்று அறியப்படும்.

**பாடாண்**

புகழ்ந்து பாடும் பாடல்களே பாடாண் ஆகும். பாடு + ஆண் எனப் பிரித்துப், பெருமையை ஆளும் தன்மை என்று பொருள் கொள்ளலாம். 'பாடாண் பகுதி கைக்கிளைப் புறனே' எனத் தொல்காப்பியம் கூறும்.[133]

**காஞ்சித்திணை**

இவ்வீரர்கள் காஞ்சிப் பூவைச் சூடுவர். காஞ்சித்திணை நிலையாமையைக் குறிப்பதாகும். இது பெருந்திணைக்குப் புறனானதாகும். போர்களில் பெற்ற வெற்றியாகிய பயனை மட்டும் நோக்காது, அப்பயன் புண்பெற்றும், சார்ந்தோரை இழந்தும், எதிர்த்தோர்க்கு இன்னலையும் இழப்பினையும் தந்தும் பெறப்பட்டது என்ற உணர்வு மேலிடும் காலத்தில் 'காஞ்சித்திணை' கால் கொண்டது என்றும் உலக நிலையாமையைக் குறிப்பது காஞ்சியின் பின்னைய வளர்ச்சியே என்றும் கூறுவர்.[134]

போர்க்களத்தில் புண்பட்ட வீரனை வீட்டில் இருத்திப் பேய் தொடா வண்ணம் வெண்சிறுகடுகு தூவி, ஆம்பல் குழல் ஊதி நறுமணம் கமழும் அகில் புகைத்து இரவத் தழையையும் வேப்பிலையையும் வீட்டின் இறவாணத்தில் செருகிக் காத்தனர்.[135]

இதில் பெண் வேண்டி அரசர் போர்புரிந்த மகட்பாற் காஞ்சியைப் பற்றி அறிகிறோம்.[136] அவ்வரசனுடன் போர்புரியும் அவள் தந்தை, தனையன் ஆகியோரின் வீரமும் பேசப்படுகிறது.[137]

புறப்பொருள் வெண்பாமாலையில் காஞ்சித்திணை எதிரூன்றல் போராகக் குறிப்பிடப்படுகிறது. மதுரைக் காஞ்சியில் காஞ்சித்திணை நிலையாமையை உணர்த்தினாலும், உலக இன்பங்களைத் துறந்து அது காட்டிற்குப் போகச் சொல்லவில்லை. மாறாக இவற்றின் நிலையாமையை நன்குணர்ந்து, அறம் பொருள் இன்பங்களைச் சரியானபடி அளவாக நுகர்ந்து இன்பமடைய வேண்டும் என்றே காஞ்சித்திணை கூறுகிறது.

**போரினால் பகை நாட்டை அழித்தல்**

போருக்கு முன்னர்ப் பகைவர் நாடு வள முற்றிருந்தது. போருக்குப் பின்னர்ப் பகைவர் நாட்டினை அழிவுறச் செய்தனர்.[138] பகைவரின் நாடு

கழுதை பூட்டிய ஏரால் உழப்பட்டது.[139] அங்கு விடத்தேரை மரங்களும் உடைவேல மரங்களும் வளர்ந்தன. பேய் திரிந்தது.[140] பகைவர் வீட்டின் வேலியில் பீர்க்கங்கொடி படர்ந்து வீடு பாழாயின.[141] பகைநாட்டினை இவ்வகையில் அழித்தற்குக் காரணம் பகையரசன் நாட்டினை விட்டோட வேண்டும்; அவன் செல்வ வளம் அழிய வேண்டும் என்பதற்கே எனலாம்.

**பெண்**

சங்ககாலப் பெண்கள் சமூகக் கட்டுப்பாட்டுடன் சிறப்புற விளங்கினர். சங்ககாலப் பெண்கள் கல்வியிலும் சிறந்து விளங்கினர்.

**தழை ஆடை**

பெண்கள் குளிர்ந்த நீரில் நீராடினர்; குவளை, நெய்தல், ஆம்பல் மலர்களையும் தழையையும் மிடைந்த தழையாடைகளை அணிந்தனர்.[142] பச்சிலைகளால் அமைந்த உடை அணிவர் என்பதை **'நிறம்திகழ் பாசிழை'** என்ற பதிற்றுப்பத்துத் தலைப்புப் புலப்படுத்தும்.[143] அவற்றை இடையில் உடுத்தினர்.[144] அவர்கள் காதில் அசோகினது தளிரை அணிந்தனர்.[145] ஆம்பல் தண்டால் வளையல் செய்து பூண்டனர்.[146]

**ஒப்பனை**

பெண்கள் அணிகலன்களால் தங்களை மேலும் அழகுபடுத்திக் கொண்டனர். ஆடவரும் பெண்டிரும் தங்கள் தலைமுடியினைப் பேணி வந்தனர். எண்ணெய் தடவிப் போற்றலும் குளிர்ச்சிக்காக மயிர்ச்சாந்து அணிதலும் வழக்கமாய் இருந்தது.[147] மகளிர் கத்தூரி முதலியவற்றால் அரைக்கப்பெற்ற வாசனைக் குழம்பை மயிருக்குப் பூசினர்.[148] ஆடவர் செவியைக் கடந்து தொங்கும்படியாகத் தலைமயிரைக் கட்டிக்கொள்ளுதலும் தாடி வளர்த்தலும் செய்வர்.[149]

குழந்தைகள் மயிரைச் சேர்த்த உச்சிக் கொண்டையாகக் கட்டி வைத்தனர்.[150] பார்ப்பனச் சிறுவர்களும் பிற குழந்தைகளும் குடுமித் தலை உடையவராய் விளங்கினர்; களைந்து விடுதலும் மரபாய் இருந்தது.[151]

## கூந்தல் அலங்காரம்

பெண்டிர் தம் கூந்தலைக் கொண்டை, குழல், பனிச்சை, முடி, சுருள் என ஐந்து வகையாக அழகுபடுத்திக்கொள்வர். அது ஐம்பால் என்று அழைக்கப்பெற்றது.[152] உச்சியில் கட்டி முடிக்கும் முடியை முச்சி[153] என்றும் கடை குழன்ற சுருள் மயிரைப் பித்தை[154] என்றும் வழங்கினர். கடைசியர் மயிரைக் கொண்டையிடும் வழக்கமுடையவராய் இருந்தனர்[155] விறலி ஒருத்தியின் பின்னல் பெண்யானையின் கை போன்று இருந்ததாகச் சிறுபாணாற்றுப்படை கூறுகிறது.[156]

## மலர் அணிதல்

பெண்டிர் மட்டுமல்லாமல் ஆடவரும் தலையில் பூச்சூடினர்.[157] கோவலர் வெண்கோடல் பூவையும்[158] உழவர் பகன்றைப் பூவையும்[159] பரதவர் தாழை மலரையும்[160] அணிந்தனர். எனவே அந்தந்த நிலத்தில் கிடைக்கும் மலர்களை அங்கு வாழும் மக்கள் அணிதல் என்பது இயல்பாகும் என்று தெரியவருகிறது.

## குமரி மூத்தல்

சங்க காலத்தில் பெண்டிரில் சிலர் மணப்பருவம் எய்தியும் கணவரைப் பெறாமல் முதியவளாக இருந்துள்ளனர்.[161]

## மண் உண்ணும் பெண்

மசக்கையால் பெண்கள் மண் உண்டனர். ஆனால் மாந்தரஞ்சேரல் இரும்பொறையின் மண்ணைப் பகைவர் உண்ண இயலாது என்று குறுங்கோழியூர்கிழார் நயமாகக் குறிப்பிடுவார்.[162]

**மகப்பேறு**

மகளிர் மகவீன்ற அந்தக் காலத்தில் வளையல் அணிதலில்லை.[163] மங்கல மகளிரின் வளை கழல, காரணம் யாதோவெனின் பச்சிளங் குழந்தையின் தூக்கத்தை அவ்வளையொலி களையும் என்பதாலும் தாய் குழந்தையைத் தழுவ அவ்வளை உறுத்தும் என்பதாலும் அமையலாம். மேலும் கணவனின் ஈர்ப்புத் தன்மையைச் சில காலம் தள்ளிப் போடுதற்கும் எனலாம்.

**பெண் வீரத்தின் சொத்து**

முதல் நாள் போரினில் தந்தை இறந்தான். இரண்டாம் நாள் போரில் கணவன் இறந்தான். மூன்றாம் நாளும் போர் தொடருகிறது. தன் ஒரே மகனைப் போருக்கு அனுப்புகிறாள் ஒரு வீர மறத்தி.[164]

"உன் மகன் எங்கே உளன்?" என்று ஒரு தாயிடம் கேட்க, அதற்கு அவள் புலியிருந்து போகிய குகையாகிய வயிறு இதுவே என்றும், அவன் போர்க்களத்தில் தோன்றுவான் என்றும் வீர முழக்கமிடுவதைக் காண்கிறோம்.[165]

மற்றொரு மறத்தியிடம் உன் மகன் புறமுதுகிட்டு இறந்தான் எனத் தவறாகக் கூற அதனைக் கேட்ட அவள் நம்பவில்லை. அவ்வகையில் இறந்திருந்தால் பால்கொடுத்த இந்த என் மார்பினை வெட்டி எறிவேன் என்று கூறிப் போர்க்களம் சென்று காண, அவன் அங்கங்கள் சிதறிக்கிடப்பதைக் கண்டு அவள் ஈன்ற ஞான்றினும் பெரிதுவந்தனள்.[166] இவை பிறந்த குடியின் வீரத்தைப் பேசுவதால் **'மூதின் முல்லை'** என்னும் துறையாகும்.

**உடன்கட்டை ஏறல்**

போரில் ஆய் அண்டிரன் இறந்தான். 'சுட்டுக்குவி' என்று குழறும் கூகை உள்ள சுடுகாட்டில் அவனுடன் அவன் மனைவி உடன்கட்டை

ஏறினாள்.[167] பூதப்பாண்டியன் இறக்க அவன் மனைவியான பெருங்கோப்பெண்டும் ஈமத்தீயில் புக்கு உயிர் மாய்ந்தாள்.[168]

## கைம்மை நோன்பு

கணவன் இறந்ததால் மனைவியின் இயல்பு வாழ்க்கை முடிந்தது. அவள் தலைமயிர் மழித்தும் வளையலை நீக்கியும் அல்லியின் அரிசியான உணவை உட்கொண்டும் காலம் கழித்தாள்.[169] இளையளாக இருக்கும்போது ஆம்பல் (அல்லி) தழையாடையாக உதவின. பெருஞ்செல்வனான கணவன் இறந்தபின்னர் அல்லியிடத்து உண்டாகும் அரிசியே உணவாக அவளுக்கு ஆயிற்று. **இது என்ன கொடுமை**[170] பருக்கைக் கற்கள் மேல் படுத்தும் கைம்மை நோன்பு நோற்பர்.[171] அவர்கள் நீர் மிகுதியாகச் சேர்த்துச் சமைத்த கூழை (உணவை) உண்டனர்.[172]

இவ்வாறு கைம்மைக் கொடுமைக்கு ஆளாகி இருப்பதைவிட ஈமத்தீயில் புகுதலே சிறந்தது. அது எனக்குத் தாமரைக் குளத்து நீரில் புகுவது போன்றதாகும்[173] என்று பெருங்கோப்பெண்டு கூறிய கூற்றினால் கைம்மை நோன்பின் கொடுமையும் இறப்பிற்கான காரணங்களும் புலப்படும்.

## சமூக அமைப்பு

சமூகம் என்பதற்குக் கூட்டம், திரள் எனப் பொருள் தருகிறது கழகத் தமிழ் அகராதி.[174] ஒரு குறிப்பிட்ட நிலப்பகுதியில் நீண்ட காலமாக ஒன்று சேர்ந்து வாழ்வதற்காக, மக்கள் ஏற்படுத்திய அமைப்புச் சமூகம் எனலாம். மனிதர்களைக் கொண்டு உண்டாவதே சமூகமாகும். மனிதர்களிடத்து ஏற்படும் மாறுதல்கள் சமூகத்தில் பிரதிபலிக்கிறது என்பார் தா.ஏ. சண்முகம்.[175] அவர் கூற்றுக்கிணங்க நாற்பால் குலத்தினர் வாழ்ந்தனர் என்பதை அறிகிறோம்.

## நாற்பால் குலம்

'வேற்றுமை தெரிந்த நாற்பால்'[176] என்று புறநானூறு சுட்டுவது, அந்தணர், அரசர், வணிகர், வேளாளர் என்பவரையேயாகும். இந்நால்வருக்குரிய இயல்புகளையும் தொழில்களையும் தொல்காப்பியர் தம் மரபியலில் எடுத்துக் கூறியுள்ளார்.[177]

## அந்தணர்

அந்தணர் வேதம் ஓதி, அறுதொழில் புரிந்து, முத்தீப்பேணி, அரசர் பொருட்டாகவும் பிறர்பொருட்டாகவும் வேள்வி முதலியன செய்து எல்லாருடைய போற்றலுக்கும் உரியராய் வாழ்ந்தனர். இவர் வாழ்ந்த இல்லம் சாணத்தால் மெழுகப்பட்டிருக்கும். இல்லத்தையடுத்துக் குறுங்கால் பந்தலில் பசுங்கன்றுகள் கட்டப்பட்டிருக்கும். இவர்தம் வீடுகளில் கோழிகளும் நாய்களும் வளர்க்கப்படுவதில்லை. அவ்வில்லத்தில் வசித்த கிளிகள் கூட வேத ஒலி செய்தனவாம்.[178] இவர் வாழ்ந்த தவச்சாலைகள் 'அந்தணர் பள்ளி'[179] என்றழைக்கப்பட்டன. பாரியின் நண்பராக விளங்கிய கபிலர் இவ்வகுப்பினைச் சார்ந்தவர். அவர் ஊன், மது ஆகியவற்றை உண்டார்.[180] வேள்வி செய்யாத பார்ப்பனர் சங்கு அறுத்தல் முதலிய தொழில்களிலும் ஈடுபட்டிருந்தனர்.[181] மன்னர்கள் பார்ப்பனரிடம் பணிந்து நடந்தனர்.[182] அவர்கள் உயர்ந்தவர்களாக மதிக்கப்பட்டனர்.[183] அந்தணர்க்குப் பூவும் பொற்காசும் நீர்வார்த்துக் கொடையளித்தனர்.[184]

வேளாசான் என்ற அந்தணர் தூது சென்று சில சொல்லால் போர் தடுத்தார்.[185] அந்தணர் தீ வளர்த்தனர்.[186] அவர்கள் ஈர ஆடையுடுத்தி தெய்வத்தை வழிபட்டனர்.[187]

### அரசர்

அரசர்க்குக் கொடி, குடை, முரசு, பூ, வாள் முதலிய தனிச்சின்னங்களும் நால்வகைப் படைகளும் உரியவாய் இருந்தன.[188] அரசியலில் இவருக்கு உதவ ஐம்பெருங்குழு இருந்தது.[189] இவர்கள் கோட்டை வாயிலில் பந்தும் பாவையும்,[190] சிலம்பும் தழையும் பந்தும்[191] தொங்கவிட்டிருப்பர். பகைவரைப் பெண்பாலாக்கி இகழ்தற்காக இவ்வாறு செய்யப்பட்டது.

முதல் மகன் பிறந்த சில நாளில் மன்னன் போர்க்கோலம் பூண்டு தன் மகனைக் காண்பது வழக்கம். இதன் நோக்கம் மகன் மனத்தில் போர்க்கோலமும் வீரமும் பதியவேண்டும் என்பதேயாகும். இம்முறைப்படியே அதியமான் தன் முதல் மகன் பொருட்டெழினியைச் சென்று பார்த்தான் என்பார் ஔவையார்.[192]

### வணிகர்

வணிகரின் முக்கியத் தொழில் வணிகமே. மலை, நிலம், நீர் இவைகளிலிருந்து தோன்றும் பல்வகைப் பண்டங்களும் விற்றனர். வணிகத்தில் மணி, முத்து, பொன் முதலிய சிறந்த பொருள்களும் இடம் பெற்றன.[193]

### வேளாளர்

உழவுத் தொழிலால் நெல் முதலிய பொருள்களை விளைவிக்கும் உழவர் நாட்டின் உயிர் நாடியாகக் கருதப்பட்டனர். **‘உண்டி கொடுத்தோர் உயிர் கொடுத்தோரே, உண்டி முதற்றே உணவின் பிண்டம்’**[194] என்றபடி உணவுப் பொருள்களை உலகத்திற்கு வழங்கி உயிர்களைக் காப்பவர் இவர்களே. இரந்தோருக்கு வெறுங்கலங்கள் நிறையப் பொருள்களை

நல்கினர். கள்ளையும் விருந்தினர்க்கு வழங்குவது உண்டு[195] அரசர்கள் வெற்றிமாலை சூடுவதும் இவர் செய்யும் பெருந்தொழிலால்தான் என்பார் வெள்ளைக்குடி நாகனார்.[196]

## ஐவகை நில மக்கள்

குறிஞ்சி நிலத்தவர் கானவர், வேட்டுவர், குறவர் எனக் குறிக்கப் பெற்றனர். முல்லை நில மக்கள் ஆயர், இடையர், கோவலர், பொதுவர் என அழைக்கப் பெற்றனர். மருத நில மக்கள் காராளர், உழவர் எனப் பெற்றனர். நெய்தல் நில மக்கள் திமிலர், பரதவர், நுளையர் என இயம்பப் பெற்றனர். பாலை நில மக்கள் எயினர் என வழங்கப்பெற்றனர்.[197]

## பழங்குடி மக்கள்

**"துடியன், பாணன், பறையன், கடம்பனென்று**
**இந்நான் கல்லது குடியும் இல்லை"**[198]

என்று புறநானூறு புகல்கின்றது. துடியன், பறையன் என்னும் பெயர்கள் துடி, பறை என்னும் கருவிகளை இயக்குதலால் உண்டான பெயர்களாகும்.[199]

போர்ப்படையிலும் இவர்கள் துடி முழக்கியும் வீரர்களுக்கு ஆயுதம் முதலியன கொடுத்தும் உதவினர். போருக்குப் பூக்கொள்ளுமாறு வீரர்களை அழைத்துப், பறையறையும் தொழிலும் இவர்களுக்கு உண்டு. பாணன் தோல் என்னும் கிடுகுப்படையை அளித்துள்ளான்.[200] இவர்கள் தழைமாலை, பூ மாலை முதலியவற்றை அணிந்து கொள்வர்.[201]

## பிற தொழில் மக்கள்

கொல்லர், தச்சர், கம்மியர், முத்து மணிகளில் பணி செய்வோர், சங்கறுப்போர், குயவர், ஆடை நெய்வோர், மனை வகுப்போர், படைத்தொழில் புரிவோர், ஆடை ஒலிப்போர், மருத்துவர் எனப் பல தொழில் செய்பவர் சமுதாயத்தில் பணியாற்றினர்.

எனவே, சாதிப் பிரிவுகள் சங்க காலத்திலேயே இருந்தன என்பது வெள்ளிடைமலை. "நம் கைக்குக் கிடைத்திருக்கிற தொல்காப்பியம், பத்துப்பாட்டு, எட்டுத்தொகை ஆகிய மிகவும் புராதன தமிழ் இலக்கண, இலக்கியங்களிலேயே நால்வருணப் பாகுபாடு காணப்படுகிறது" என்று ம.பொ.சிவஞானம் கூறுவதாலும் இவ்வுண்மை புலனாகிறது.[202]

மேலோர் கீழோர் என்ற பாகுபாடு சங்க காலத்தில் இருந்தது.[203] இப்பாகுபாடுகள் இன்றிருப்பது போன்ற இழிநிலையில் அன்றில்லை. காலப் போக்கில் ஒவ்வொரு தொழிலிலும் உயர்வு தாழ்வு கற்பிக்கப்பெற்று, இன்னின்ன தொழில்களைச் செய்வோர் உயர்ந்த சாதியினர். இன்னின்ன தொழில்களைச் செய்வோர் தாழ்ந்த சாதியினர் என்னும் நிலை ஏற்பட்டிருக்கக் கூடும் என்பார் அ. முத்துசாமி.[204] இதற்கு அரண் சேர்ப்பதாகச் சாமி சிதம்பரநாரும் இதே கருத்தினைக் குறிப்பிடுகிறார்.[205]

சங்க காலத்தில் குறைந்த அளவிலேயே சாதிப் பாகுபாடுகள் வழக்கிலிருந்திருக்கின்றன. இன்றோ அவை பல்கிப் பெருகியுள்ளன. "நீர்வாழ் சாதியுள் நந்தும் நாகே"[206] என்று தொல்காப்பியத்துள் இடம்பெறும் சாதி என்னும் சொல் மக்களைக் குறிப்பிடவில்லை.

சாதி என்பது தமிழ்ச்சொல் அன்று, ஜாதி என்ற வடமொழிச் சொல்லே சாதி என்று தமிழில் வழங்குகிறது. இந்தச் சாதி என்ற சொல்லும் மக்களைக் குறிக்கும் சொல்லாகப் பண்டைக் காலத்தில் வழங்கவில்லை.[207] சாதிகள் எவ்வாறு எழுந்தன என்று அறுதியிட்டு உரைக்க முடியாது என்பார் எஸ். இராமகிருஷ்ணன்.[208]

**பரிசிலரின் வறுமை**

பரிசிலர் பழங்காலத்தில் வறுமையில் உழன்றுள்ளனர். பாணர் விறலியர் ஆகியோர் வறுமையின் காரணமாக நீர் அதிகம் இட்டுச் சமைத்த

புல்லரிசி கூழ் உண்டனர்.[209] குப்பைக் கீரையை நீர்விட்டு வேகவைத்து, உப்பும் மோரும் இல்லாமல் அதனையே உணவாக உட்கொண்டனர்.[210] வயதான தாய் கண்ணொளி மங்கி உயிர் போகவில்லையே என்று வருந்திக் கோலூன்றி முன்றிலை விட்டுப் போக முடியாத இன்னல்நிலை ஒரு புறம்.[211] மற்றொரு புறம் பசிக்கொடுமை காரணமாக அவர்கள் பனை நாரையும் பனங்குருத்தையும் சுவைத்து வாழ்ந்தனர்.[212] மேற்கூறியவற்றிலாவது அடுப்பு எரித்து ஏதோ ஒன்று சமைக்கும் நிலை இருந்தது. ஆனால் அதற்கு மாறாகச் சமைக்க வழியில்லாமையால் அடுப்பிலே காளான் பூத்துவிட்டது. பசியால் குழந்தை தாயிடம் பால் காணமல் வருந்தி அழுது, சேய் தாய் முகம் காண, அவள் கண்ணீரோடு என் முகம் காண, குமணனே நான் உன் முகம் நோக்கி வந்தேன் என்று பெருந்தலைச் சாத்தனார் குறிப்பிடுவார்.[213] வீட்டில் பொருளில்லை; வறுமை. வீட்டு எலிகள் மாறி மாறித் தோண்டி அவைகள் மடிந்தன. அந்த இறந்த எலிகளையுடைய சுவரையுடையது பெருங்குன்றூர்கிழார் வீடு.[214] கண் திறக்காத நாய்க்குட்டி அதன் தாயிடம் பாலுண்ணப் பாலில்லாததால் ஈன்ற நாய் குரைக்கும். வீட்டின் சுவரும் செல்லரித்து இருக்கும். இவ்வண்ணம் வறுமைவாய்ப்பட்டிருந்தனர் பரிசிலர்.

**வறுமை விலகாதா?**

வறுமை என்ற கடலினைக் கடக்கும் புணையாக வள்ளல் விளங்கினர்.[215] பொருள் பெற்ற பரிசிலர் பொருளைப் போற்றும் எண்ணம் அற்றவர்களாக விளங்கினர். பெற்ற பரிசிலை மற்றவர்க்கு அளித்தனர். பொருளாதார நிலையில் திட்டமிட்டு வாழும் நிலையை அவர்கள் கடைபிடித்ததாகத் தெரியவில்லை. பிறருக்கு ஈத்துவக்கும் இன்பம் அறிந்தவராகவே வாழ்ந்தனர். ஆகவே எவ்வளவு பொருள்கிட்டினும் செலவு செய்தவர்களாகவே காணப்படுகின்றனர்.

**புலவரின் பெருமிதம்**

மன்னன் பரிசளிக்கும் முறையினை அறிவுறுத்தும் புலவர் தங்கள் பெருமித நிலையையும் கூறுவர். தனிப்பட்ட முறையில் தன் நிலையைக் கூறாது புலவரினத்தின் நிலையைப் பொதுவாகக் கூறக் காணலாம்.

“முற்றிய திருவின் மூவரேயாயினும் பெட்பின்றீதல் யாம் வேண்டேம்”[216] என்பார் பெருந்தலைச்சாத்தனார். “கடந்த காலத்துப் பெய்தேன்; இந்நாளில் பெய்யேன் என வானம் மாறினாலும், முற்காலத்து விளைந்தேன், இக்காலத்து விளையேன் என நிலம் விளைவு ஒழிந்தாலும் உயிர்கள் வாழல் இயலாது. அவ்வாறே ‘இன்னும் தா’ என எம்மனோர் இரப்பின் ‘நீவிர் முன்னர்ப் பெற்றுக்கொண்டிர்’ என நும்மனோர் மறுத்தல் இன்னாது’[217] என்று புலவரினத்திற்கும் புரவலர் இனத்திற்கும் இடைப்பட்ட உறவினை விளக்கி அறிவுறுத்தலை அறிகிறோம். வரிசைக்கு வருந்தும் பரிசில் வாழ்க்கையராக விளங்கினர்.[218]

**பரிசிலை மறுத்தல்**

கால நீட்டிப்பு, காணாமல் கொடுத்தமை, பெட்பின்றி ஈதல், சிறிது கொடுத்தல் முதலிய பல்வேறு காரணங்களுக்காகப் புலவர் பரிசில் பெறாமல் செல்வதைக் காண்கிறோம். ஔவையார், சற்றே சினம் கொண்டவராகக் ‘காவினெம் கலனே, கருக்கினெம் கலப்பை, எத்திசைச் செலினும் அத்திசைச் சோறே’[219] என்று கூறிப் புறப்பட்டார்.

இளவெளிமான் கண்டும் அறியார் போலக் கொடுத்த பரிசிலை வெறுத்துப் ‘பெரிதே உலகம் பேணுநர் பலரே’ என்று புறப்படுவார் பெருஞ்சித்திரனார்.[220] “காணா(து) ஈத்த இப்பொருட்கு யானோர் வாணிகப் பரிசிலன் அல்லேன்”[221] என்று அவரே அதியமானிடம் உரைப்பார்.

பெருமிதத்தை இழந்து பரிசில் பெறுவதைவிடப் பரிசில் பெறாது பெருமிதம் காப்பதே மேல் எனக் கருதிய அக்காலப் புலவர்நிலை இதனால் புலனாகும்.

**சினவாத பாடல்**

“புள்ளும் பொழுதும் பழித்தல் அல்லதை உள்ளிச் சென்ற புரவலரைப் பழியார். அதனால் உன்னைப் புலவேன்” என்பார் கழைதின்யானையார்.[222]

**கபிலர் பாடலின் தனித்தன்மை**

கபிலர் பரிசிலாகப் பொருள் வேண்டாது தன் நண்பன் பாரியின் மகளை ஏற்கவேண்டும் என்று வேண்டும் நிலையைப் புறம் 200, 201, 202 பாடல்கள் வாயிலாக அறியலாம். இருங்கோவேள் பாரியின் மகளிரைக் கொள்ளானாகக் கபிலரின் உள்ளம் நொந்து போயிற்று. அப்போது கபிலர், ‘அரையம் என்ற ஊரையாண்ட ஒரு மன்னன் கழாத்தலையார் என்ற புலவரை இகழ்ந்தான். அதனால் அரையம் என்ற ஊர் அழிந்தது’ என்ற நிகழ்வை நினைவுபடுத்துகிறார். இதன் வாயிலாக “அக்காலப் புலவருக்குச் சாபமிடும் ஆற்றலிருப்பதைப் புலப்படுத்தும்” என்பர்.[223] ஆயின் இத்தகைய குறிப்பு இதனைத்தவிர வேறில்லை என்பது குறிப்பிடத்தக்கது.

இவற்றின்வழி, புலவர்கள் தமக்காகவும் மற்றவர்க்காகவும் வாழ்ந்தனர் என்பது தெளிவாகிறது.

**நிலையாமை**

புலவர்கள் நிலவையும்[224] ஈயலையும்[225] காட்டி நிலையாமைக் கருத்தினை உணர்த்தினர்.

**உயர்ந்த குறிக்கோள்**

உயர்ந்த குறிக்கோள் உடையர் உயர்ந்தவராக விளங்குவர் என்பதைக் கோப்பெருஞ்சோழன் என்ற அரசன்,

**"யானை வேட்டுவன் யானையும் பெறுமே;**
**குறும்பூழ் வேட்டுவன் வறுங்கையும் வருமே"**[226]

என்னும் புறநானூற்றுப்பாடலில் புலப்படுத்தும் திறத்தை எண்ணிப்பார்க்க வேண்டும். எனவே நாடு நலமுடன் விளங்க நாவலரும் காவலரும் கவிதையாத்தனர் எனத் தெளியலாம்.

**உண்கலம்**

உணவு உண்பதற்கு ஏற்ற உண்கலங்கள் வழக்கத்திலிருந்தன. தேக்கிலை போன்ற பெரிய இலைகளும்[227] ஆம்பல் இலை போன்ற நீர்ச் செடிகளின் பெரிய இலைகளும்[228] பனைஓலையாலாகிய உண்கலமும் உண்பதற்கு உபயோகப்படுத்தப்பட்டன. யாசிப்பவர்கள் மண்டை எனப்படும் ஒருவகைப் பாத்திரத்தைப் பயன்படுத்தினர்.[230] இக்காலத்தில் இரவலர்கள் கையிலுள்ள திருவோட்டினை இது ஒக்கும். உண்பதற்கு அகன்ற தாலங்கள் பயன்படுத்தப்பட்டன. அரசர்கள் பொன்னாலும் வெள்ளியாலும் செய்யப்பட்ட தாலங்களில் பாணர் முதலியோரை உண்பித்தனர் என்று தெரியவருகிறது.[231] நிலவைச் சூழ்ந்த விண்மீன்கள் போன்று பெரிய உண்கலத்தைச் சுற்றியுள்ள சிறிய பொன்கலன்களில் உணவு பரிமாறினர்.[232]

**உணவுவகை**

நாட்டின் ஒவ்வொரு பகுதியிலும் ஆங்காங்கே விளையும் தானிய வகைகள், காய், கிழங்கு, கீரை, கனிகள் முதலியவற்றை அவ்வப்பகுதி மக்கள் உணவாகக் கொண்டனர். காட்டில் வாழும் மான், பன்றி

முதலியனவற்றை வேட்டையாடி அவற்றின் தசையையும், கடற்கரையில் வாழ்வோர் மீன் நத்தை முதலிய பொருள்களையும் உணவுடன் சேர்த்துக்கொண்டனர். ஓரிடத்தில் மிகுதியாகக் கிடைக்கும் தானியங்கள் இறைச்சி வகைகள் ஆகியவற்றைப் பிற இடங்களுக்கு எடுத்துச்சென்று பண்டமாற்றம் முறையில் ஒருவருக்கொருவர் பகிர்ந்துகொண்டு வாழ்ந்தனர்.

**தானியவகை**

செந்நெல், வெண்ணெல், மலைநெல் என்னும் நெல்வகைகளும்[233], வரகு, தினை என்னும் புன்செய் தானியங்களும்[234] முக்கிய உணவுப் பொருள்களாக விளங்கின. எறும்புகள் புற்றுகளில் சேர்த்துவைக்கும் புல்லரிசியைத் தோண்டியெடுத்து உமியும் தவிடும் போக நன்கு குத்திப் பயன்படுத்தினர்.[235]

**சோறு**

சோற்றினை வல்சி[236], சொன்றி[237], அடிசில்[238], புன்கம்[239], விதவை[240], கூழ்[241] எனப் பல்வேறு பெயர்களால் அழைத்தனர். சோற்றுடன் காலையில் பழஞ்சோறு உண்ணுதலும் பழக்கத்தில் இருந்தது. கட்குடி மயக்கம் தீர்வதற்கு இப்பழஞ்சோறு துணையாக இருந்தது.[242]

**காய்கறி**

கொம்மட்டி மாதுளையின் பசிய காயோடு மிளகுப் பொடியும் கலந்து கருவேம்பினது இலையை அளாவிப் பசுநெய்யில் வேகவைத்த பொரியலை அந்தணர் உண்டனர்.[243] பாகல்[244] வெள்ளரிக்காய்[245] முதலிய காய்களைக் கலந்து செய்த கூட்டும் உணவாகக் கொள்ளப்பட்டது. கீரை உண்ணுதலைப் பாசடகு மிசைதல்[246] என்பர்.

## கிழங்கு வகைகள்

கிழங்கு வகைகளும் பலாப்பழத்தின் கொட்டைகளும் உணவாகச் சேர்த்துக் கொள்ளப்பட்டன.[247] கிழங்குகளில் வள்ளிக்கிழங்கு,[248] சேப்பங்கிழங்கு,[249] கூவைக்கிழங்கு[250] என்பன முக்கியமாகக் குறிப்பிடத்தக்கன.

## ஊறுகாய்கள்

ஊறுகாய்களும் உணவிற்குப் பயன்படுத்தப்பெற்றன. அந்தணர் இல்லத்தில் மாவடு ஊறுகாய் சிறப்பாகக் குறிக்கப்பட்டுள்ளது.[251]

## இறைச்சியுணவு

மீன், நத்தை, ஆடு[252], ஆமான்[253], மான்[254], பன்றி[255], முள்ளம்பன்றி[256], முயல்[257], உடும்பு[258], கோழி[259] முதலியன இறைச்சிக்காகப் பயன்படுத்தப்பெற்றன. இறைச்சியை வேக வைத்தும், நெய்யில் இட்டுப் பொரித்தும், சூட்டுக்கோலில் கோத்துத் தீயில் சுட்டும் பக்குவம் செய்து உண்டனர். நெய்யில் பொரித்த இறைச்சியை வேவை[260], வறை[261], வாட்டு[262], செதுக்கண்[263], குறை[264] என வழங்கினர். வேகவைத்த இறைச்சியைக் 'சூடு, சூட்டு'[265] என வழங்கினர்.

பச்சை மீனைச் சுட்டும்[266] காய்ந்த உப்புக் கண்டத்தைச் சுட்டும்[267] தின்றனர். காட்டுத் தீயில் வேட்டையாடிய விலங்குகளைப் புகை நாறாமல் வதக்கி அவற்றின் மயிர்போகச் சீவி, இறைச்சியை உண்பதும் வழக்கமாக இருந்தது.[268]

இறைச்சியின்பொருட்டு கோழி, பன்றி, ஆடு முதலியன வளர்க்கப்பட்டன.[269] ஆண் பன்றிக்கு நெல்லை இடித்த உணவைக் கொடுத்து, பெண் பன்றிகளுடன் புணராமல் தவிர்க்கும்பொருட்டு, பலநாள்

குழியிலே நிறுத்தி வளர்த்து, அதனைப் பின்னர் உணவாகக் கொண்டனர்.[270] புளிச்சோற்றினை ஈயல் இட்டும், மோருடன் ஈயலைக் கலந்தும் சமைப்பர்.[271]

**பச்சூன்**

இறைச்சியை மேற்குறித்தவாறு பல்வேறு வகையில் பக்குவம் செய்து உண்டதோடு பச்சை இறைச்சியை உண்பதும் வழக்கத்தில் இருந்தது. பச்சை இறைச்சியைச் பச்சூன்[272], பைந்தடி, பைந்நிணம்[273] என வழங்கினர்.

ஆநிரையைக் கவரச் செல்லும் வீரன் போர் முனைக்குச் செல்லும் வேகத்தில் பச்சை ஊனைத்தின்று, கள்ளை அருந்தி, கையை வில்லிலே துடைத்துக்கொண்டு சென்றான் என்று புறநானூறு கூறும்.[274] பச்சூன் என்பது எவ்வகை மாற்றமும் செய்யப்படாத இறைச்சியாகும்.[275] புலால் நாற்றம் வீசும் பச்சை இறைச்சிக்குப் பூ நாற்றமுடைய புகையூட்டி[276] உண்டனர்.

**ஊன்றுவை அடிசில்**

வெண்ணெல் அரிசியும், ஆட்டிறைச்சி ஊனும் இட்டுச் செய்த உணவு.[277] இது சோறு வேறு அதில் இட்ட ஊன் வேறு என்று என்னாதபடி இரண்டும் குழையச் சமைத்த உணவாகும். இதனைப் பதிற்றுப்பத்து **'ஊன்றுவை அடிசில்'** எனக் குறிப்பிடும்.[278] இக்காலத்தார் இதனைப் பிரியாணி என்பர்.

**இனிப்பு வகைகள்**

இனிய உணவு வகைகளுள் இனிப்பு வகைகள் வழக்கத்தில் இருந்தன. பருப்பு வகைகளுடன் வெல்லக் கட்டியைக் கலந்து ஆக்கிய ஒருவகைப் பொங்கல் வழக்கத்தில் இருந்தது.[279] வெல்லப்பாகுடன் மாவினைக் கலந்து அப்பம் என்னும் பணியாரம் செய்தனர்.[280] வரகு, அவரை

முதலியவற்றுடன் பாலினைக் கலந்து செய்யும் இனிய உணவினை உண்டனர்.[281] பாலினையும் பாகினையும் கலந்து செய்த பானக வகைகளைப் பயன்படுத்தினர்.[282] இனிய பழங்களை உண்டனர்.[283] பனையின் நுங்கு நீரும் கருப்பஞ்சாறும் இளநீரும் உண்ணுதற்குரிய இனிய முந்நீர்களாகக் கொள்ளப்பட்டன.[284]

இனிய உணவுகள் ஊன் உணவுக்கும் சோறு, கறி முதலியவற்றிற்கும் அடுத்த நிலையிலே விரும்பப்பட்டன. கரிகாலன் பொருநர்க்கு ஊனையும் கள்ளையுமே முதற்கண் உணவாகக் கொடுத்தான் என்றும், அதில் அவர்களுக்கு வெறுப்பு வந்த பிறகே பணியாரங்களும் சோறு, கறி முதலியனவும் வழங்கினான் என்றும் பொருநராற்றுப்படை குறிப்பிடுகிறது.[285] இதே கருத்தினைப் புறநானூறும் வலியுறுத்தும்.[286]

**தாம்பூலம் தரித்தல்**

தாம்பூலம் தின்பதும் அந்நாளில் பெருவழக்காயிருந்தது. இது உடம்பிற்கு நலம் செய்வதாகக் கருதப்பட்டது. கருங்காலி சீவிக் காய்ச்சின களி கலந்த இனிய பாக்கும் கொடிவெற்றிலையும் சுட்ட சங்கின் சுண்ணாம்பும் ஏந்தி மதுரை மாநகர வீதிகளில் விற்றுத் திரிந்த மாந்தர் காணப்பட்டதாக மதுரைக்காஞ்சி குறிப்பிடுகிறது.[287] பாக்குடன் பஞ்ச வாசங்களும் (தக்கோலம், ஏலம், இலவங்கம், கருப்பூரம், சாதிக்காய்) கலந்து உண்டனர்.[288]

**கள் வகைகள்**

ஊனொடு விருப்பமாக உட்கொண்ட மற்றொரு பொருள் கள் ஆகும். பிழி[289], தேறல்[290], அரியல்[291], நறவு[292], மட்டு[293] என்னும் பெயர்களால் மது வகை குறிக்கப்பெற்றுள்ளது. பனை முதலியவற்றிலிருந்து இறக்கும் கள்ளுடன் தேனும் அரிசி, தினை முதலிய தானியங்களிலிருந்து வடிக்கும்

கள்ளும் வழக்கத்தில் இருந்தன.[294] பனை அரும்புகளிலிருந்தும் ஒருவகைக் கள் தயார் செய்யப்பட்டது.

**கள் உண்டாக்கல்**

மூங்கில் குழாயில் தேன் ஊற்றி அடைத்துத் தேறல் (கள்) உண்டாக்குவர்.[295]

**நறவு**

நாரால் வடிக்கப்பட்ட கள் – 'நறவு' எனப்படும்.

**அரிசி உணவில் கள்**

குற்றாத கொழியல் அரிசியைக் களியாகத் துழாவிச் சமைத்த கூழினை அகன்ற வாயுடைய தட்டில் இட்டு ஆற்றி, பாம்பு வாழும் புற்றில் கிடக்கும் புற்றாஞ் சோற்றினை ஒத்த புறத்தையுடைய நல்ல நெல்முளையை இடித்து, அதில் கலந்து, அது இனிமை பெறுதற்பொருட்டு இரண்டு பகலும் இரண்டு இரவும் கழித்து, வலிய வாயையுடைய சாடியில் இட்டு வெந்நீரில் வேகவைத்து, வடிகட்டி விரலால் அலைத்துப் பிழிந்து உண்டாக்கப்பட்டது.[296] இல்லத்தில் நெல்லாலான தோப்பி என்கிற கள் உண்டாக்கினர்.[297]

**மட்டு**

நிலத்தில் மதுவைப் புதைத்து வைத்துப் பதம் செய்தல் மரபு. ஆதலால் **'நிலம் புதைப்ப பழுனிய மட்டின் தேறல்'** என்றனர்.[298]

**கள்கொள் கலன்**

கள்ளைக் குப்பிகளில் அடைத்து வைத்தும் உண்டனர். கமுகம் பூவின் பாளையைக் கள் வைக்கும் குப்பிக்கு ஒப்புக் கூறுதலின், பச்சை நிறமான குப்பிகளை இதற்குப் பயன்படுத்தினர் எனலாம்.[299]

கள் இருக்கும் இடத்திற்கு இஞ்சியும் நறும்பூவுமாகக் கலந்து தொடுத்த மாலையைக் கட்டியிருப்பர். கள்ளின் நாற்றத்தை மாற்றப் பூவும், கட்குடிக்கும் காலத்து இடையிடையே கடித்துக் கொள்வதற்கு இஞ்சியும் பயன்படுத்தப்பட்டன. களிப்பு மிகுதியால் கள்ளுண்டார் உடல் ஆடுவதைப் போலக் கட்குடமும் கள்ளின் முதிர்ச்சியால் ஆடும் என்றிடும் பதிற்றுப்பத்து **'தசும்பு துளங்கு இருக்கை'** எனக் குறிப்பிடும்.[300] கள்ளில் மலர் அரும்புகளும் இடப்பட்டன.[301]

## கள் எத்தகையது?

அரவு வெகுண்டன்ன தேறல்[302], பாம்பு வெகுண்டன்ன தேறல்[303], தேள் கடுப்பன்ன நாட்படு தேறல்,[304] மகிழ்நரல் மரபின் மட்டுகள்[305] என்றெல்லாம் பேசப்படும் தொடர்கள், கள் மிகுந்த போதையை ஊட்டும் என்ற செய்தயை உணர்த்துகின்றன.

## கள் குடிக்கக் காரணம்

நாள்பட்ட கள் மிக்க போதையைக் கொடுப்பதால் அதனை மிகவும் விரும்பினர். 'குளிரின் நடுக்கத்தைப் போக்கிக் கொள்ள மது உண்டனர்'[306] விழாவின்போது ஏற்படும் மகிழ்ச்சியின் பொருட்டும்[307] வழிநடை வருத்தத்தைப் போக்கவும் மதுவைப் பயன்படுத்தினர் எனலாம்.

## கள்ளுண்டோர்

ஆண், பெண்[308] என இருபாலரும் கள் உண்டனர். கள்ளினை மகளிர் ஊற்றிக் கொடுத்துள்ளனர்.[309] மன்னர் காலை நேரத்திலேயே கள் குடித்து நாளோலக்கத்தில் இருந்துள்ளனர்.[310]

**வேந்தனும் வீரனும் கள் உண்ணல்**

வேந்தன் 'தேறல்' என்ற கள்ளினை உண்டான். வீரர்களுக்குக் 'கலங்கல்' என்ற கள்ளைத் தந்தான்.[311] வேந்தன் குடிக்கும் மது மிக்க களிப்பைத் தருவது அன்று. எனவே வீரர்க்கு அம்மதுவை அளிக்காமல் கலங்கல் நறவம் கலந்து கொடுப்பது வழக்கம். அவ்வாறு தருவதால் போதை விரைவில் ஏறி அவர்கள் போருக்குச் சினந்து எழுந்தனர்.[312]

**கள் விற்றல்**

காலைப்பொழுது தொடங்கியவுடன் கள் விற்கப்பட்டது.[313] கள் விற்கும் இடத்தைச் சுட்ட அதற்குரிய கொடி பறந்தது.[314]

**யவனரின் மது**

மேலும் யவனர்கள் தங்கள் நாட்டிலிருந்து கப்பல் வழியாகக் கொண்டுவரப்பட்ட மது வகைகளைச் செல்வர் மனைகளில் இளம்பெண்கள் பொற்கலத்தில் ஊற்றித் தர ஆடவர் உண்டனர்.[315] அவ்வாறே அரசரும் உண்டனர் எனப் புறநானூறு புகல்கிறது.[316]

**பொதுமக்கள் விருந்தோம்பல்**

சங்க கால மக்கள் விருந்தினரைச் சிறப்பாக உபசரித்தனர். தம்மிடம் உணவுப் பொருள் இல்லையாயினும் கடன்பெற்று வந்து உபசரித்துள்ளனர்.[317] குறிஞ்சி நில மக்கள் தம்மிடம் வரகும் தினையும் இல்லையாயினும் விதைக்காக வைக்கப்பெற்றிருந்த தினைக் கதிரை உரலில் இட்டுக் குற்றி உபசரித்தனர். அவர்கள் அவ்வுணவை அவ்வழியே செல்லும் இரவலர்க்கும் மன்னர்க்கும் அளித்து மகிழ்ந்தனர்.[318] எனவே தங்களிடம் உணவுப் பொருள் இல்லையாயினும் கடன்பெற்று வந்தும், விதைத் தினையையே உணவாகப் பயன்படுத்திப் போற்றியதாலும் விரும்தோம்பலைத் தங்கள் இன்றியமையாக்

கடமையாகக் கொண்டனர் என்பதனை அறிய முடிகிறது. 'அவர்தம் இல்லங்கள் தோறும் விருந்தோம்பும் பண்பு சிறந்திருந்தது'.[319] விருந்தினரைத் தம் பிள்ளைகள் மூலம் உறவுமுறை கூறி அழைத்து, அன்புடன் போற்றினர்.

**அரசர் விருந்தோம்பல்**

ஆடுகோட்பாட்டுச் சேரலாதன், காதல் மங்கையரின் ஊடல் சினப் பார்வைக்கு அஞ்சுவதைவிட இரவலரின் பசித்துன்பப் பார்வைக்கு அஞ்சுபவன்.[320] ஆகவே, அரசர் பரிசிலர்க்கு ஊன்றுவை அடிசிலாகிய உணவும் கள்ளும் அளித்துப்போற்றினர். மற்றும் இனிப்பு வகைகளான பணியாரம், பானக வகைகள் ஆகியவற்றையும் அளித்துப் புரந்துள்ளனர். விருந்தினர், பொதுமக்கள் இல்லத்தில் பல நாள்கள் தங்கியதாகக் குறிப்பு இல்லை. ஆனால் பரிசிலர்கள் அரண்மனையில் பல நாள்கள் தங்கினர் என்பதைத்,

> **“தலைநாள் அன்ன புகலொடு வழிசிறந்து**
> **பலநாள் நிற்பினும் பெறுகுவீர்”**[321]

என்ற மலைபடுகடாம் அடிகளால் அறியலாம். மேலும் ஔவையார் அதியமான் அரண்மனையில் தங்கி இருந்தமையும் இங்கே நினைவு கூரத்தக்கதாகும். ஆடுகோட்பாட்டுச் சேரலாதன் தன் நாட்டில் இரவலர் இல்லாததால் ஈத்துவக்கும் இன்பம் பெறப் பிற நாடுகளிலிருந்து இரவலரைத் தேரில் கொணர்ந்து அவர்களுக்கு மிகுதியான உணவளித்தான்.[322]

**மரியாதை மரபு**

விருந்தோம்பியும் பொருள்களை அளித்தும் பரிசிலரை வழியனுப்பும் மன்னன் பரிசிலர்முன் செல்ல அவர்கள் பின்னால் ஏழடி வந்து மரியாதையோடு வழியனுப்பும் மரபு[323] இன்றும் மக்களிடம் உள்ளதை எண்ணி மகிழ வேண்டும்.

## கொடை

அரசர்கள் கொடையில் சிறந்து விளங்கினர். காலையில் பாடுவது மருதப்பண் (பூபாளம்) மாலையில் பாடுவது செவ்வழிப்பண். இதற்கு முரணிய நிலையில் பாணர் பாடினராம். ஏன்?... 'பெருநள்ளியின் கொடைத் தன்மையால் தம்மை மறந்து இவ்வகையில் பாடினராம்' என்று புறநானூற்றில் வன்பரணர் குறிப்பிடுவார்.[324]

## அரசன் பரிசிலர்க்குக் கொடை அளித்தல்

முற்கூறப்பட்ட உணவு வகைகளின்றிப் பரிசிலர்க்கு முதலில் அவர்கள் மகிழும்பொருட்டுப் புதிய ஆடைகள் வழங்கப்பெற்றன.[325] அரசன் அணிந்திருந்த ஆடையும் இரவலர்க்கு வழங்கினான்.[326] பாணனுக்குப் பொற்றாமரை மலரையும் பாடினிக்குப் பொன்னரி மாலையையும் முத்து மாலையையும் அரசர்கள் அளித்துள்ளனர்.[327] விறலி யானைக்கோட்டு முத்தினைப் பெற்றாள்.[328] விடியற்காலத்தில் இரவலன் தடாரி வாசிக்க அரசன் அப்பொழுதே கொடையளித்துள்ளான்.[329]

மன்னன் பாசறையில் இருக்கும்போது முற்பகலில் வரும் இரவலர்க்குக் களிறுகளையும் பிற்பகலில் வரும் இரவலர்க்குக் குதிரைகளையும் வழங்கினான். பகைவரிடமிருந்து கொள்ளப்பட்ட மாக்களை அளவிறந்து அரசன் கொடுத்தான்.[330] பாண்டிய மன்னன் பகைவரிடமிருந்து கைக்கொண்ட பொருட்களை நட்டோர்க்கு வழங்கினான்.[331] பொருநன் பிடி, கன்று, களிறு ஆகியவற்றைப் பெற்றான்.[332] குதிரைகள் பூட்டிய தேர்களையும்[333] நெற்குவியல், எருதுகள், அணிகலன்கள்[334] ஆகியவற்றையும் அரசர் அளித்தனர்.[335]

சொல்லேர் உழவராகிய புலவர்கள் இவற்றைப் பெற்றதோடு நாடுகளையும் பெற்றுள்ளனர்.[336] காட்டினில் பெருந்தலைச்சாத்தனாருக்குத் தன் தலையையே அளிக்க முன்வந்தான் குமணன்.[337]

## வீரர்க்குக் கொடை

போருடற்றிய வீரர்களுக்கு அரசர் பொன்னை உருக்கிக் கட்டியாக்கி வழங்கினர்286; ஊர் முதலியனவற்றையும் வழங்கினர்.[338]

## அரசியர் கொடை

வேளிர்குல ஆடவர்களே அல்லாமல் மகளிரும் வண்மைப் பண்பில் சிறந்து விளங்கினர் என்பார் துரை அரங்கசாமி.[339] புலவர் ஆதரவு நாடி கண்டீரக்கோ மனைக்குச் செல்ல, கண்டீரக்கோ நெடுந்தொலைவு சென்றிருந்த காரணத்தால் அவன் மனைவி பரிசிலாகப் பெண் யானையைத் தந்தாள்.[340]

பிற நாடுகளிலிருந்து தன் காட்டிற்கு வரும் பெண் யானைகள் **'விருந்தின் வீழ்பிடி'** எனப்படும். அவை ஆண் யானைகளால் விரும்பப்படுவதால் 'வீழ்பிடி' எனப்பட்டது. அத்தகைய பிடிகளைக் கண்ட மகளிர் தம் நடைபோன்ற நடையுடைய அவற்றை எண்ணினர். தொகை அதிகமாக இருப்பதால் எண்ணாமல் விட்டனர்.[341] இதில் பெண்கள், பெண் யானைகளையே எண்ணினர்.

கடல்பிறக்கோட்டிய செங்குட்டுவன் விறலியர்க்குப் பரிசிலாகப் பெண் யானைகளைத் தந்தான்.[342]

இவற்றின்வழி, பெண் கொடுக்கும் பரிசுப் பொருளும் பெண் எண்ணக் கூடிய எண்ணிக்கையும் பெண் பெறும் பரிசிலும் பெண் யானையாகவே உள்ளது என்பது குறிப்பிடத்தக்கது. இவை மேலும் ஆராயத்தக்கதாகும்.

இவ்வாறு கொடை அளிப்பதனால் இந்த நில்லா உலகத்தில் நிலைக்கக் கூடிய புகழ் அரசர்க்குக் கிடைத்தது.[343]

இவற்றின்வழி, பரிசிலர் அரசர் (அரண்மனையில் இருந்தாலும் பாசறையில் இருந்தாலும் காட்டிலிருந்தாலும்) எவ்விடத்திலிருந்தாலும் பரிசில் பெறச் சென்றனர். வீரர்களும், பாணர் முதலிய கலைவாணர்களும் புலன் உழுது உண்மாராகிய புலவர்களும் பரிசில் பெற்றனர் என அறிய முடிகிறது. இவர்களில் புலவரே பெருமதிப்பிற்கு உரியவராக விளங்கினர் என்பதும் பெறப்படும். அணிந்த பழைய ஆடைகளும் இரவலர் பெற்றனர் என்பதும், கள்ளில் பலவகை இருந்தன என்பதும் கள் தயாரிப்புப் பற்றியும் அறியமுடிகிறது.

குடிமக்களின் விருந்தோம்பும் பண்பு பாராட்டுக்குரியதாக விளங்குகிறது. பொதுமக்களைவிட மன்னர்கள் அதிக அளவு கொடையளித்திருப்பதற்குக் காரணம் அவர்கள் மனத்திரட்சியுடன் பொருள்திரட்சியும் பெற்றிருந்தனர் எனலாம்.

குடிமக்களில் சிலரும் நீண்ட காலம் பயன் விளைவிக்கக்கூடிய சந்தனம், யானைக்கோடு ஆகியவற்றை வழங்கியுள்ளனர்.[344] எனினும் குடிமக்களைவிட அரசர்களே இவைபோன்ற பொருள்களைக் கொடையாகப் பெரிதும் வழங்கியுள்ளனர் என்பதை அறியமுடிகிறது.

அரசர்கள் 'ஈகையரிய இழையணி'யாகிய[345] தாலியைத் தவிர மற்ற பொருள்களையும் வழங்கியுள்ளனர் எனத் தெரிகிறது.

தம் அரண்மனையில் பலநாள் மன்னர்கள் விருந்தளித்துள்ளனர். போருக்குச் செல்லும் வீரர்கள் வெள்ளாடைகள் அணிந்து செல்வதும் வழக்கத்தில் இருந்திருக்கிறது.

**அரசரை வாழ்த்தல்**

புரவலரைப் பரிசிலர் பலவாறு வாழ்த்திப் பாராட்டி உள்ளனர். நெடுநாள் வாழும்படி வாழ்த்தலே பெரும்பான்மையாகும். பொதுப்பட

'மன்னிய நெடிதே'[346] என்றும் 'நிலவரை நிலீஇயர்'[347] என்றும் வாழ்த்துதல் உண்டு.

நிலைபெற்று வாழ்வதற்குப் பல உவமைகளும் சொல்லப்படும். விண்மீன், மழைத்துளி[348], இமயமலை, பொதியமலை[349], அயிரைமலை[350], ஞாயிறு, மதியம்[351], துறையூர்மணல்[352], காஞ்சியம் பெருந்துறைமணல்[353], காவிரி மணல்[354], பொருநை மணல்,[355] நெல் முதலியவை உவமையாகச் சொல்லப்பட்டுள்ளன.

'புதுப்பல கூலங்கள் பெறுக'[356] என்றும், 'வாழ்க அவன் கண்ணி'[357] என்றும், 'வாழ்க நின் வளனே'[358] என்றும் 'ஆயிரம் வெள்ளம் வாழிய'[359] என்றும் வாழ்த்தப்பெறும்.

'வயிறு மாசிலீயர் அவன் ஈன்ற தாயே'[360] என்று தாயினை வாழ்த்துவதும் 'யான் வாழும் நாளும் பண்ணன் வாழிய'[361] என்றும் வாழ்த்துவதும் 'முள்ளும் நோவ உறாஅர்'[362] என்று வாழ்த்துவதும் புதுமையாக உள்ளன.

நெடிது நாள் மன்னனை வாழ்க என வாழ்த்தும் முறையே பின்னர் இறைவனைப் பாடும் போதும் பல்லாண்டு பாடுவதாக வளர்ந்தது எனலாம். பெரியாழ்வார் பாடிய திருப்பல்லாண்டு இம்முறையில் அமைந்ததேயாகும்.

இதன்வழி, தலைவன் நீண்டநாள் வாழவேண்டும் என்பதே புலவரின் வாழ்த்தாக உள்ளது என்பதை அறியமுடிகிறது.

**தொழிலும் தொழிலாளரும்**

சமுதாயம் சிறப்பாக அமைய, நல்ல தொழிலும் சிறந்த தொழிலாளர்களும் மிகவும் அவசியம். தொழில் மாந்தர் பலராவர். இவரைக் கம்மியர், தொழுவர் என்று அழைப்பர். 'கம்மியர்' என்பது தொழில் செய்வார்

என்னும் பொருளில் வந்தது என்று கருதுவர்.[363] இவர்களுள் தச்சர், கொல்லர், குயவர், பொன்செய் கம்மியர் முதலியவர்களைச் சிறப்பாகக் குறிப்பிடலாம்.

**கொல்லர்**

இவர் இரும்புக் கருவிகளைச் செய்வர். இவரது உலைக்கூடத்தில் நெருப்பினைத் தூண்டுவதற்கு உலை இருக்கும். கூடத்தில் அடிக்கும் ஓசையால் அருகிலுள்ள இல்லங்களில் இருந்த புறாக்கள் உறக்கம் தீர்ந்தது[364] என்று கூறப்பட்டிருப்பதால் இக்கொல்லர்களின் உலைக்களம் ஊர்களிடையே இருந்தது என்பது தெரியவருகிறது. இவர்கள் போருக்குரிய கருவிகளைச் செய்து தந்தனர்.[365]

**பொன்செய் கம்மியர்**

இவர் பொன்னை நெருப்பில் உருக்கி ஆபரணங்கள் செய்து தருபவர்.[366] பொன்னின் மாற்றை அறிதற்குக் 'கட்டளை' எனப்படும் உரைகல் உண்டு.[367] உரை காணும் தட்டாரும், பணித்தட்டாரும் வெவ்வேறு பணிகளைச் செய்தனர்.[368]

**தச்சர்**

இவர்கள் மரவேலை செய்பவர். இவர் 'மரங்கொல் தச்சன்' எனச் சிறப்பிக்கப்பட்டுள்ளனர். தச்சச் சிறுவர்கள் காட்டில் சென்று மரத்தை வெட்டி எடுத்துவருவர்.[369]

**முத்துமணிகளில் பணி செய்வார்**

பொன், தமிழகத்தில் மேற்குமலையில் காவிரி தோன்றும் இடத்தை அடுத்தும், கொண்கானம் நாட்டினிலும் கிடைத்தது.[370] பொன், மணி, முத்து, பவழம் ஆகியவற்றைக் கொண்டு விலைமதிப்புடைய ஆபரணங்களைச்

செய்தனர்.[371] பந்தர் என்ற ஊரில் பலரும் புகழும் முத்துகள் கிடைத்தன.[372] 'கொடுமணம்' என்னும் ஊர், நல்ல அணிகலன்களுக்குச் சிறந்தது.

**குயவர்**

குயவர் 'கலம்செய்கோ' என்றும் 'வேட்கோ' என்றும் அழைக்கப்பெற்றனர்.[373] இவர்கள் மண்ணால் மட்பாண்டம் செய்வர். இவர்களின் சிறுவர்களும் இத்தொழிலுக்கு ஒத்துழைப்பர்.[374]

**ஆடை நெய்வோர்**

வன்புலத்துக் காடுகளில் இல்லங்களையடுத்து, வேலிபோல் பருத்திப் பயிரிட்டனர்.[375] இத்தொழிலில் சிறியவரும் பெரியவரும் ஈடுபட்டிருந்தனர். இவரைக் கம்மியர் என்று மதுரைக்காஞ்சி அழைக்கிறது.[376] பெண்டிர் விளக்கொளியில் பருத்தியை நூற்பர்.[377]

**ஆடை ஒலிப்போர் (வண்ணாத்தி)**

உவர் நிலத்தில் கிணறு தோண்டித் துணி வெளுத்தனர்.[378]

**நன்செய் ஆக்கல்**

உழவர் புன்செய் நிலங்களை ஏர் உழுது, நன்செய் நிலமாக மாற்றினர்,[379] வன்னியத்திலும் கல்லை உடைத்து உவர் நீர் கிணறு உண்டாக்கினர்.[380] வலியபாறை நிலத்தைக் கோடரியால் உடைத்து உட்கிணறு தோண்டினர். இதனை இக்காலத்தார் 'பிள்ளைக்கிணறு' என்பர். அதிலிருந்து நீர் இறைக்க மரத்தால் ஆன 'முகவை' பயன்படுத்தப்பட்டது.[381] ஆம்பி என்பதும் ஒருவகை நீர் இறைக்கும் கருவியாகும்.[382]

**பயிரிடலும் புள் ஓம்பலும்**

நிலத்தைப் பண்படுத்தி, நெற்பயிரிட்டனர். நெல் விளைந்தது. நெற்கதிரைத் தின்ன வரும் பறவையை மகளிர் ஒட்டினர்.[383] இளைய மகளிர் பாடலுக்கேற்ப ஒட்டிய மயில்கள் மருத நிலத்தில் நின்று ஆடின.[384]

**விளைச்சல்**

எருதுகளின் உழைப்பினால் நெற்குவியலாகிய செல்வம் கிட்டியது.[385] இரும்புப் பூண் கொண்ட உலக்கையால் அரிசி குற்றி எடுத்தனர்.[386]

**தினை**

குறிஞ்சி நிலத்தின் முக்கிய உணவு தினையாகும். தினைப் புனத்தைப் பன்றியிடமிருந்து காக்கும்பொருட்டுப் பன்றிப் பொறி பயன்படுத்தினர்.[387]

மான் தோலின்மீது தினையை உலர்த்தினர். அதனைப் பறவைகள் கவராமலிருக்கக் கண்ணி வைத்திருந்தனர். அதில் காட்டுக்கோழியும் இதல் என்ற பறவையும் அகப்பட்டுக்கொண்டன. அவற்றை அம்மக்கள் உணவாகக் கொண்டனர்.[388]

**உப்பு விளைவு**

நெய்தல் நில மக்கள் வெள்ளுப்பு விளைவித்து மலைபோலக் குவித்து வைத்தனர்.[389]

இவ்வகையில் உழவுத்தொழில் செய்யும் தொழிலாளர்கள் மூங்கிலில் கூடை, முறம் பின்னும் தொழிலார்கள் எனச் சமுதாயத்தில் பல்வகைத் தொழில் செய்வோர் இருந்தனர். அவர்கள் சமுதாய முன்னேற்றத்தில் பெரும்பங்கு வகித்தனர் எனலாம். அங்கே கிடைக்கும் பொருளையே தங்கள் வாழ்விற்குப் பயன்படுத்தினர் என்பதையும் அறியமுடிகிறது.

**வணிகம்**

வணிகம் செய்பவர்கள் வணிகர் எனப்பட்டனர். சங்க காலத்தில் வணிகம் நடுவுநிலைமையோடு நடைபெற்றது.

**பண்டமாற்று**

சங்க காலத்தில் ஒரு பொருளைக் கொடுத்து மற்றொரு பொருளைப் பெற்றனர். இது பண்டமாற்று என்று அழைக்கப்பெறும். மீன் கொடுத்து நெல் பெற்றனர்.[390] கள்ளின் விலையாக வெள்ளை வரகும் கொள்ளும் தந்தனர்.[391] வீரர்கள் கள்ளுக்கு விலையாக யானையின் தந்தங்களை அளித்தனர்.[392] இதேபோன்று பல்வேறு பொருள்களையும் மாற்றிக் கொண்டனர்.

**நீர்வழி வாணிகம்**

கழியின் வழியாக வந்திறங்கும் கடல் செல் ஓடங்களை ஆறுகளின் வழியாகச் சென்று துறைதோறும் நின்று வாணிகம் செய்தனர்.[393] சேரநாட்டினின்று சந்தனம், அகில், மிளகு ஆகிய வாசனைப் பொருள்களும் மருந்துப் பொருள்களும் மேலைநாட்டுக்கு ஏற்றுமதி செய்யப்பெற்றன. குதிரைகள் மேலை நாட்டிலிருந்து தமிழகத்திற்கு இறக்குமதி செய்யப்பட்டன.[394]

**பொழுதுபோக்குகள்**

மக்கள் தொழிலை மேற்கொள்ளாத காலங்களில் சூதாடுதல், விலங்குப்போர், புனலாடல், பொழிலாடல், விழாக் காண்டல் முதலிய கேளிக்கைகளில் தமது பொழுதைப் போக்கினர்.

**சூதாடல்**

சூதாடும் இடத்தை மக்கள் 'கழகம்' என வழங்கினர். ஊர் மன்றுகளில் நரை மூதாளர்களாகிய முதியவர்கள் சூதாட்டத்தில் பொழுதைப் போக்கினர். எப்பொழுதும் சூதாடியதன் காரணத்தால் அவ்விடம் தேய்ந்தும் குழி விழுந்தும் இருக்கும்.[395]

**விலங்குப்போர்**

மலையானின் ஏறும் நாட்டுக் காளையும் ஒன்றோடு ஒன்று முட்டிப் பொர, கோவலரும் குறவரும் அதனைக் கண்டு ஆரவாரம் செய்து மகிழ்ந்தனர் என்பதை மலைபடுகடாம் கூறுகிறது.[396] இரண்டு காளைகள் தம்மில் பொருதலைப் புறநானூறு புகலும்.[397]

இவற்றால் ஏனைய விலங்குகளையும் பறவைகளையும் போரில் ஈடுபடுத்தி, மக்கள் கூடியிருந்து வேடிக்கை பார்த்துப் பொழுதைப் போக்கினர் என்பதை அறியலாம்.

**குரவையாடல்**

உழவர்கள் கள் உண்டு குரவையாடினர்.[398] குறவர்கள் தங்கள் குடில்களின் முன் குரவைக் கூத்தாடினர்.[399]

**நீராடல்**

துயில் எழுந்ததும் குளிர்ந்த நீரில் நீராடுதல் பெருவழக்க மாயிருந்தது. தொழில் மேற்சொல்வோர் தங்கள் உடல் வெப்பமும் வியர்வையும் நீங்க நீராடினர்.[400] புதல்வர் பயந்த மகளிர் ஈன்றணிமை வருத்தம் நீங்கியபின் சுற்றத்தாருடன் குளத்தில் சென்று குளித்தலை மதுரைக் காஞ்சி கூறுகிறது.[401]

குளிர்ந்தநீரில் நீராடிய செய்திகள் காணப்படுகின்றதேயன்றிக் குளிப்பதற்கு வெந்நீர் பயன்படுத்தியதாகத் தெரியவில்லை.

## நம்பிக்கைகள்

சகுனம் போன்றன சமுதாயத்தில் மக்கள்பால் வேரூன்றிவிட்டன. அவை நம்பிக்கைகளின் விளைவாகும்.

## வெறியாட்டு

தாயர் தாங்கள் கேட்ட குறியிலிருந்து தம் மகளுக்கு நேர்ந்த துன்பம் தெய்வத்தால் வந்தது என்று அறிந்த காலத்து அத்தெய்வத்திற்கு வேண்டும் சாந்தி வழிபாடுகளை நிகழ்த்தினர். தெய்வ வழிபாடுகளில் ஒன்று வெறியாட்டு. இவ்வெறியாட்டு நிகழ்ச்சியை நடத்திவைக்கப் 'படிமத்தான்' எனப்படும் வேலனை அழைப்பர். முருகனை வழிபடுவதற்கு உரித்தாகக் கொள்ளுமிடம் "வெறியயர்களம்" எனப்படும். இது பெரும்பாலும் வீட்டின் முற்றமாக அமைந்திருக்கும். அம்முற்றம் நறுமணல் பரப்பப்பட்டு நன்கு அலங்கரிக்கப்பட்டிருக்கும். அக்களத்தில் ஒருபால் முருகப்பெருமானுக்குரிய கோழிக்கொடி நாட்டி வைக்கப்பட்டிருக்கும். பூவும் மாலையும் அதற்கு அணிவித்து, நறும்புகை காட்டி, முருகப்பெருமானை எழுந்தருளச் செய்வான். அப்பூசையில் ஆட்டு மறியை அறுத்து அதிலிருந்து பெருகும் குருதியுடன் செந்தினையைக் கலந்து பலியாகத் தூவுவான். பல்வகை இயங்கள் முழங்க முருகப்பெருமானின் புகழ் கூறி வழிபடுவான். இவ்வழிபாடு இரவின் சாமப்பொழுதில் நிகழ்ந்ததாகத் தெரிகிறது.[402] குறமகளிர் முருகனுக்கு வெறியாட்டு எடுத்து வழிபட்ட நிகழ்ச்சி திருமுருகாற்றுப்படையில் நன்கு விவரிக்கப்பட்டுள்ளது.[403]

**தெய்வ ஆவேசம்**

புலைமகள் மேல் தெய்வ ஆவேசம் வந்து ஆடுங்காலத்து அவள் ஆநிரைகளைப் போலத் துள்ளித் துள்ளி ஆடுவாள் என்று தெரிகிறது.[404]

**பல்வகை நம்பிக்கைகள்**

காற்று வலப்பக்கமாக வீசினால் உலகத்தில் நன்மை பயக்கும் என நம்பினர்.[405] காந்தட்பூவில் தெய்வம் உறைவதாக நம்பினர்.[406] போரிடச் செல்லும்முன் உன்னமரத்தைக் காணும்பொழுது, அது மலர்ச்சியுடன் இருந்தால் வெற்றி என்றும் மாறாக இருந்தால் தோல்வி ஏற்படும் என்றும் நம்பினர்.[407]

நீர்வழிச் செல்லும் புணைபோல விதிவழி வாழ்க்கைச் செல்லும்.[408] தூணில் தெய்வம் வாழ்வதாகவும்[409] போர் முரசுக்குச் செந்தினையும் குருதியும் கொண்டு பலியிட்டால் வெற்றி கிட்டும் என்றும்[410] போரில் புண்பட்ட வீரர்களைப் பேய் தாக்கும் என்றும் வெண்சிறு கடுகு புகைத்தால் பேய் அணுகாது[411] என்றும் நம்பினர். நடுகல்லுக்குப் படைக்கப்படும் மது போன்ற பொருள்களைத் தெய்வமாக உள்ள வீரன் ஏற்றுக்கொள்வான் என நம்பினர்.[412]

**சகுனம்**

இன்ப துன்ப நிகழ்ச்சிகளைச் சகுனத்தால் உணர்த்தும் மரபு மிகப் பழமையானதாகும். இதனைத் தொல்காப்பியர் 'மன்னு நிமித்தம்' என்பார். இதற்கு விளக்கம் கூறும் இளம்பூரணர் மன்னு நிமித்தமாவது 'ஆட்சி பெற்ற நிமித்தம்' என்றும் அது பல்லி முதலியன எனவும் கூறுவார்.[413]

'சகுனம்' என்ற சொல் சொகினம் என்ற சொல்லின் திரிபாகும். சொகினம் என்பதற்கு நிமித்தம் என்பது பொருள். சொகினம் பார்ப்பவன்

சொகினன் என்றழைக்கப்பட்டான். தொண்டை நாட்டில் திருவேங்கடத்துக்கு அருகில் உள்ள ஊர் சொக்கினனூர் என வழங்கிப் பின்னர்த் திருச்சொகினனூர் (திருச்சானூர்) என மருவி வழங்கியிருத்தல் வேண்டும்.[414]

## புள்ளும் பொழுதும் பற்றியவை

காரி, செம்போத்து முதலிய பறவைகள் குறுக்கிலும்[415] பகலில் கூகை குழறுதலும்[416] தீய நிமித்தமாகக் கருதினர். புள்ளும் பொழுதும் பார்த்து வினையாற்றல் வழக்கமாயிருந்தது.[417]

## விரிச்சி கேட்டல்

விரிச்சி கேட்டல் என்பது நற்சொல் கேட்டலாகும். காதில் விழுந்த சொற்களைக் கொண்டு நலம் தீங்குகளை உணர்ந்து கொள்ளுதல் மரபு. முதுபெண்டிர் நெல்லும் நீரும் சொரிந்து விரிச்சி கேட்பதைப் புறநானூற்றால் அறிகிறோம்.[418]

## மற்றும்பிற

வீட்டிலுள்ள விளக்கு அணைதலும்[419] விரிந்த கூந்தலுடன் பெண் வருதலும்[420] முரசின் தோல் கிழிவதும் களிறுகள் கோடுகளை இழப்பதும்[421] தீய நிமித்தங்களாகக் கருதப்பட்டன.

## சுடுகாடு

சுடுகாடு கள்ளி நிறைந்த களர் நிலமாகும்; ஈமத் தீயும் புகையும் படர்ந்தது; பகலிலும் கூகைகள் குழறக் கூடியது. அது பேய் மகளையும் உடையதாகும். இதனை முதுகாடு என்பர்.[422] அங்குச் சிறுசிறு வெள்ளெலும்புகள் கிடைக்கும்.[423] எல்லா மக்களும் அழிய அதுமட்டும் அழியா இயல்புடையது.[424]

### புலையன் செயல்

சுடுகாட்டில் பாடையை நிறுத்திய பின்பு பரப்பப்பட்ட புல்லின் மீது கள்ளும் உப்பில்லாச் சோறும் படைத்தனர். அதனைப் புலையன் உண்பான். பின்னர் ஈமத்தீ மூட்டப்பெற்றது.[425] புலையன் அவ்வுப்பில்லாச் சோறு படைக்கும்போது பின்பக்கம் பார்த்தலில்லை.[426]

### இடுகாட்டில் தாழி

தாழியில் பிணத்தை இட்டு அதனைக் கவிழ்த்துப் புதைத்தனர். அத்தாழியின் மேற்புறத்தில் கழுகுகள், அண்டங்காக்கை, கோட்டான் ஆகிய பறவைகள் பரவியிருந்தன. அங்குப் பேய்களும் கூட்டமாக இருந்தன.[427]

### சுடுகாடு அடையும் முன்னர் புகழ் அடைக

முடிமன்னர்களும் சுடுகாட்டையே அடைந்தனர். எனவே பரிசிலர்களுக்குப் பொருள் கொடுத்து, நிலையான புகழை அடைவாயாக என்று அந்துவன் கீரனுக்கு அறிவுறுத்துகிறார் கரவட்டனார்.[428]

### இறைநிலை

இறைக் கோட்பாடு தொன்றுதொட்டு மக்களிடையே வேரூன்றி வந்துள்ள ஒரு பண்பாகும். மனித சக்திக்கு மேற்பட்ட மற்றொரு சக்தி உலகினை ஆட்டிப் படைப்பதாக அவர்கள் கருதினர். உலகில் நிகழும் நன்மைக்கும் தீமைக்கும் முதற்காரணமாக இருப்பது இறை ஆற்றலே என நம்புகின்றனர்.

தெய்வம் போற்றுதல் முதற்கண் அச்சத்தால் விளைந்தது எனலாம். மக்கள் தங்களைச் சுற்றிலும் காணும் இயற்கைப் பொருள்களில் எண்ணற்ற தெய்வங்கள் உறைவதாக நம்பினர். மலை, காடு, மரம், நீர்நிலை, கழி, கடல் முதலியவற்றிலெல்லாம் தெய்வங்கள் உள்ளன என்று நம்பினர்.

**"காடே கடவுள்மேன;**

**புறவே புள்ளிழை மகளிரோடு மள்ளல்மேன**

**ஆறே அவ்வனைத்து"[429]**

என்ற அடிகள், காட்டிலும் மக்கள் செல்லும் பிற வழிகளிலும் தெய்வம் உறைவதைக் காட்டும்.

## மர வழிபாடு

மாந்தர் சிலர் நீர்த்துறை, ஆலமரம், மராமரம் ஆகியவற்றிடையே உறையும் தெய்வங்களை முறையாக வணங்கிய பின்னே தம் வினைகளைத் தொடங்குவர். ஆலமரவழிபாடு சிவனையும் திருமாலையும் குறித்து வழங்கியது. இதனை ஆல் அமர் செல்வன்[430] 'ஆல்கெழு கடவுள்'[431] 'ஆல்அமர் கடவுள்'[432] என்பதனால் அறியலாம். முதுமரத்தில் தெய்வம் உறையும் என்பதை மலைபடுகடாமும் உறுதி செய்கிறது.[433] சங்க இலக்கியத்தில் காவல் மரத்தைத் தெய்வமாகப் போற்றியதையும் எண்ணிப்பார்க்க வேண்டும். **'இறைமையைப் புலப்படுத்தும் இயற்கையே சமயம்'** என்று ஹாப்பின்ஸின் கூற்று இங்கு நினைவு கூரத்தக்கதாகும்.[434]

நாளடைவில் மரத்தடியில் கந்து, இலிங்கம் முதலியவற்றை வைத்து வழிபடும் வழக்கம் தோன்றியது. கோயில்கள் கட்டியபோது மரங்களை நடுவில் அமைத்தே கட்டினர். பின்னர் அம்மரங்கள் 'தலவிருட்சம்' எனப் போற்றப்பெற்றன.[435]

பாணன் பசியோடு புரவலனைக் காணச் சென்றபோது வழியிலுள்ள கள்ளி நீழற் கடவுளை வாழ்த்திச் சென்றான்.[436]

## நடுகல் வழிபாடு

போரில் மாய்ந்த மறவர்களைப் பெரிதும் மதித்து அவர்களின் பெயரையும் மறச் செயலையும் கல்லிற் பொறித்து, நட்டு, மாலை சூட்டிப்

படையலிட்டு மக்கள் வழிபாடு செய்தனர். இந்நடுகல் வழிபாடு குறித்து இவ்வியலில் முன்னரே ஆயப்பெற்றுள்ளது.

## நானிலத் தெய்வங்கள்

தொல்காப்பியம், குறிஞ்சி நிலத்துக்குச் சேயோனையும், முல்லை நிலத்துக்கு மாயோனையும் மருத நிலத்துக்கு வேந்தனையும் (இந்திரன்) நெய்தல் நிலத்துக்கு வருணனையும் தெய்வமாகக் குறிப்பிடும்.

## சேயோன்

நிலத்திற்கேற்பவும் சூழ்நிலைக்கேற்பவும் மக்களின் நில வழிபாடுகள் அமைந்துள்ளன. குறிஞ்சி நில மக்கள் மலைமீது நின்று கதிரவன் கடலில் எழும் இயற்கை எழில் காட்சியைக் காலையில் கண்டு களித்தனர். அவர்களுக்கு அக்காட்சி நீல மயில்மீது செவ்வேள் இருப்பதுபோல் தோன்றியது. அவ்வியற்கை வழிபாடே முருக வழிபாடாக மலர்ந்தது என்பார் திரு.வி.க.[437] மலைத் தெய்வம் என்பதற்கேற்ப, முருகன் கோயில்கள் பல மலைமீது இருக்கக் காணலாம். குறவரின் வேட்டைக்குரிய வேலே முருகனின் படைக்கருவி, மலை விலங்காகிய யானை ஊர்தி; குறிஞ்சிப் பறவை மயில் ஊர்தியும் கொடியும்; குறமகள் வள்ளி மனைவி, படையலுக்குரிய பொருள் தேனும் தினையும், இப்பொழுது வளர்ந்த நிலையிலுள்ள முருக வழிபாட்டினை நோக்கின், அவருக்குரிய பொருள் யாவும் மலைக்குரியன என்பதறியலாம் என்பார் மு.வரதராசனார்.[438] வேலனின் வெறியாட்டும் இயற்கையோடு தொடர்புடையதேயாகும்.

## மாயோன்

முல்லைநில மக்கள் காட்டின் அடர்த்தியான கருமையை இயற்கை எழிலை – மாயோனைக் கருதிப் போற்றினர். காட்டில் மலர்ந்த காயாம்பூ திருமாலின் நிறத்தை நினைவூட்டியதால் சிறப்பதாயிற்று.[439] முல்லைநில

ஆயர்களின் தொழில், உணவு முதலியன அவர்தம் தெய்வமாகிய மாயோனுக்கு உரியவாயின. கண்ணன் மாடு மேய்த்ததும் குழலூதியதும் வெண்ணெய் உண்பதும் நப்பின்னை ஆச்சியை மணந்ததும் எல்லாம் முல்லைநிலத் தொடர்பினவேயாம்.

**இந்திரன்**

மருத நிலத்துக்குரிய இந்திரனும் வடபுல ஆரியர் கூறும் இந்திரனும் வேறு வேறு என்பார் மறைமலை அடிகள்.[440] ஆய் அண்டிரனைத் தொடர்புபடுத்தி இந்திரன் புறநானூற்றில் பேசப்படுகிறான்.[441] சிலம்பிலும் மணிமேகலையிலும் இந்திர விழா பற்றிய குறிப்புள்ளது. ஆனால் பிற்காலத்தில் இந்திரவிழா எடுக்கப்பெறாது ஒழிந்ததென அறிகிறோம்.

**வருணன்**

'நெய்தல் நிலப் பரதவர்கள் வலைவளம் வாய்க்கத் தம் இல்லத்தே சுறாமீன் கோட்டினை நட்டு, கடல் தெய்வமாகிய வருணனை வழிபட்டனர். அப்போது தாழை மலர் சூடியும் பானங்கள் அருந்தியும் கடல் வேட்டைக்குச் செல்லாது மகிழ்ந்தனர். இந்திர வழிபாடு போலவே வருண வழிபாடும் தமிழகத்தே மறைந்தது.

மேலும், சிவன், கொற்றவை, பலதேவன் முதலிய கடவுளர் பற்றியும் சங்க இலக்கியம் குறிப்பிடுகிறது.

இதன்வழி இயற்கையை இறையாக ஏற்றுக்கொள்கிற முறை சங்கப் புற இலக்கியங்களின் வழியே காணக்கிடக்கிறது எனலாம்.

**துறவுநிலையும், வீடுபேறும்**

முதலில் இல்லறத்தில் இருந்து, பின்னர்த் துறவறத்துக்கு மாறிய தலைவனைக் குறித்து மாற்பித்தியார் புறநானூற்றில் குறிப்பிட்டுச் செல்வார்.[442]

'எத்தனையோ சிறப்புடன் ஆண்ட மன்னாதி மன்னரும் மாண்டொழிந்தனர். அவர்தம் எண்ணிக்கைக்கு அளவு இல்லை, எல்லார்க்கும் இறப்பு வருதல் உறுதி. ஆதாலால் இறந்துபடும் முன்னர் இவ்வுலகப் பற்றை ஒழித்துத் துறவு கொள்க' என்று கூறுகிறார் ஐயாதிச் சிறு வெண்தேரையார்.[443] பற்று விட்டாரைத் திருமகள் பற்றிக்கொள்வாள் என்பதை **'விட்டாரை விடாஅள் திருவே'**[444] என்பதனால் அறியலாம். தவமியற்றுவோர் நற்பயன் வாய்க்கப் பெறும்வரை உடம்பைப் பாதுகாக்க வேண்டும்.[445] வீட்டுலகத்தைப் பெறுவதற்கு அறச்செயலே தெப்பமாகும் என்பதை,

**"அறவினை யன்றே விழுத்துணை யத்துணை**
**புணைகை விட்டோர்க்(கு) அறிதே"**[446]

என்ற புறப்பாடலால் அறியலாம்.

தொல்காப்பியரும் இல்லற வாழ்க்கையின் முடிந்த பயனாகத் துறவறத்தைக் குறிப்பிடுகிறார். இந்நெறி ஆடவர் பெண்டிர் இருபாலார்க்கும் ஏற்ற நல்துணையாம். வையத்தில் வாழ்வாங்கு வாழ்ந்து, இச்சைகள் எல்லாம் அறநீக்கி, வீட்டின்பம் பெறுதற்கு ஏதுவாகிய துறவு மேற்கொள்ளுதலே வாழ்வின் முடிந்த பயன் என்கிறார்.[447]

### அறிவியல் கருத்துகள்

இலக்கியங்களில் அறிவியல் கருத்துகள் இயற்கையாகப் படிந்துள்ளன. அவை வாழ்வியலோடு இணைந்ததாகக் காணப்படுகின்றன.

### நில்லா உலகம்

உலகம் எப்போதும் இயங்கிக் கொண்டே சுற்றிக்கொண்டே இருக்கும் இயல்புடையது. அதனை அறிந்த நம் முன்னோர் 'நில்லா உலகம்'[448] என்றனர்.

**ஐம்பூதங்களால் ஆன உலகம்**

இந்த உலகம் நீர், நிலம், தீ, காற்று, விசும்பு ஆகிய ஐம்பெரும் பூதங்களின் கலவையாகும் என்பதனை,

**"நீரு நிலனுந் தீயும் வளியும்**
**மாக விசும்போ டைந்துடன் இயற்றிய"[449]**

என்னும் மதுரைக் காஞ்சி அடிகள் புலப்படுத்தும்.

இந்நிலம் அணுக்களால் செறிந்ததாகும். அந்நிலத்தின் உயரே வானமாகிய வெட்டவெளி உள்ளது. வானில் காற்று உலவுகிறது. காற்றினால் தீ உண்டாகிறது. அத் தீக்கு மாறுபட்ட தண்ணீரும் உண்டு என்ற வேதியியல் கருத்தினை,

**"மண்திணிந்த நிலனும்**
**நிலம்ஏந்திய விசும்பும்**
**விசும்புதைவரு வளியும்**
**வளித்தலைஇய தீயும்**
**தீமுரணிய நீரும் என்றாங்(கு)**
**ஐம்பெரும் பூதத்(து) இயற்கை"[450]**

என்னும் முரஞ்சியூர் முடிநாகனார் கருத்துப் புலப்படுத்தும்.

இதில் காற்று எப்போதும் இயங்கிக் கொண்டே இருக்கும் என்பதையும் காற்று இருப்பதால்தான் தீ உண்டாகிறது என்ற வேதியியல் கருத்தினையும் அறியமுடிகிறது. காற்று இன்றேல் தீ அணைந்துவிடும் என்பதையும் எண்ணிப் பார்க்க வேண்டும்.

"வறிது நிலைஇய காயமும்" என்பதற்கு எல்லையற்று விரிந்த வானம் என்பது பொருள். வானுக்கு எல்லை இல்லை என்ற அறிவியல் கருத்தினை அது வெளிப்படுத்துகிறது எனலாம்.[451]

## வானவியல்

சங்க கால மக்கள் வானவியல் அறிவும் நிரம்பப் பெற்றிருந்தனர். வெள்ளி விண்மீன் வடக்கிருந்தால் நன்மை; வெள்ளி விண்மீன் வடக்குத் திசையில் தாழ்ந்து காணப்படின் மழை பெய்யும்[452] என நம்பினர். தென் திசையில் தோன்றினால் தீமை. அம்மீன் தென் திசையில் தோன்றினால் வற்கடம் (வறட்சி) உண்டாகும்.[453] அக்காலத்தில் மழை பொய்க்கும். அதே போன்று செவ்வாயும் வெள்ளியும் கூடினால் மழை பெய்யாது.[454] அவ்வாறே வால்வெள்ளி தெற்கில் தோன்றுவதும் சனிமீன் தோன்றுவதும் தீய குறியாகக் கொள்ளப்பட்டது.[455]

## வானவியல் அறிவிப்பின்படி மாந்தரஞ்சேரல் மாளல்

பங்குனி மாதம் முதல் பதினைந்தில் கார்த்திகை நாளில், நிறைந்த இருட்டில் உத்தரம் உச்சியிலிருந்து சாய, மூலம் எழ, மிருக சீரிடம் மறைய ஒரு மீன் வடக்கும் கிழக்கும் போகாமல் இடை நடுவே தீ பரக்க விழுந்தது. அதனைக் கண்ணுற்ற கூடலூர்கிழார், அந்நிகழ்ச்சி நடந்த ஏழாவது நாள் யானைக்கண் சேய் மாந்தரஞ்சேரல் இறக்க நேரிடும் என்று தெரிவிக்க, அதன்படி அவனும் இறந்துவிட்டான்.''[456] என்பதன் வாயிலாகப் பண்டைத் தமிழர் சிறந்த வானவியல் அறிவுப் பெற்றிருந்தனர் என்பது புலப்படும்.

## கதிரவனே ஆற்றலின் தோற்றம்

இயற்பியல், உயிரியல், வேதியியல் வல்லுநர்கள் கதிரவனையே ஆற்றலின் முதலிடமாகக் கருதுகோள் வகுத்துள்ளனர். ஆற்றலை உருவாக்கவோ அழிக்கவோ முடியாது என்றும் அதன் வடிவத்தை மட்டும் மாற்றலாம் என்று ஆய்வுகள் நிகழ்த்தி நிறுவியுள்ளனர். இதனை ஆற்றலின் அழிவின்மை என்றும் விளக்கம் கூறியுள்ளனர். இலக்கியப் படைப்பாளிகள் ஞாயிற்றின் ஆற்றலை அவர்களின் கால எல்லைக்கு அப்பால் சிந்தித்துக் கற்போர்க்கு உணர்த்தியிருக்கின்றனர்.

"உலகம் உவப்ப வலனேர்பு திரிதரு
பலர்புகழ் ஞாயிறு"[457]

"செஞ்ஞாயிற்றுத் தெறல்"[458]

என்பவற்றால் ஞாயிற்றின் அளவற்ற ஆற்றலை அறியலாம்.

உலகம் இருளால் சூழ்ந்துள்ளது. கதிரவன் வருவதால் இருள் நீங்குகிறது. அக்காலத்தைப் பகல் என்கிறோம். இந்த அறிவியல் உண்மையைப் பல நூல்கள் எடுத்துக் காட்டியுள்ளன.[459]

**மலை வழி அறிவியல்**

இமயமலை முன்னொரு காலத்தில் நீருக்குள் அமிழ்ந்து இருந்தது என்றும் பின் வெளிப்பட்டுத் தோன்றியது என்றும் அறிவியல் கூறும். இக்கருத்தினை 'மலைநாறிய வியன் ஞாலத்து'[460] என்னும் சொற்றொடர் புலப்படுத்தும். 'நாறிய' என்ற சொல்லுக்குத் தோன்றிய (தோன்றுதல்) என்பது பொருளாகும். 'தோன்றும் பொருளே மீண்டும் அழியும்' என்ற அறிவியல் கருத்தும் பெறப்படுகிறது.

**மழை பெய்தல்**

மேகம், கடலில் முகந்து மலையில் மழை பொழிகிறது. கதிரவன் ஒளியால் கடல்நீர் ஆவியாகி மேகமாகக் கடலிலிருந்து உருக்கொண்டு பின் மழையாகப் பொழிந்தது"[461] என்பதனை அறியலாம்.

**ஆற்றின் எதிரொலி**

கல்லின் மேல் விழுந்த ஆறுகள் ஆரவாரித்தலால் அவ்வொலி மலை முழைஞ்சுகளிலே எதிரொலித்தது.[462] ஆற்று நீரால் உண்டாகும் ஒலி மலை முழைஞ்சுகளில் மோதி அவ்வொலி மீண்டும் திரும்பின. 'ஒலி அலைகள்

ஒரு பொருளின்மீது பட்டு மீண்டும் திரும்பும்' என்ற அறிவியல் உண்மையை அவர்கள் அறிந்திருந்தனர்.

**கலம் செலுத்துதல்**

இன்றைக்கு விசைப்பொறியால் இயங்கக்கூடிய படகுகளும் கப்பல்களும் உள்ளன. ஆனால் பண்டைக் காலத்தில் விசைப்படகுகள் இல்லை. அப்போது கடலில் கலம் செலுத்துவோர் காற்றின் இயல்பறிந்து பாய்மரத்தைக் காற்றின் திசை அறிந்து நிறுத்திக் காற்றின் போக்கிற்கேற்பத் தாங்கள் விரும்பிய திசையை நோக்கிப் பயணம் செய்தனர் என்பதை,

**"நளியிரு முந்நீர் நாவாய் ஓட்டி**
**வளிதொழில் ஆண்ட உரவோன் மருக"**[463]

என்ற புறப்பாடலால் அறியலாம்.

**உணவு**

சங்க கால மக்கள் மான், ஆடு முதலிய விலங்குகளின் இறைச்சியைத் துண்டுதுண்டாக வெட்டிச் சமைத்து உண்டனர்.[464] சூட்டுக்கோலால் சுடப்பட்ட இறைச்சியைச் சுடச்சுட உண்டனர். அதனால் வியர்வை உண்டாயிற்று.[465] இவ்வியர்வை உண்டாவதற்குக் காரணம், வெப்பமாக உணவு உண்டதனால் உடலின் வெப்பம் அதிகரிக்க, அந்த நிலையிலிருந்து மாறிச் சமமான இயல்பு நிலைக்கு மாறவே வியர்வை உண்டாகிறது.

**மசக்கைப்பெண் மண் தின்னல்**

கருவுற்ற பெண்டிர் மண்ணையும் புளிப்புச் சுவையுடைய பொருள்களையும் விரும்பி உண்பர் என்பதனை,

**"------ நின்நாட்டு**

**வயவுறு மகளிர் வேட்டுனின் அல்லது**

**பகைவர் உண்ணா அருமண் ணினையே"[466]**

என்ற புறநானூற்றுப் பாடல் பகுதியாலும் பிறவற்றாலும் அறியலாம்.

ஆடவனுடைய உயிரணு காரத்தன்மையுடையது என்றும் அது பெண்ணின் கருமுட்டையோடு சேரும்போது அதனை நடுநிலையாக்கவே கருவுற்ற பெண்கள் புளிப்பு, உப்பு, துவர்ப்புச் சுவையுடைய பொருள்களை விரும்பி உண்ணுகின்றனர் என்றும் கூறுவர்.

உயிர் ஊக்கிகளின் சேர்க்கையால் வேதியியல் மாறுபாடு பெண்ணின் உடலமைப்பிலும் உள்ளத்தின் போக்கிலும் ஏற்படுகிறது என்று இன்றைய மருத்துவ அறிவியல் கூறுகிறது. 'பெண்ணின் உடற்கூற்று அமைப்பு ஆடவனின் உடற்கூற்றினின்று வேறுபட்டது' என்னும் அறிவியல் உண்மையை அக்காலச் சான்றோர் அறிந்திருந்தனர் என்பது பெருமைக்கும் பெருமிதத்திற்கும் உரிய செய்தியாகும்.

## நியூட்டனின் விதிகள்

ஒய்வு நிலையிலோ தொடர்ந்த இயக்கத்திலோ இருக்கும் ஒரு பொருளை அதன் நிலையில் மாற்றம் ஏற்படச் செய்யும் ஓர் ஆற்றலை **'விசை'** எனலாம் என்பது நியூட்டனின் முதல் விதியாகும். இதன்படி ஐயூர் முடவனார் அவர்களின்,

**"நீர்மிகின் சிறையும் இல்லை தீமிகின்**

**மன்னுயிர் நிழற்றும் நிழலும் இல்லை**

**வளிமிகின் வலியும் இல்லை"[467]**

என்ற புறப்பாடலின் வழி இயக்கத்தினால் விசை உண்டாகிறது என்னும் கருத்து உரைக்கப் பெற்றுள்ளமை புலப்படும்.

மேலும் இப்பாடல் நீர், தீ, காற்று ஆகிய மூன்றும் உலகை அழிக்கவும் வல்ல ஆற்றல் படைத்தன என்ற கருத்தைப் பெறவும் இடமளிக்கிறது.

**இரண்டாவது விதி**

ஒரு மணித்துளிக்கு எவ்வளவு **'கல்'** என்ற கணக்கீடே வேகம் எனப்படும். எனவே நீரின் இயல்பான வேகத்தில் மாற்றம் ஏற்படுகிறது. அதற்குக் காரணம் விசை என்று சான்றோர் உய்த்துணர வாய்ப்பளித்துள்ளார். இதனை,

**"---------நீர்வழிப் படூஉம் புணைபோல்**
**ஆருயிர் முறைவழிப் படூஉம்"**[468]

என்ற கணியன் பூங்குன்றனார் வெளிப்பாட்டால் உணரலாம்.

**மூன்றாம் விதி**

ஒவ்வொரு வினைக்கும் அதற்குச் சமமான நேர் எதிர்வினை உண்டு என்பதாகும். இதனைப்

**"பிறர்க்கின்னா முற்பகல் செய்யின் தமக்கின்னா**
**பிற்பகல் தாமே வரும்"**[469]

என்ற குறள்வழி அறியலாம்.

**இராமன் விளைவு**

கண்ணின் பார்வைக் கோணத்தை மாற்றுவதால் பொருளின் முழுமையான அளவுகள் தெரிகின்றன என்பதே சர்.சி.வி. இராமனின் அறிவியல் கண்டுபிடிப்பு. 'வையங்காவலர்' எனத் தொடங்கும் புறநானூற்றுப் பாடலில் ஞாயிற்றைப் 'பல்கதிர்'[470] என்ற சொல்லாட்சியால் அழைக்கிறார் கபிலர். 'பல்கதிர்' என்பதற்குப் பல்வேறு வண்ணங்களையுடைய கதிர் எனப் பொருள்கொள்ள வாய்ப்பிருக்கிறது.

வைரத்தின் பார்வைக் கோண வேறுபாட்டினால்தான் அது பளிச்சிடுகிறது. பல்வேறு வண்ணங்களையும் காண்பவர்க்கு விருந்தாகப் படைக்கிறது. முழுமையாகத் தனக்குள்ளேயே ஒளிரும் ஆற்றல் இருப்பதால்தான் அது பளிச்சிடுகிறது என்பது இயற்பியலின் விளக்கம். இத்தகைய சிந்தனையின் முன்னோட்டம் கபிலரின் பாடலில் உள்ளது எனலாம்.

மேலும் புலவர்கள் தாவரவியல் அறிவும் விலங்கியல் அறிவும் நிலவியல் அறிவும் உளவியல் அறிவும் பெற்றிருந்தனர். இதுவரை ஆய்ந்தவற்றால் 'இலக்கியத்தில் அறிவியல் உறுதியாக உண்டு' எனத் தெளியலாம்.

**மனிதநேயம்**

மனம் என்ற சொல்லின் அடியாகவே மனிதன் என்ற சொல் தோன்றியிருக்க வேண்டும். மனத்தை உடையவன் மனத்தன் என்றிருந்து பின்பு மனிதன் என்றாயிருக்கலாம்.[471]

மனிதம் என்பது ஒரு வாழ்க்கை நெறி, மனிதப் பண்புகளைப் போற்றிக் காக்கிற ஒரு நெறி என்பார் க.த. திருநாவுக்கரசு.[473] மேலும் பிற உயிர்களின் மீதும் அன்பு செலுத்துதல் வேண்டும்.

ஆகவே மனிதன் – மனிதனிடத்தும் பிற உயிர்களிடத்தும் காட்டும் அன்பே 'மனித நேயம்' எனப்படும்.

**நட்பில் மனித நேயம்**

ஔவையாரிடம் அதியமான் நட்புப் பூண்டிருந்தான். அதியமான் கடுமுயற்சியால் மலைச்சரிவில் ஒரு நெல்லிக்கனியைப் பெற்றான். அதனை உண்பவர் நீண்டநாள் உயிர் வாழ்வார் எனத் தெரிந்தும் தான் உண்ணாமல் அக்கனியை ஔவைக்கு ஈந்தான்.[473]

**வடக்கிருத்தல்**

கோப்பெருஞ்சோழனும் பிசிராந்தையாரும் ஒருவரை ஒருவர் காணாமலே நட்புக் கொண்டிருந்தனர். கோப்பெருஞ்சோழன் தன் மக்களால் மானத்திற்குக் கேடு உண்டாயிற்றென்று வடக்கிருந்தான். பிசிராந்தையாருக்காகத் தன் பக்கத்தில் ஓரிடம் விட்டுவைத்தான். பிசிராந்தையாரும் அங்கு வந்தார். சோழனுடன் வடக்கிருந்தார். உயிர் துறந்தார்.[474] என்னே! நட்பின் ஆற்றல்! என்னே! மனித நேயம்! இத்தகையோரைக் கண்டே திருவள்ளுவரும் "புணர்ச்சி பழகுதல் வேண்டா உணர்ச்சிதான் நட்பாம் கிழமை தரும்"[475] என்று கூறினாரோ!. ஆகவே நட்பின் பொருட்டு ஓர் அரசனுக்காக ஒரு புலவர் தன்னுயிர் ஈந்ததை அறியலாம்.

மேலும் பொத்தியார் கோப்பெருஞ்சோழன் நட்பும், கபிலர் பாரி நட்பும், நட்பின் மேன்மையைப் பறைசாற்றும்.

**புலவனுக்காகப் புரவலன் தலைதர முன்வரல்**

பெருந்தலைச்சாத்தன் என்னும் புலவர் குமணனிடம் பரிசில் பெறச் செல்கிறார். குமணன் தன் தம்பியால் துரத்தப்பட்டுக் காட்டில் வாழ்கிறான். அவன் தலையைக் கொண்டு வருபவருக்குப் பரிசளிக்கப்படும் என்று அறிவிப்பும் வெளியாயிற்று. பரிசில் பெறப் புலவர் சென்றார். நாட்டில் இருக்கும்போது வந்திருந்தால் பரிசில்கள் தந்திருப்பேன். இப்போது வறிதே இருக்கும்போது என்னிடம் வந்துள்ளாய். உன்னை வெறிதே அனுப்புவது நாடிழந்ததை விட நனி இன்னாதது என்று கூறித் தன் வாளினைப் புலவனிடம் கொடுத்து என் தலையை வெட்டி என் தம்பியிடம் கொடுத்து விலைதனைப் பெறுவாயாக[476] என்று குமண வள்ளல் கூறுகிறான். இதன்மூலம் பெருந்தலைச் சாத்தனாருக்காகக் குமணன் தலையளிக்க வந்தது மனித நேயத்தின் மாண்புடன் புலமையேற்றிய பண்புமாகும்.

**போர் தடுத்தல்**

அதியமானுக்கும் தொண்டைமானுக்கும் போர் மூளும் சூழல் உண்டாயிற்று. போர் ஏற்படின் நிறையப் பொருட்சேதமும் உயிர்ச்சேதமும் ஏற்படுவது உறுதி. ஆகவே அதியமானின் பொருட்டு ஔவையார், தொண்டைமானிடம் தூது சென்று தன் சொல்திறத்தால் அவன் படைக்கலங்களைப் புகழ்வது போல் இகழ்ந்து, போர் மூளுவதை நிறுத்திய பெருமை ஔவையாருக்கே உண்டு.[477] இதனைப் புறம் 95ஆம் பாடல் புலப்படுத்தும்.

நெடுங்கிள்ளி அரணுக்குள் இருக்கின்றான். நலங்கிள்ளி அரணை முற்றுகையிட்டுள்ளான். இருவருக்குமிடையே நடைபெறவிருந்த போரினைத் தடுக்கக் கோவூர்கிழார் சென்று 'நெடுங்கிள்ளியே நீங்கள் இருவரும் ஆத்தி மாலை அணிந்த சோழரே! இருவரும் போரில் வெற்றி பெறுதல் என்பது இயற்கையன்று. யார் தோற்றாலும் தோற்பது நும் குடியே. எனவே போரினைத் தவிருங்கள்'[478] என்று அறிவுரை கூறிப் போர் நடைபெறாமல் தவிர்த்தார்.

**விடுதலை**

சோழன் நலங்கிள்ளிக்கும் நெடுங்கிள்ளிக்கும் பகை இருந்த நேரம். அக்காலை இளந்தத்தன் என்னும் புலவர் நெடுங்கிள்ளியைக் காணச் சென்றார். அவனை நலங்கிள்ளியின் ஒற்றன் எனக்கருதிக் கொல்ல முற்பட்டான் நெடுங்கிள்ளி. அதனை அறிந்த கோவூர்கிழார் நெடுங்கிள்ளியிடம் இவர் ஒற்றர் அல்லர்.

> **"ஓம்பா(து) உண்டு, கூம்பாது வீசி**
> **வரிசைக்கு வருந்தும் இப்பரிசில் வாழ்க்கை"[479]**

எனத் தகும் வாழ்க்கையர் என்று தக்கமுறையில் எடுத்துக்கூறி விடுதலை செய்வித்தார்.

அந்தக் கோவூர்கிழார் மலையமான் திருமுடிக்காரியின் சிறார்களை யானையின் காலில் இட்டு இடறி அழிக்க முற்படும் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவனிடம் சென்று, நீயோ புறாவின் துன்பத்தைப் போக்கிய சிபிச் சக்கரவர்த்தி மரபில் வந்தவன். இச்சிறார்களோ வள்ளலின் பிள்ளைகள். இவர்கள் யானை தம்மை அழிக்கப் போகிறது என்று தெரியாமல் அதனையும் இங்கே கூடியிருக்கும் புதியவரையும் பார்த்து அழுகையும் மறந்து நிற்கின்றனர். ஆகவே யான் கூறவேண்டியதைக் கூறிவிட்டேன். நீ விரும்பியதைச் செய்வாயாக''[480] என்று கூறி அச்சிறார்களைக் காப்பாற்றினார்.

**போரிலும் மனித நேயம்**

போர் தொடங்க இருக்கிறது. முரசறைவோன் முரசு அறைந்து அறிவிக்கிறான். என்னவென்று?

**"ஆவும் ஆனியற் பார்ப்பன மாக்களும்**
**பெண்டிரும் பிணியுடை யீரும் பேணித்**
**தென்புலம் வாழ்நர்க்கு அருங்கடன் இறுக்கும்**
**பொன்போல் புதல்வர்ப் பெறாஅ தீரும்**
**எம்அம்பு கடிவிடுதும் நும்அரண் சேர்மினென**
**அறத்தாறு நுவலும் பூட்கை மறம்''[481]**

என்று கூறும் முகத்தான் பாதுகாப்பான இடத்திற்குச் சென்றுவிடுங்கள் என்று எச்சரிக்கை விடுத்துப் போர் புரியும் அறப்போரில் மனிதநேயத்தைக் காண முடிகிறது.

வெட்சி வீரர்கள் ஆநிரை கவர்ந்து வருகின்றனர். கவர்ந்து வந்த ஆநிரைகளை வீரர்களும், புள்வாய் சொன்ன புலவர்களும், ஒற்றர் ஆகியோரும் பகுத்து எடுத்துக்கொள்ளுதலே பாதீடு[482] என்னும் துறையாகும். இதிலும் கிடைக்கும் பொருள்களைப் பகுத்துப் பயன்பெறும் மனிதநேயம் வெளிப்படுவதைத் தெளியலாம்.

**கொடை**

புரவலர்கள் பரிசிலர்க்கு உணவும் உடையும் பொன்னும் பொருளும் பலபட அளித்துப் போற்றியுள்ளனர் என்பதைச் சங்கப் புறப்பாடல்கள் முழுக்கப் பரக்கக் காணலாம். கொடையில் உயர்ந்த பொருள் யானையாகக் கருதப்படுகிறது. அவ்யானைகளைக் கொடுத்துக்கொண்டே இருக்கின்றானாம் ஆய் அண்டிரன். ஆகவே ஆயைப் பார்த்து உறையூர் ஏணிச்சேரி முடமோசியார்,

**“---------------------- நின்னாட்(டு)**

**இளம்பிடி ஒருசூல் பத்(து) ஈனுமோ?”**[483]

என்று வியப்புடன் வினவுகிறார். வள்ளல்கள் வறியவரின் பசியைப் போக்கி வளமான வாழ்வளித்து மனித நேயம் வளர்த்த செம்மலாக விளங்கினார் எனலாம்.

**மக்களிடம் வரிவசூல்**

குடிமக்களிடம் மன்னன் அளவோடு வரிவசூல் செய்ய வேண்டும்; குடிமக்களை வற்புறுத்தி அறமற்ற முறையில் அரசன் பெற விரும்பினால் அவனுக்கும் அந்நாட்டு மக்களுக்கும் கேடுதான் சூழும் என்பதை யானையும் நெல் வயலையும் வைத்துப் பாண்டியன் அறிவுடை நம்பிக்கு அறிவுரை கூறுகிறார் பிசிராந்தையார். ‘ஒரு மாவுக்குக் குறைந்த நிலமாயினும் அதன்கண் விளைந்த நெல்லைக் கவளம் கவளமாக யானைக்கு ஊட்டினால் பல நாட்களுக்கும் அது வரும்; யானையும் பல நாள் பசியடங்கி இன்புறும். அன்றி, மிகப்பெரிய விளைந்த நிலமாயினும் தன் போக்கிலே யானை சென்று புகுந்தால் அது உண்ட நெல்லினும் அதன் காலடிபட்டு அழிவெய்தியதே மிகுதியாகிவிடும். இதுபோன்று, அறிவுடை வேந்தன் அறநெறி அறிந்து குடிகளிடம் வரி பெற்றால் அவனும் இன்புறுவான் அவன்

